வன்போலவும், இதரயோகிகளைக்காட்டிலும் அதிகமாகச் சமாதி யனுட்டானம் பண்ணுகிறதில் மாச்சரிய முள்ளவன்போலவும், பார்க்கிறபேர்களுக்குத் தோணினலுந் தன்னுடையமனது சொரூபத்தில் விசிராந்தியை யடைந்திருக்கிறபடியினலே ஆகாசம்போலே உள்ளே தான் சொட்சமாயிருக்கிருனே அவன் ஜீவன்முக்தன்.

(6) லோகத்திலே பெத்தனயிருக்கிற புருஷனுக்குச் சாஸ்திரியமாயிருக்கிற கருமத்தைப்பண்ணும்போது நான் கர்த்தாவென்று சின்மாத்திரரா யிருக்கிற பிரத்தியகாத்துமா அகங்காரத்தோடே சேர்க்கப்படுவர் நான் சுவர்க்கத்தை யடையப்போகிறேனென்று சந்தோஷத்தினலே புத்திவிர்த்திசம்பந்தமும் ஆத்துமாவுக்கு வருஞ் சாஸ்திரியகருமத்தைப் பண்ணவிட்டால் நான் கருமத்தைப்பண்ண வில்லையென்று ஆத்துமாவினிடத்தில் அகங்கார சம்பந்தமும் யெனக்குச் சுவர்க்கங் கிடைக்கமாட்டாதென்று விசனத்தினலே புத்திவிர்த்திசம்பந்தமும்வரும். அப்படி முக்தனுக்கு ஆத்தும அகங்காரங்களுக்குத் தாதாத்மிய அத்தியாசமில்லாததினலேயுஞ் சந்தோஷம் விசனமில்லாததினலேயும் யாதொருத்தனுக்குக் கீழ்ச்சொன்ன இரண்டுதோஷமு மில்லையோ அவன் ஜீவன்முக்தன்.

(7) தான் வசவு அடிக்கிறது முதலானதிற் பிரவிருத்தியாததினலே யாதொருத்தனிடத்திலே நின்றும் லோகம் பயப்படவில்லையோ தன்னைக்குறித்து லோகம் வசவு அடி முதலானதி லேற்படாததினலே லோகத்தில் நின்றும் யாதொருத்தன் பயப்படவில்லையோ அவன் ஜீவன்முக்தன்.

(8) ஒருக்கால் துஷ்டன் தூஷணவசவுமுதலானதிற் பிரவிருத்தித்தபோதிலுந் தனக்கு அதின்மூலமாய்ச் சித்தவிகற்பமுண்டாகாதபடியினலே லோகத்தினிடத்தில் நின்றுஞ் ஜீவன்முக்தனுக்குப் பய

மில்லைச் சத்துருமித்துரு மானவமானுதி சம்சாரவிகற்பமில்லாதவ னும் அறுபத்துநாலு கலைக்கியானம் வந்திருந்தபோதிலும் அதில் அபிமானமும் அதின் விவகாரமு மில்லாதவனுயுஞ் சித்தமானது சத்துவமென்று சொல்லப்பட்ட சொரூபத்தோடேயிருந்தாலும் விர் த்தியுண்டாகாததினலே சித்தமில்லாதவனும், முன்பழக்கத்தின லே தியானவிர்த்தியிருந்தாலும் லௌகீகவிர்த்தியில்லாததினலே ஒருசிந்தையு மில்லாதவனும் யாதொருத்தனுண்டோ அவன் ஜீவ ன்முக்தன்.

(9) லோகத்திலே ஒருவன் வீட்டிலே கலியாணம்உச்சவம் முதலானது நடக்கும்போது அவனுக் கிஷ்டனயிருக்கிற பின்னெரு வன் அந்தவீட்டில்வந்து வீட்டுக்காரனுடைய பிரீதியின் பொருட்டு அ வன் காரியத்தையெல்லாந் தான் மேற்போட்டுக்கொண்டு செய்த போதிலும் அந்தவீட்டுக்காரனுக்கு வாநின்ற லாபாலாபத்தினற் பின்னெருவனுக்குச் சந்தோஷம் விசனம் வாராததுகண்டோம். அப்படிப்போலே யாதொருத்தன் பிராரத்தவசத்தினலே வாநின்ற தன்னுடைய காரியத்தில் விவகாரம்பண்ணினபோதிலும் விவேக பெலத்தினலே லாபாலாபசென்னியமாயிருக்கின்ற சந்தோஷ வி ஷாதரூபமான சித்ததர்பத்தை யடையாமல் பரிபூரண பர்மானந்த பரமசீதளமாயிருக்கின்ற பிரமானுசந்தான பெலத்தினலே குளிர் ந்தமனதோடே கூடிக்கொண்டிருக்கிருனே அவன் ஜீவன் முக்தன்.

(10) இப்படிப் பிராரத்தகரும மிருக்குமட்டுக்குஞ் ஜீவன்முக் திச்சுகத்தை யநுபவித்துப்போட்டுப் பிராரத்த நாசத்தினலே வர்த்த மான தேகம்விழுந்துபோகும்போது சலித்துக்கொண்டிருக்கிற வாயு ஒய்ந்துபோகிறப்போலே ஜீவன்முக்தனும் உபாதியினலேவரப்பட் டசமுசாரத்தை விட்டுப்போட்டு நிர்விட்சேப நிராவரண பரிபூரண

பரப்பிரமசொரூபனாக இருப்பன். அப்போ விதேகமுக்தனென்று சொல்லப்படுவான். அந்தவிதேகமுக்தனுக்கு யாதொரு சமுசாரவிகற்பமுங்கிடையாது * இப்படிப்பட்ட விதேகமுக்தனுஞ் ஜீவன்முக்தனுஞ் சுவாநுபவத்திற் சமானனென்று சொல்லியிருப்பதால் ஜீவன்முக்தனுக் கெவ்வளவுக்கெவ்வளவு நிர்விகர்ப்பமுண்டாகிறதோ அவ்வளவுக்கவ்வளவு உத்தமம் இப்படி வாசிட்டத்திலே ‡ ஜீவன்முக்தன் விசேஷமாய்ச் சொல்லப்பட்டான்.

இனிப்பகவற்கீதையின் இரண்டாமத்தியாயத்திற் சொல்லப்பட்ட திடப்பிரக்ஞனைச்சொல்லுகிறோம்.

திடஞானமென்றும் அதிடஞானமென்றும் ஞானமிரண்டுவிதம்.

எப்படியானாற், சோரபுருஷனிடத்திற் பிரீதியுள்ளநாரியானவள் வீட்டுக்காரியமெல்லாம் பண்ணினபோதிலும் அவளுடையபுத்தியந்தச்சோரபுருஷனையே தியானம்பண்ணிக்கொண்டிருக்குமோ வீட்டுக்காரியம் பிரத்தியட்சமாய்ப் பண்ணப்பட்டபோதிலும் அது உடனே மறக்கப்படுமோ அப்படிப்போல அத்தியந்தம் வைராக்கியமுள்ளவனாயுந் தியானப்பியாசபெலத்தினாலே சுவாதீனப்பட்ட சித்தத்தையுடைத்தானவனாயுமிருக்கிற புருஷனுக்குத் தத்துவஞானமுண்டாகும்போது அவனுடையபுத்தியானது நாரியினுடையபுத்தி சோரபுருஷனையே தியானம் பண்ணுகிறதுபோலே நிரந்தரந்தத்துவத்தையே தியானம் பண்ணிக்கொண்டிருக்கும் அந்தஞானந் திடஞானமென்று சொல்லப்படும்.

---

* அப்படிப்பட்ட - என்றும் - பாடம்.

‡ ஜீவன்முக்தன் லட்சணம் விசேஷமாய்ச் சொல்லப்படுகிறது - என்றும் - பாடம்.

வைராக்கியந் தியானப்பியாசம் ஒன்றுமில்லாதவனுக்கு யேதாகிலும் ஒருபுண்ணிய விசேஷத்தினாலே தத்துவஞானமுண்டா னபோதிலும் அவன் புத்தியானது நாரியினுடைய புத்தி வீட்டுக் காரியத்தை மறக்கிறதுபோலே உடனே தத்துவத்தை மறந்துவிடும் அந்தஞானம் அதிடஞானமென்று சொல்லப்படும்.

இப்படியே வாசிட்டத்திலுஞ் சொல்லியிருக்கிறது.

இப்படிப்பட்ட திடஞானத்தை உடைத்தானவனே திடப்பி ரக்ஞனென்று சொல்லப்படுபவன்.

இந்தத் திடப்பிரக்ஞன் காலபேதத்தினாலே சமாகிதனென் றும், உத்திதனென்றும், இரண்டுவிதமாயிருப்பன். இவர்களிரண்டு பேர்களுடைய லட்சணத்தையும் அருச்சுனன் கேட்டான் ஸ்ரீபக வான் சொல்லுகிறார்.

(1) வாராய் அர்ச்சுன யாதொருபுருஷன் எப்போ பாகியமா கியு மாந்தரமாகியு மிருக்கின்ற சகல விஷயங்களையும் விட்டுப்போட் டுத் தன்னிடத்திற் றன்னாலே தானே சொரூபானந்தத்தை யநுப விக்கிறானோ அப்போ, அவன் சமாகிதத்திடப்பிரக்ஞனென்று சொல்லப்படுவன்.

இந்தத் திடப்பிரக்ஞனுக்கு முகப்பிரசாதமாகிய அடையா ளத்தா லறியத்தக்கதான ஓரானந்தமுண்டு அந்த ஆனந்தமானது விஷயங்களைவிட்டுவிட்டபடியினாலேயும் புத்திவிர்த்தி பரமானந்த ரூபமான ஆத்துமசொரூபத்திற் கலந்து லயித்திருக்கின்றபடியினா லேயும் விஷயங்களினாற் கிடைத்ததன்று பின்னையோவென்றால், ஆத்மாவினிடத்திற் கிடைத்ததென் றறியவேண்டும். நிர்விகற்பச மாதியிற் கிடைத்த அந்தஆனந்தஞ் சவிகற்பசமாதியிற்போலப் புத்தி

விர்த்தியினு லறியத்தக்கதன்று பின்னையோவென்றாற், சொப்பிரகாச சித்துரூபரான ஆத்மாவினாலேயே விளங்கும். அந்த ஆனந்தம் புத்தி விர்த்தி ரூபமன்று பின்னையோவென்றால், அந்த விர்த்தியின்சமுஸ் காரரூபமென் றறியவேண்டும்.

(2) வாரா யருச்சுனு யாதொருத்த னெப்போ ஆமையானது தன்னுடைய அவையவங்களைத் தன்னிடத்தி லடக்கின்றாப்போலே சகல இந்திரியங்களையுஞ் சகல விஷயங்களில் நின்றுந் திருப்பித் தன்னிடத்தி லடக்கிக்கொள்ளுகிறானோ அப்போ அவன் சமாகிதத் திடப்பிரக்ஞன்.

உத்திதத்திடப்பிரக்ஞனவதாரென்றாற் சொல்லுகிறோம்.

(1) யாதொருத்தனுக்கு ரோகாதி நிமித்தத்தாற் றுக்கம் வந்தாலும் மூடனானவன் நான் மகாபாவி யென்னைச் சுடவேண்டுமென்று விதனப் படுகின்றதுபோல விதனம்வாராதோ அப்படியே ராஜ்ஜிய புத்திரலாபாதி நிமித்தத்தாற் சுகம் வந்தாலும் மூடனாயிருக்கிறவன் சுகசாதனமான புண்ணியத்தை யனுஷ்டியாமற்றானே முன்வந்த சுகத்துக்குச் சமானமான சுகத்தை யபேட்சிக்கிறதுபோல அபேட்சையும் வாராதோ. காமக்குரோத பயங்களு முண்டாகமாட்டாதோ அவன் உத்திதத் திடப்பிரக்ஞன்.

(2) யாதொருத்தன் ஒருஇடத்திலும் அன்னியாளுடைய லாபாலாபத்தைத் தனதுபோலே தோற்றுவிக்கிற சித்தவிர்த்தியா கியசினேக மன்றியிலேயுஞ் சுகயேதுவான தன்னுடைய ஸ்திரீ புத்திரன் முதலான சுகத்தைக்கண்டு சிலாகிக்காதவனாகியுந் தனக்கு பையை யுண்டுபண்ணுகின்ற அன்னியர்களுடைய வித்தைமுதலான அசுகத்தைக்கண்டு நிந்திக்காதவனாயு மிருக்கிறானோ அவன் உத்தித த்திடப்பிரக்ஞன்.

(3) யாதொருத்தன் விவகாரம் பண்ணும்போது ராகத்துவேஷமில்லாததாயுந் தனக்குச் சுவாதீனமாயு மிருக்கிற இந்திரியங்களோடே கூடினவனாகி விவகாரம்பண்ணுகிறானோ அவனுத்திதத் திடப்பிரக்ஞன்.

இப்படிப் பகவான் அருச்சுனனைப்பார்த்துத் திடப்பிரக்ஞனுடைய லட்சணத்தை வெகுவாய்ச் சொல்லியிருக்கிறார்.

இனிப்பகவற் கீதையின் பன்னிரண்டாமத்தியாயத்திற் பகவற்பக்தன் பகவானாலே வர்ணிக்கப்பட்டிருக்கிறான்.

அதெப்படியென்றால், சர்வபிராணிகளிடத்திலேயுந் துவேஷமில்லாதவனையும், மைத்திரி கருணையுள்ளவனையும், யானெனதென்னப்பட்ட அகங்கார மமகாரமில்லாதவனையுஞ், சுகதுக்கங்களிலேசமனையுஞ், சதாசந்துஷ்டனையுந், திடமாகச் சொரூபநிச்சயத்தையுடைத்தானவனையுஞ், சொரூபத்தைத்தானே யெப்போதுந் தியானம்பண்ணுகின்றவனையுஞ், சத்துருமித்துரு, மானாவமானஞ், சீதோஷ்ணஞ், சுகதுக்கம், முதலான துவந்துவங்களிற்சமனையும், நிந்தையையும், ஸ்துதியையும், சமமாகப்பார்க்கிறவனையும், மௌனியாயும், ஒருயிடத்தில் நியமமாக வாசம்பண்ணாதவனையுஞ், சர்வாத்மாவாயிருக்கிற நம்மிடத்தில் விசுவேதேவோகமென்கிற திடபக்தியை யுடைத்தானவனையும், யாதொருத்தனுண்டோ அவன் நம்முடைய பக்தனென்று அருச்சுனனுக்குப் பகவான் சொல்லியிருக்கிறார்.

சங்கை? முன்முமுக்ஷுத் திசையிற்றானே துவேஷமில்லாமை மைத்திரி கருணை முதலான குணங்கள் ஞானசாதனமாக வேண்டியிருப்பதினாலே அப்போதே யந்தக்குணங்களுண்டே இப்போஜீவன்முக்தனிடத்தில் அந்தக்குணங்களுண்டென்று சொல்லுகிறதில் விசேஷமென்னவென்றாற், சொல்லுகிறோம்.

முன் அந்தக்குணங்கள் புருஷனுடைய முயற்சியினாலே சம்பாதிக்கத் தக்கதுகளாயுஞ்சாதனரூபங்களாயு மிருந்துதுகள் இப்போ ஞானதியான பெலத்தால் முயற்சியன்றியிலேதானே லட்சணங்களாயிருக்கு மென்கின்றதே விசேஷம்.

இந்தப்படி வார்த்திகாசாரியாள் சொல்லியிருக்கிறார்கள்.

இனிப்பகவற்கீதையின் பதினாலாமத்தியாயத்திற் குணாதீதன் பகவானாலே வர்ணிக்கப்பட்டிருக்கிறான்.

அருச்சுனனுடையகேள்வி ? வாரீர் ஏகிருஷ்ண குணாதீதனுக்குப் பிறரால்றியத்தக்கதான லட்சண மென்ன ? அவனுடைய மனதின் சஞ்சாரப் பிரகாரமென்ன ? அவன் யெந்தச்சாதனத்தாற் குணங்களைத் தாண்டினவன் ? சொல்லுமையாவென்று கேட்ட அருச்சுனனைப்பிரீர்த்து ஸ்ரீபகவான் சொல்லுகிறார்.

சுகதுக்கங்கள் அதற்குச் சாதனமான பிரியாப்பிரிய விஷயங்கள் ஸ்துதிநிந்தைகள் சத்துருமித்திராள் மானவமானங்கள் சொன்னமோடுகள் முதலானதுகளிற்சமனாகி யாதொரு முயற்சியுமன்றியிலே வெகுதீரனாய் ஆத்மநிஷ்டனாயிருக்கின்றதே பிறரால்றியத்தக்கதான குணாதீதலட்சணஞ். சத்துவாதிகுணத்திரய விகாரங்களான பிரகாசம் பிரவிருத்தி மோகங்களென்று சொல்லப்பட்ட ஞானம் முயற்சி அவிவேகம் மூன்றுகளுஞ் ஜாக்கிர சொற்பனங்களி லுண்டாகிச் சுழுத்தி சமாதி சூன்யசித்தாவத்தைகளில் நீங்கிப்போகிறதுகள் மூடனாயிருக்கின்றவன் ஜாக்கிரத்திற் றனக்குப் பிரதி கூலமாயுண்டாகிற அந்தப்பிரகாசாதிகளைக்கண்டு துவேஷிப்பன் சூன்யசித்தாவத்தையில் அனுகூலமான பிரகாசாதிகள் நிவிர்த்திக்கும்போது அதுகளை இச்சிப்பன் அப்படி இல்லாம லிரண்டுபேர்கள் சண்டைப்

படும்போ ததற்குச் சாட்சியாயிருக்கிற பின்னொருவன் தனக்குச் ஜெயாபஜெயமில்லாததினாலே உதாசீனனாயிருக்கிறது போலப் பிர காசாதிக ளுண்டாகும்போதும், நிவிர்த்திக்கும்போதும், மயங்கா மற், குணவிகாரங்களானசக்ஷுவாதிகள் குணவிகாரங்களான ரூபா திகளிலே பிரவிருத்தித்ததினாலும், நிவிர்த்தித்ததினாலுஞ், சர்வசாக்ஷி யாய், அசங்கசித்ரூபனாயிருக்கின்ற நமக்கு யாதொருலாபமும் நஷ் டமும் மில்லையென்று உதாசீனமாயிருக்கிறதே குணாதீதனுடைய மனதின் சஞ்சாரப்பிரகாரம். விபசாரமன்றியிலே யிருக்கிற பக்தி யோடேகூடிய ஞான தியானாப்பியாசத்தினாலே சர்வப்பிரத்தியக பின்ன பரமாத்மாவாயிருக்கின்ற நம்மைச் ஸேவைபண்ணுகிறதே சத்துவாதி மூன்றுகுணங்களையுந் தாண்டுதற்குச் சாதனமென்று. பக வான் அருச்சுனனுக்குக் குணாதீதனைச் சொல்லியிருக்கிறார்.

ஸ்ரீ வியாசாதிகளினாலே பிராமணன் வர்ணிக்கப்பட் டிருக்கிறான்.

(1) அதெப்படி யென்றால், அரையிலே கட்டிக் கொள்ளுகிற சோமன் மேலுக்குப் போட்டுக் கொள்கிற உத்தரீய மிரண்டும் இல்லா மற் பாய்முதலான தொன்றுமில்லாத வெறுந்தரையிற் கையைத் தானே தலையணையாக வைத்துக்கொண்டு சயனம் பண்ணுகிறவனா யுங் குப்பையிலே கிடக்கிற கந்தையினாலே கௌபீனாதியைத் தரித் துக்கொண்டவனாயும், பிராரத்தகருமத்தால் வரப்பட்ட பிக்ஷா அன்னத்தினாற் தேகதாரணம் பண்ணுகின்றவனாயுந், தெண்டதாரி யாயுஞ், சதாசேச்ரூபத்தியானபரனாயும், யேகாங்கியாயுஞ், சாந்த னாயும், யாதொரு பிரமக்ஞானியுண்டோ, அவன் பிராமணன்.

இந்த பிராமணன் சரீரஞ் ஜீவித்திருக்கும்பொருட்டுப் போச னம், போர்வை, படுக்கைகளை, யபேட்சித்தபோதிலும், போசனாதி யிலிருக்கப்பட்ட குணதோஷங்களை விசாரிக்கமாட்டான். ஏனென்

ருல் சட்ரசோபேத போசனத்தாலுஞ், சாலுவை சகலாத்து முத லான போர்வையினாலும், அமுசதூலமெத்தை முதலான படுக்கை யினாலும், பசியடங்கிறதுங், குளிர் நீங்கிறதுங், தூக்கம் வருகிறது, மெப்படியோ, அப்படியே பிச்க்ஷா அன்னங், கந்தைதுணி, வெறு ந்தரையிற் படுக்கைகளினாலும், பசியடக்கமுதலானது சித்திக்கும் படியாயிருக்கச்சே,போசனாதியிலே குணதோஷ விசாரம் பண்ணுவது சித்ததோஷமேயன்றியிலே வேறே இல்லை.

இப்படியே பாகவதத்திலு மிதுகுண மிதுதோஷமென்று பார்க்கிறதேதோஷம் இந்தயிரண்டையும் பாராமலிருக்கிறதே குண மென்று சொல்லியிருக்கிறது. ஆனதால், பிரமக்ஞானபெலத்தினாற் சகலசித்ததோஷமும் போயிருக்கிற பிராமணனுக்குப் போசனாதியிலே குணதோஷ விசாரமெங்கே வரப்போகின்றது கிடையாது, இந்தப் பிராமணனுக்குத் தெண்டங் கௌபீன, முதலானதை விட்டுப் போட்டுங், திகம்பரனாய்த், தன்னிச்சைபடி யிருந்துகொண்டு, சொ ரூபானந்தாநுபவத்தி லிருக்கிறதேமுக்கியமானாலுஞ், சாதனசம்பன் னாளாயிருக்கின்ற சாதுக்கள். தன்னுடைய ஆச்சிரமதரும மகிமை யைப் பார்த்துத் தன்னிடத்திற் சிரத்தையோடே கூடினவர்களாகி வேதாந்த மகாவாக்கிய உபதேசம்பெற்றுக்கொண்டு கிருதார்த்தர்க ளாக வேண்டுமென்கிற லோகானுக்கிரக இச்சையினாலே, தெண்ட கௌபீனாதி தாரணமேயொழியத் தனக்குச் சிலபலத்தின் பொருட் டன்று. சிஷனுக் கனுக்கிரகம்பண்ணும்போதிலுந் தியானவிரோத மான அவனுடையகிரக கிருத்தியவார்த்தையைச் சொல்லக்கூடாது. பிரமோபதேசமானது அன்னியவார்த்தை யாகாதபடியினாலே தியா னத்துக்கு விரோதமாகாது. ஆனதாற், பிரமோபதேசங்கூடும். இப் படியே சுருதிகள் கோஷிக்கிறதுகள்.

அதெப்படியென்றால், எஜீவர்களே? ஆத்மா ஒருத்தரையே யறியுங்கோள், மற்ற வீண்வார்த்தைகளை விட்டுவிடுங்கோளென்றுந்,

தீரனுயிருக்கிற புருஷனானவன் முந்தி யாத்மாவைப் பரோக்ஷமாக ச்சிரவணமனனங்களினு லறிந்துகொண்டு பின்பு அப்பிரதிபந்தா பரோட்ச சாக்ஷாத்காரம் வரும்பொருட்டு அந்த ஆத்மாவைத்தானே சதாத்தியானம் பண்ணவேண்டும். வெகுசத்தங்களை விருதாவாகச் சொல்லக்கூடாது. அப்படிச் சொன்னதினுல் வாக்குக்கு வலியும் மனதுக்குக் கிலேசமுமே யன்றியிலே வேறொன்று மில்லையென்றும் இப்படி வெகுவாய்ச் சுருதிகள் கோஷிக்கிறதுகள்.

ஆனதாற் சிஷியனுடைய கிரககிருத்தியவார்த்தை யொன்று ஞ் சொல்லாமற் பிரமஉபதேசம் பண்ணுகிறகாலந்தவிர மற்றக்கால த்திற் சொரூபத்தியானத்தையே பண்ணவேண்டுமென்று சித்தமா ச்சுது. அந்தத்தியானமும் யேகாங்கியா யிருந்தால் நிர்விக்கினமாக நடக்கும். அப்படியில்லாவிட்டால் நடக்கமாட்டாது, ஸ்மிருதியு மி ப்படியே சொல்லுகிறது.

அதேதென்றால், ஒருவனுயிருக்கிற சன்னியாசியே முக்கிய சன்னியாசி. இரண்டுபேர்கள் கூடினுல் ஸ்திரீபுருஷாள், மூன்று பேர்கள்கூடினுல் ஒருகிராமம், நாலுபேர்கள் கூடினுல் ஒருநகரம், இப்படி ஸ்திரீபுருஷாளென்று சொல்லப்பட்ட மிதுனங், கிராமம், நகர, மொன்றையும் பண்ணக்கூடாது. அப்படி பண்ணினு லதி னுற் சன்னியாசிகளுக் கொன்றுக்கொன்று ராஜர்க்களுடைய வார் த்தையும், பிக்ஷையினுடைய வார்த்தையும், வந்துநேரிடும். அதி னுற் தியானங்கெட்டுப்போம் ஆனதால், அச்சன்னியாசியானவன் கூட்டங்கூடாமல் ஏகாங்கியாகவே இருந்து தியானம் பண்ணவேண்டு மென்று ஸ்மிருதி சொல்லுகிறது.

(2) ஒருவரைக்குறித்தும் ஆசீர்வாதம் பண்ணுதவனுயுஞ், சுவார்த்தமாகட்டும், பரோபகாரார்த்தமாகட்டும், ஒரு காரியத்தையு

மாரம்பிக்காதவனும் ஒருவரைக்குறித்து நமஸ்காரம் பண்ணுதவனு யுந், தோத்திரம் பண்ணுதவனும், ஒருகருமமு மன்றியிலே யதிக கெம்பீரனும், யாதொருத்தனுண்டோ அவன் பிராமணன்.

இந்த யிடத்திற் சித்தவிட்சேப யேதுவான நமஸ்காரந் தோத்திரங்கள், நிஷேதிக்கப்படுகிறதே யொழிய சித்தப்பிரசாதயேது வான நமஸ்காரந் தோத்திரங்கள் நிஷேதிக்கப்படவில்லை. அந்தப்படி ஸ்மிருதி சொல்லுகிறது.

அதேதென்றால், சர்வாதிஷ்டானராயிருக்கிற பரமேசுரரான வர் தன்னால் கற்பிக்கப்பட்ட சராசரமானசகல பிரபஞ்சத்திலும் ஆகா சம்போலே பரிபூரணமாக இருக்கிறாரென்கின்ற சர்வசமபுத்தியி னாலே, சண்டாளன், ஊர்ப்பன்றி, கழுதை, குதிரை, யானை, பசு பிராமணன், மரமுதலான சகலத்தையுங் குறித்து தடிபோலே சாஷ்ட்டாங்கமாக நமஸ்காரம்பண்ணலாம். அதினுற் சித்தப்பிரசா தம் உண்டாகுமென்றும். பணக்காரனைக்குறித்து அவனுடைய பணந் தனக்குக் கிடைக்கிறதற்காக வெகு ஆதரவோடேகூட அவனை எப்படித் தோத்திரம் பண்ணுகிறானோ, அப்படிச் சகல ஜகத்கர்த்தா வாயுஞ், சமஸ்த புருஷார்த்த தாதாவாயு மிருக்கிற பரமேசுரனை யாதரவோடே ஸ்துதிபண்ணு நின்ற யெந்தப்புருஷன்தான். இந்தச் சமுசாரபந்தத்தினின்றும் முக்தனாக மீட்டானென்று ஸ்மிருதி சொல்லுகிறது.

ஆனதாற், சித்தப்பிரசாத யேதுவான நமஸ்கார தோத்திரங் கள் பிராமணனுக்குங் கூடும்.

(3) யாதொருத்தன் பாம்புக்கூட்டத்தில் நின்றும் பயப்படு கிறதுபோல ராஜவார்த்தை முதலானதற்கு யேதுவான ஜனக்கூட்

-டத்தில் நின்றும் பயப்படுகிருனோ நரகத்தில் நின்றும் பயப்படுகிறது போல, ஆசத்திக்கு யேதுவாயும், புருடார்த்தவிரோதியாயு மிருக்கிற பூசனையில் நின்றும் பயப்படுகிருனோ, பிணத்தில் நின்றும் பயப்படுகிறதுபோல நிஷித்தமாயும், அசுசிக்கிருப்பிடமாயும் இருக்கிற ஸ்திரீயினிடத்தில் நின்றும் பயப்படுகிருனோ, அவன்பிராமணன்.

ஸ்திரீ யசுசிக்கிருப்பிடமென்கிறதை ஸ்மிருதிசொல்லுகிறது.

அதெப்படியென்ருல், வாயினுற் சொல்லக்கூடாத ஸ்திரீகளுடைய அவயவத்துக்கும், அழுகிச்சொட்டாநின்ற மூக்குப்புண்ணுக்கும், ஒருபேதமு மில்லாவிட்டாலும், மூடனுயிருக்கிறவன், தன்னுடைய மனோவிகாரத்தால், அந்தஸ்திரீகளுடைய யோனிப்பிரதேசத்தை வெகுசுந்தரமாகவும், அதினுல் வெகு சுகங்கிடைக்கிறதாகவும், எண்ணிக்கொண்டு அனியாயமாய்க் கெட்டுப்போகிருனென்றும், ஒருமாமிசத்தோடேகூடினதோ விரண்டுபாகமாய்ப் பிரிக்கப்பட்டு அபானவாயுவினுலும், மலமூத்திரத்தினுலும், வாசனைகட்டப்பட்டுக்கொண்டு, யோனியென்று விவகரிக்கப்படுகிறது, அப்படிப்பட்ட மகாகுணசாலியாயிருக்கிற யோனியில் யெவாள் ரமிக்கிருளோ அந்த மஹா-அரிதானகிருத்தியம் பண்ணுநின்ற பெரியவாளைக்குறித்து அனந்தகோடிநமஸ் காரம் பண்ணவேண்டுமென்றும். இப்படி விநோதமாய் ஸ்மிருதிசொல்லுகிறது.

மூடாளுக்குச் சனங்களோடேகூடின பிரதேசமானது பயம், ஆலசியம், ஒன்று மன்றியிலே வியர்த்தமாகச் சீமைவம்புவளக்கிறதற்குச் சகாயமானதால் அந்த இடம் அவர்களுக்கு வேண்டியிருக்குஞ். சனங்களொருவரும் இல்லாத விஸனப்பிரதேசமானது பயம், ஆலசியம், முதலானதைக் கொடுக்கிறபடியினுலே அந்த இடம் மூடாளுக்கு வேண்டி இராது.

(4) அப்படி இல்லாமல் யாதொருபுருஷனுக்குச் சனங்களோடே கூடின இடந், தியானத்துக்குஞ், சொரூபானந்த அநுபவத்துக்கும், விரோதமாம் ஆனபடியினாலே, சூனியப்பிரதேசம்போலே மனதைக் கிலேசப்படுத்துமோ, அப்படியே ஜனங்கள் ஒருவரும் இல்லாத விஸனப்பிரதேசமானது நிர்விக்கினமாகத் தியானத்துக்குஞ், சோரூபானந்த அநுபவத்துக்கும், அனுகூலமானபடியினாலே யாதொருத்தனுடைய மனதுக்கு அத்தியந்தம் அனுகூலமாகத்தோன்றுமோ அப்படிப்பட்டவன் பிராமணனென்றுபெரியவாள் சொல்லியிருக்கிறார்கள்.

இனிச் சூதசங்கிதையினுடைய முக்திகண்டத்தின் ஐந்தாமத்தியாயத்தில் ஸ்ரீபரமசிவனாலே விஷ்ணுவைக்குறித்துச் சொல்லப்பட்ட அதிவாணாச்சிரமியைச் சொல்லுகிறோம்.

அதெப்படியென்றால், வாருமையா விஷ்ணுவே அதிவாணாச்சிரமியானவன் பிரமச்சாரிமுதலான சகலஆச்சிரமிகளுக்கும் பிராமணாதி சகலவருணங்களுக்கும் யெல்லா அதிகாரிகளுக்குங் குருவாகவேயிருப்பனேயொழிய ஒருவருக்குஞ் சிஷ்யனாயிருக்கமாட்டான். பரமசிவனாயிருக்கிற நாம் யெப்படி யெல்லாருக்குங் குருவோ ஒருவருக்குஞ் சேஷன்அன்றோ. அப்படி அதிவருணாச்சிரமியு மென்றறியும். ஆனதால், அவனே யெல்லாருக்குஞ்சிரேட்டன் அவனுக்குச்சமனாகட்டும் அதிகனாகட்டும் ஒருவனுங் கிடையாது. இதிற்சமுசயமில்லை. அவனுக்கு லட்சணம் எதென்றாற், சொல்லுகிறோம்.

(1) வாரீர் விஷ்ணுவே யாதொருத்தன் சரீரயிந்திரியாதிகளுக்குப் பின்னராயும், அதற்குசாட்சியாயும், அவத்தாத்திரய மில்லாதவராயும், அதற்குச் சாட்சியாயும், யெப்போதும், யெல்லாத்தையும், அறிந்துகொண் டிருக்கிறபடியினாலே, சொப்பிரகாச சித்

துரூபராயும், சத்துரூபராயும், பரமப்பிரீதிக் கிருப்பிடமானபடியி ஞலே ஆனந்தரூபராயுமிருக்கிற பிரத்தியகாத்துமாவை வேதாந்த மகாவாக்கியங்களுடைய சிரவணமனன நிதித்தியாசனங்களிஞலே மாயாதற்காரிய மொன்றுமன்றியிலே சச்சிதானந்த பரிபூரணராயிருக் கிற மகாதேவராகஅறிகிருஞேஅவன் அதிவருணுச்சிரமி.

(2) யாதொருபுருஷன் சண்டாளசரீரத்திலும், பசுமுதலான தின்சரீரத்திலும், பிரமாவினுடைய சரீரத்திலும், பின்னுந் தாரதன்மி யத்தோடே கூடின, சகல சரீரத்திலும், ஆகாசம்போலே யெப்போ தும் யெங்கும் வியாபித்து நிறைந்திருக்கிறவராயும், ஆனபோதிலும், ஒன்ருேடுஞ் சம்பந்தமன்றியிலே அசங்கராயும், நித்திய சுத்த புத்த முத்த சத்திய பரமானந்த சொரூபராயு மிருக்கிற, யாதொருமகா தேவருண்டோ அவரேநாம் நாமேயவரென்று வேதாந்த மகாவாக் கிய சிரவணுதிகளால் ஒரு பிரதிபந்தமும் அன்றியிலே அப்ரோட்ச மாக அறிகிருஞே அவன் அதிவருணுச்சிரமி.

(3) யாதாமொருவன் மாயையிஞலே கற்பிக்கப்பட்ட வருண ஆச்சிரமங்கள் யாதொன்றுஞ் சித்துரூபனுயிருக்கிற நமக்குக்கிடை யாதென்றுஞ், சுவர்ணத்தில், ஆர, கேயூர, கடாகாதிகள், போலவுஞ் சுத்தியில் ரசிதம்போலவும், ரச்சுவிற் சர்ப்பம்போலவும், மாயாகாரிய மான மகதாதிஜகத்து முழுவதும் நம்மிடத்திற் கற்பிக்கப்பட்டதென் றுஞ், சூரியனுடைய சன்னிதானத்தில் உலகஞ்சேட்டிக்கிறதுபோல அந்தச் சகலஜகத்தும், நம்முடைய சன்னிதானத்திற் சேட்டிக்கிற தென்றும், வேதாந்த வாக்கியங்களிஞலே அறிகிருஞே அவன் அதி வருணுச்சிரமி.

(4) யாவனெருவன் விவேகத்திஞலே திக்குப்பிரமை நசித்துப் போனபோதிலுந் திரும்பி ஒருதிக்குப் பின்னெருதிக்காகத் தோற்

றுவதுபோலத் தத்துவஞானத்திஞலே நசித்துப்போன ஜகத்து மறுபடி தோணிஞலும் இது நிஜமாக நமக்குக் கிடையாதென்றுஞ், சொற்பனப்பிரபஞ்சமானது மாயையிஞலே நம்மிடத்தி லெப்படித் தோணுகிறதோ அப்படிச் ஜாக்கிரப்பிரபஞ்சமும் மாயையிஞலே நம்மிடத்திற் தோணுகிறதென்றுஞ், சொற்பனப் பிரபஞ்சமானது நிஜமாக விசாரித்துப் பார்க்கும்போது யெப்படியாஞல் நம்மைக் காட்டிலும் வேறன்ருே, அப்படிச் ஜாக்கிரப்பிரபஞ்சமும், நம்மைக் காட்டிலும் வேறன்றென்றும், வேதாந்த வாக்கியங்களிஞலே அறிகிருஞே அவன் அதிவருணச்சிரமி.

(5) யாதொருத்தனுக்குச் சொரூபஞான பெலத்தால் வருணச்சிரம ஆசாரங்கள் யெல்லாம் நழுவிப்போயிற்ருே யாதொருத்தன் அதுகளை விட்டுப்போட்டுச் சொரூபமாத்திரமாக யிருக்கிருஞே அவன் வருணச்சிரமங்களைத் தாண்டின அதிவருணச்சிரமியென்று சகல வேதாந்திகளிஞலுஞ் சொல்லப்படுவன்.

அக்ஞானம், அதின்காரியம், ஒன்று மொருக்காலுங் கிடையாது, சச்சிதானந்த பரிபூரண பரமாத்துவைதமான பிரமசொரூபமே யெப்போதுமுள்ளதென்று வெகுதிட்மாக அறிந்திருக்கிற அதிவருணச்சிரமிக்கு விதிநிஷேதங் கூட்டுவது தள்ளுவது ஒன்று மொருக்காலுங் கிடையாது. அவனுடைய இப்படிப்பட்ட நிஷ்டையை மூடாள் சருமசக்ஷுவிஞலே யென்னவிதமா யறியப்போருள் அறியவேமாட்டாள். ஆனதால், நிர்த்துவந்துவமாய், நிர்விகாரமாய், நிராகாரமாய், நிரஞ்சனமாய், நிராபாசமாய், நிர்விட்சேபமாய், நிராவரணமாய், நித்தியசுத்தமாய், சச்சிதானந்தமாத்திரமாயிருக்கிற, பிரத்தியகபின்ன பரப்பிரமசொரூபத்தை அதிதிடமாக, நாமென்று அபரோட்சமாக அறிந்திருக்கிற அதிவருணச்சிரமியானவன் சகல வருணச்சிரமிகளான அதிகாரிகளுக்குங் குருவென்கிறதில் யாதொரு

சமுசயமுமில்லையென்று சர்வக்ஞராய் சர்வசமனாய், சர்வஜீவர்களுக்கும் அத்தியந்தம் அனுகூலராயிருக்கிற, ஸ்ரீ பரமசிவனானவர் உத்தமோத்தமாதிகாரியான ஸ்ரீ மகாவிஷ்ணுவைப் பார்த்து வெகுகிருபையினாற் சொல்லியிருக்கிறார். ஆனதாலிப்போது முமூக்ஷுக்களாயிருக்கிற சீவாளானபேர்கள். ஸ்ரீ பரமசிவவசனத்தைச் சத்தியமாக நம்பியெந்தவிதமும் வெகுபிரயாசப்பட்டு முயற்சிபண்ணி வேதாந்த மகாவாக்கிய சிரவணாதிகளாற் கீழ்ச்சொன்னபடி சொரூபசாக்ஷாத்காரத்தை யடைந்து கிருதார்த்தாளாகவேண்டுமேயொழிய வேறே கதிகிடையாது. சத்தியஞ், சத்தியஞ் சத்தியம்.

இந்தப்படி கட்வல்லியாதி சுருதிகளுஞ் ஜீவன்முக்தனைத் தொட்டு அதிவருணச்சிரமிபரியந்தஞ் சொல்லுகிற ஸ்மிருதிகளுஞ் ஜீவன்முக்தி உண்டென்கிறதிற் பிரமாணமென்று சித்தமாச்சுது

## ஜீவன்முக்திக்கிச்சாதனம்.

---

இனிச் சீவன்முக்திக்கிச் சாதனம் ஏதென்கிற மூன்றாங்கேள்விக்குத்தரமான ஜீவன்முக்திக்கிச் சாதனத்தை சொல்லுகிறோம்.

அதேதென்றால், தத்துவஞானம், வாசனாட்சயம், மனோநாசம், மூன்றுஞ் ஜீவன்முக்திக்கிச் சாதனம் அந்தப்படி வாசிட்டத்தில் உபசாந்திப் பிரகாணத்தினுடைய முடிவில் ஸ்ரீ வசிட்டர் சொல்லியிருக்கிறார்.

அதேதென்றால், வாரீர் இராமா தத்துவஞானம், வாசனாட்சயம், மனோநாசம், மூன்றுகளும் வெகுகாலபரியந்தஞ் சமமாக அப்

பியாசிக்கப்பட்டதுகளேயானுற் ஜீவன் முக்தியாகிய பலத்தைக் கொடுக்கும். அப்படி யில்லாமல் ஒவ்வொருகாலத்தி லொன்றென்றாக வெவ்வளவுகாலபரியந்தம் அப்பியாசித்தாலும் அதுகள் அந்தப்பலத்தைக் கொடுக்கமாட்டாதுகள். எப்படியானுல், பஞ்சாக்ஷராதி மந்திரங்களில், முதநாள் ஓரக்ஷரம், மறுநாள் ஓரக்ஷரம், அதற்குமறுநாள் ஓரக்ஷரம், விழுக்காடு எத்தனைகாலஞ் செபித்தாலும் அதுகள் சாஸ்திரத்திற் சொன்னபடி பலத்தைக்கொடுக்கமாட்டாதுகளோ. லோகத்திலே சுறி பருப்பு அன்ன முதலானதுகளில் ஒன்றொன்று கிடைத்ததுகொண்டு வெப்படித் திருப்தி கிடைக்கும்படியான போசனஞ் சித்திக்கமாட்டாதோ. அப்படிப்போல, வெகுகாலபரியந்தஞ் சமமாக அப்பியாசிக்கப்படாத தத்துவஞானதிகளுஞ் சித்தியைக்கொடுக்கமாட்டாதுகள். ஆனதால், இந்த மூன்றுகளையும் வெகுகாலமட்டுக்குஞ் சமமாக அப்பியாசிக்கவேண்டும். அப்படி யப்பியாசித்தால் அதினுற் தாமரைத்தண்டை யொடித்ததினுல் அதுக்குள்ளே யிருக்கப்பட்ட நூலுகள் அறுந்துபோவதுபோல அனுதிகாலத்தைத் தொட்டு வந்த திடமாயிருக்கிற இருதயக்கிரந்திகள், அறுந்துபோய்விடுஞ். சந்தேகமில்லை. அனேக கற்பகோடி காலத்தைத்தொட்டு வரப்பட்ட இந்த சமுசாரவாசனையானது தத்துவஞானதிகளைச் சமமாக வெகுகாலம் அப்பியாசிக்காவிட்டால் ஒருக்காலும் நசிக்கமாட்டாது. இந்தத் தத்துவஞானம், வாசனக்ஷயம், மனோநாசங்கள், மூன்றுகளிலும் ஒன்றுக்கொன்று காரணமானதால், வெகுகாலமட்டுக்குஞ் சமமாகப் பழகாதபோனுல்• இதுகளைச் சாதிக்கிறது நிரம்பவும் வருத்தம்.

இந்த மூன்றுகளுக்குள்ளே இரண்டிரண்டாகச்சேர்ந்து மூன்று துவந்துவமுண்டு. அதில், மனோநாசமும், வாசனக்ஷயமுஞ் ,சேர்ந்து ஒரு துவந்துவ். தத்துவஞானமும், மனோநாசமுங், கூடிப்பின் ஒரு துவந்துவம். வாசனக்ஷயமுந், தத்துவஞானமுங், கூடிமற்றொருதுவந்து

வம். மனோநாச மில்லாவிட்டால் வாசனக்ஷயமில்லை வாசனக்ஷயமில்லை விட்டால் மனோநாசமில்லையென்றும், தத்துவஞான மில்லாவிட்டால் மனோநாசமில்லை மனோநாசம் இல்லாவிட்டால் தத்துவஞானமில்லை யென்றும். வாசனக்ஷய மில்லாவிட்டால் தத்துவஞானமில்லை தத்துவஞானமில்லாவிட்டால் வாசனக்ஷய மில்லை யென்றும். வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறதே இதற்குப்பிரமாணம்.

இதில் யுத்தியேதென்றால்? சொல்லுகிறோம் தீபச்சுவாலையின் பரம்பரைபோலே விர்த்திகளுடைய பரம்பரைரூபமாகப் பரிணமத்தையடைகிறதே மனது. இந்தமனமானது அது இது அப்படி இப்படி அதுகூடும் இதுகூடாது அதுநல்லது இதுபொல்லாது அத்தைப்பண்ணவேண்டும் இத்தைவிடவேண்டுமென்று இது முதலானதை மன்னம் பண்ணுகிறபடியினாலே இதற்குமனதென்றுபெயர்.

இந்தமனதினுடைய நாசமாவதேதென்றால்? விர்த்திரூப்பரிணமத்தை விட்டுப்போட்டு நிரோதாகாரமாகப் பரிணமிக்கிறதே மனோநாசம்.

இந்தப்படி பதஞ்சலிபகவான் யோகசாஸ்திரத்திற் சூத்திரம் பண்ணியிருக்கிறார்.

அதினுடைய அர்த்தத்தை மேலே விஸ்தாரமாகச் சொல்லப்போகிறோம்.

வாசனையாவதேதென்றால்? முன்பின் ஒன்றையும் ஆலோசியாமற் சீக்கிரத்திலுண்டாகாநின்ற குரோதாதிவிர்த்திக்கேதுவான சித்தத்தினுடைய சூக்ஷ்மஅவத்தையாகிய சமஸ்காரமானது வாசனையென்றுசொல்லப்படும். இந்தவாசனை அனாதிகாலத்தைத் தொட்டு இருதயத்தில் வசிக்கிறபடியினாலே யிதற்குவாசனை யென்று. பெயர்

இதினுடைய க்ஷயமாவதேதென்றால்? விவேகசென்னியமா யிருக்கிற சாந்தியாதிவாசனை திடமாகும்போது பாகிய நிமித்தத்தி னாலே குரோதாதிவிர்த்தியுண்டாகாம லிருக்கிறதே வாசனக்ஷயம்.

இப்படியா யுள்ளளவில் விர்த்திகளுடைய அடக்கமாகிய மனோநாசமில்லாவிட்டால் விர்த்திகளுண்டாகும்போது ஒருக்காற் பாகிய நிமித்தத்தாற் குரோதாதியுண்டாகும் ஆனதால், வாசனக்ஷய மில்லை. அப்படியே வாசனக்ஷயம் இல்லாதபோது விர்த்திகள் மேன் மேலுண்டாகும் ஆனதால், மனோநாசமில்லை. இப்படி மனோநாச வாசனக்ஷயத் துவந்துவத்தில் யுத்திசொல்லப்பட்டது.

தோணுகின்ற ரூபமாதியான சகலஜகத்தும் பரமார்த்தமாகப் பிரத்தியகபின்ன பரப்பிரமசொரூபம். இந்தச்ஜகத்து வேறாகத்தோ ணினபோதிலும் மாயாமயமானதால் எதார்த்தமாக இல்லவே இல்லை யென்கிற நிச்சயமே தத்துவஞானம். இது எதார்த்த தத்துவத்தை அறிகிறபடியினாலே இதற்குத் தத்துவஞானமென்று பெயர்.

இந்த்ஞானம் யெப்போ சித்திக்குமென்றால்? தோணுகின்ற நாமரூபப் பிரபஞ்சமெல்லாம் யெப்போ சச்சிதாநந்தசொரூபமாகத் தோணுகிறதோ அப்போது சித்திக்கும். இப்படிப்பட்ட தத்துவஞா னமில்லாதபோது ரூபரசாதிவிஷயங்கள் சத்தியமென்கிறபிரமை திடமாயிருக்கும். ஆனதால், அந்த ரூபரசாதி கோசரவிர்த்திகள் விறகு போடப்போட அக்கினிச்சுவாலை நசியாததுபோல நசிக்கமா ட்டாதுகள். ஆனபடியினாலே, தத்துவஞானம் இல்லாவிட்டால் மனோநாசமில்லை. அப்படியே மனோநாசம் இல்லாதபோது விர்த்திக ளினாலே ரூபரசாதி விஷயங்கள் கிரகிக்கப்படும் ஆனதாற், பிரமத்தை த்தவிர வேறொன்றுமில்லை பிரமமேயிருக்கிறதென்கின்ற தத்துவஞா னமுண்டாகமாட்டாது. இப்படித் தத்துவஞான மனோநாசத் துவந்துவத்தில் யுத்திசொல்லப்பட்டது.

குரோதாதிவாசனைகள் நசியாதபோது சாந்தியாதிவாசனை இல்லாதபடியினாலே தத்துவஞான முண்டாகமாட்டாது. அப்படியே பரமாத்துவைதமான பிரமசொரூபமேயெல்லாம் அதுவேநா மென்கிற தத்துவஞானம் இல்லாவிட்டாற் குரோதாதிவாசனைக்கி நிமித்தமான பரிகியவிஷயஞ் சத்தியமென்கிறபிரமை போகாததினாலே வாசனைக்ஷயம் இல்லையென்கிறதே வாசனைக்ஷய தத்துவஞானத் துவந்துவத்தில் யுத்தி.

இப்படி இந்த மூன்று துவந்துவங்களுக்கும் வாசிட்டத்திற் சொன்னபடி விதிரேக முகமாக அன்னியோன்னிய காரணத்துவமும் யுத்தியுஞ் சொல்லப்பட்டுது.

இனி அன்னுவயமுகமாக இந்த மூன்றுதுவந்துவங்களுக்கும் ஒன்றுக்கொன்று காரணத்துவமுண்டென்கிறதில் நாம் யுக்திசொல்லுகிறோம். அதேதென்றால்? மனோநாசம்வந்தால் வாசனையைக் கிளப்பிவிடுகிறதில் நிமித்தமானபாகியவிஷயந் தோணாதபடியினாலே வாசனை க்ஷயித்துப்போம் அப்படியே வாசனைக்ஷயித்தால் ஏதுவில்லாததினாற் குரோதாதிவிர்த்தி யுண்டாகமாட்டாது. ஆனதால், மனது நசிக்கும். இது மனோநாச வாசனைக்ஷயத் துவந்துவம்.

அகண்டாகாரவிர்த்தியொன்றினாலே பிரத்தியகபின்ன பிரமசொரூபத்தை அறியவேண்டுமென்று சுருதியிற்சொல்லியிருக்கிறபடியினாலே பிரமாகாரவிர்த்தி யொன்றைத்தவிர மற்றசகலமனோவிர்த்தியின் நாசம்வந்தால் தத்துவஞானமுண்டாகும் அப்படியே தத்துவஞானம்வந்தால் மித்தியாரூபமான ஜகத்திற் சசசிருங்கத்திற்போல விர்த்தி யுண்டாகாதபடியினாலும் ஆத்மசொரூபம் அறியப்பட்டுப்போனபடியால் மறுபடி விர்த்திக் குபயோகமில்லாதபடியினாலும் விறகில்லாத அக்கினிபோல மனது நசித்துப்போம். இது மனோநாச தத்துவஞானத் துவந்துவம்.

சத்துருவிடத்திலும், மித்துருவிடத்திலும், பெந்துவிடத்தி லுந், தன்னுடையதேகத்திலும், பின்னும், உத்தமம், மத்திமம், அத மங்களாயிருக்கிற உபாதிகளிலுஞ், சமமாயிருக்கிற ஆத்மா ஒருத்தர். அவரே நாமென்று திடஅபரோக்ஷஞானமுள்ளவனுக்குத் தன்னுடைய சரீர அவயவத்திற்போலப் பிறருடைய சரீரத்திலும் யேன் கோபம் வரும் வரமாட்டாதென்று வார்த்திகாசாரியாள் சொல்லியிருக்கிறபடியி னுலே தத்துவஞானம் வந்தால் வாசனைக்ஷயிக்கும் அப்படியே குரோ தாதிவாசனுக்ஷயரூபமான சாந்தியாதி வந்தால் தத்துவஞான முண் டாகும். இதுவாசனக்ஷய தத்துவஞானத் துவந்துவம்.

இந்தத்தத்துவஞான வாசனக்ஷய மனோநாசங்களுக்குச் சாத னத்தை ஸ்ரீவசிட்டர் சங்கிரகித்துச் சொல்லியிருக்கிறார்.

அதெப்படியென்றால்? வாரீர் இராமா தத்துவஞானத்துக்குச் சிரவணாதி சாதனம். வாசனக்ஷயத்துக்குப் பிரதிகூலவாசனையின் பழக்கஞ் சாதனம். மனோநாசத்துக்குத் தியானஞ் சாதனம். ஆன படியினால் இத்தன்மைத்தென்று பிரித்தறிந்துகொண்டு சகல போகா சையையுந் தூரத்தில் விட்டுப்போட்டு யெவ்வருத்தப் பட்டாகிலும் யெந்த உபாயத்தாலாகிலும் இந்தமூன்றையுஞ் சம்பாதித்துப்போடு வோமென்கிற உச்சாகமாகிய முயற்சியை நடுவிலே விட்டுவிடாமற் றிடமாகப் பலன்கிடைக்கும் வரைக்கும் பண்ணுவதே தத்துவஞா னுதி மூன்றுங் கிடைக்கிறதற்குச் சாதனம். போகேச்சைக்கிக் கொஞ்சமாகிலும் இடங்கொடுத்தால் நெய் முதலானதால் அக்கினி மேன்மேல் சொலித்து விருத்தியடைவதுபோலப் போகாசை யும் மேன்மேல் விருத்தியடையுமேயொழிய ஒருக்காலும் நாசத்தை யடையமாட்டாது. ஆனதாற் போகாசையைக் கொஞ்சங்கூட இல் லாமற்றூரத்தில் விட்டுப்போட்டு இந்தமூன்றையுஞ் சாதிக்கவேண்டு மென்று ஸ்ரீ வசிட்டர் சொல்லியிருக்கிறார்.

சங்கை? முன்னேயே விவிதிஷா சந்நியாசத்துக்குத் தத்துவஞானம் பலம் வித்துவச் சந்நியாசத்துக்குச் ஜீவன்முக்தி பலமென்று கிரமஞ் சொல்லப்பட்டதே அப்படியாயுள்ளளவில் முந்தி விவிதிஷா சந்நியாசத்தினாலே தத்துவஞானஞ் சம்பாதித்துக் கொண்டு பின்பு வித்துவச்சந்நியாசம் பண்ணிக்கொண்டு பந்தரூபங்களான வாசனை மனோவிர்த்திகளுடைய நாசத்தைச் ஜீவித்திருக்கிற புருடன் ஜீவன்முக்தியின்பொருட்டுச் சம்பாதிக்க வேண்டுமென்று அர்த்தந் தோணுகிறதே இப்போ இவடத்திற் றத்துவஞானாதி மூன்றையுஞ் சமகாலத்தில் அப்பியாசிக்கவேண்டுமென்று நியமம் பண்ணப்படுகிறதே ஆனதால், முன்னுக்குப் பின்விரோதம் வருகிறதேயென்றால்? அப்படி விரோதம் வரவேண்டியதில்லை யேனென்றால்? விவிதிஷா சந்நியாசிக்கித் தத்துவஞானம் பிரதானமாக அப்பியாசிக்கத்தக்கது வாசனைக்ஷயம் மனோநாசங்கள் அப்பிரதானமாக அப்பியாசிக்கத்தக்கதுகள். வித்துவச் சந்நியாசிக்கி வாசனைக்ஷயம் மனோநாசங்கள் பிரதானமாக அப்பியாசிக்கத் தக்கதுகள். தத்துவஞானம் அப்பிரதானமாக அப்பியாசிக்கத்தக்கதென்று நியமமானபடியினாலே இரண்டுவித சந்நியாசிகளுக்குந் தத்துவஞானாதிகளைச் சமமாக அப்பியாசிக்கிறதில் யாதொரு விரோதமுமில்லை.

சங்கை? தத்துவஞானமுண்டான மாத்திரத்தினாலேதானே கிருதார்த்தனானவனுக்கு மேற்பழகத்தக்கதான வாசனைக்ஷய மனோநாசங்களுடைய அப்பியாசப்பிரயாசத்தா லென்னபலமென்றால்? அதற்குச் சமாதானஞ் ஜீவன்முக்திக்கிப் பிரயோஜனஞ் சொல்லும்போது சொல்லப்போகிறோம்.

சங்கை? தத்துவஞானம் வஸ்துதந்திரமானதாற் கருமத்தைப்போல பண்ணுகிறதற்கும் பண்ணாமலிருக்கிறதற்கும் பின்னொருவிதமாகப் பண்ணுகிறதற்கும் யோக்கியமாகாதபடியினாலே வித்துவச்

சந்நியாசிக்கி அப்பிரதானமாகத்தான் தத்துவஞான அப்பியாசம் யெப்படிக்கூடுமென்றால்? யேதாகிலும் ஒருவழியாற் றிரும்பித்திரும் பித் தத்துவத்தை நினைக்கிறதே தத்துவ ஞான அப்பியாசமென்றுத் தரம்.

இந்த அப்பியாசம் வாசிட்டத்தில் லீலோபாக்கியானத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. அதெப்படியென்றால் ? சிஷியனுக்கு வேதா ந்தசாஸ்திரத்தின் அர்த்தத்தைப் பாட்ஞ்சொல்லுவதும், தான்தானே மனனம்பண்ணுவதும் , யோக்கியாளான சாதுக்களோடே யொன்று க்கொன்று சொரூபவிசாரஞ்செய்வதும், யேகாந்தத்தில் நிதித்தியா சனம்பண்ணுவதும், பிரமாப்பியாசமென்று சொல்லப்படும். இதம் விர்த்திக்கிவிஷயமான ஆகாசாதிபாகியப் பிரபஞ்சமும், அகம்விர்த்தி க்கிவிஷயமான அகங்காராதி ஆந்திரப்பிரபஞ்சமும், சிருஷ்டியாதியி லேயே உண்டாகவில்லை. ஆனதால், இப்போ எங்கேயிருக்கும் இனி மேற்றான் யெப்படியிருக்கப்போகிறது காலத்திரயத்திலுந் திரிசியப் பிரபஞ்சம் இல்லவேயில்லையென்றுபழகிறநிச்சயமும் பிரமாப்பியா சமென்று சொல்லப்படுமென்று லீலைகதையிற் சொல்லியிருக்கிறது.

சங்கை? அந்தலீலைகதையிற்றானே வாசனக்ஷய மனோநாச அப்பியாசங்களையுஞ் சொல்லியிருக்கிறதே இப்படித் தத்துவஞானாதி மூன்றுகளுடைய அப்பியாசங்களையுஞ் சரியாகச்சொல்லி யிருக்கச் சே இதுபிரதானமென்றும் இது அப்பிரதானமென்றும் நியமம் எப் படிக்கூடுமென்றால்? கூடலாமே எனென்றால்? முமூக்ஷுவா யிருக் கிற புருஷனுக்குச் ஜீவன்முக்தியென்றும், விதேகமுக்தியென்றும், இரண்டு பிரயோஜனமுண்டன்றோ அந்தப் பிரயோஜனனுசாரமாக இது பிரதானமென்றும், இது அப்பிரதானமென்றுந், தத்துவஞானாதி களுக்குநியமங்கூடும். அதெப்படி யென்றால்? சொல்லுகிறேன் ஜீவித்திருக்கிற புருஷனுக்குத் தெய்வசம்பத்தால் மோக்ஷமென்றும்,

அசுரசம்பத்தாற் பந்தமென்றும். பகவற்கீதையின் பதினாறுமத்தியாயத்திற் பகவான் சொல்லிப்போட்டந்த அத்தியாயத்திற்றானே இரண்டுவித சம்பத்துக்களையுஞ் சொல்லியிருக்கிறார்.

அதிற் பயமில்லாமை, சித்தசுத்தி, ஞானசாதனமான தியான நிஷ்டை, தானம், இந்திரியநிக்கிரகம், நிஷ்காமமாயனுஷ்டிக்கிறயாகந், தன்தன்வேதாத்தியயன கிருச்சிராதிதவசு, உள்ளும் வெளியுமொத்திருக்கிறநட்பு, இமிசையில்லாமை, பொய்யில்லாமை, கோபமில்லாமை, ஆசையில்லாமை, சந்நியாசஞ், சாந்தி, கோட்சொல்லாமை, பிராணிகளிடத்திற்றயை, குளிர்ந்தவார்த்தை, யெவ்வளவுதான்தருமஞ்செய்தபோதிலும் அகங்காரமன்றியிலே நாஞ்செய்ததெவ்வளவென்று வெட்கம், சுகம்வந்தாலும், துக்கம்வந்தாலுஞ், சாஸ்திரசென்னியவிவேகத்தாற் சித்தமசையாமலிருப்பது, நல்லசரீரகாந்தி, குரோதம்வந்தாலும் அதைஅடக்குவது, சாஸ்திரீயகாரியத்திற் றைரியம்,மண்ஜலம் முதலானதாற்பாகியசௌசம், விவேகத்தினால் ராகத்துவேஷாதிகளுடைய நிவாரணமாகிய ஆந்தரசௌசம், ஒருவரைக்குறித்துந் துரோகமில்லாமை, நமக்குச்சரியாரென்கிற அகங்காரமில்லாமை, இதுமுதலானநற்குணங்கள் தெய்வசம்பத்து.

ஒருவனுடைய திரவியமுதலானதையபகரிக்கிறதின் பொருட்டுக்கருமிபோலவும், உபாசகன்போலவும், ஞானிபோலவும், அபினயம்பண்ணுவதாகிய டம்பம், அடங்காத அகங்கார கெறுவம், காமங், குரோதம், லோபம், அவிவேகம், நித்திரை, ஆலசியம், பயம், மைதுனம், இதுமுதலானதுற்குணங்கள் அசுரசம்பத்து.

இந்த அசுரசம்பத்துக்குள்ளே நரகத்துக்குத் துவாரமாகவுந் தன்னை அத்தியந்தங்கெடுத்துப் போடுகிறதாகவும் இருக்கப்பட்டது ராகந், துவேஷம், லோபம், மூன்றுமேயென்று பகவான்சொல்லியிருக்கிறார்.

இந்த விரண்டுவிதசம்பத்துக்குள்ளே சாஸ்திரத்திற் சொன்னபடி முயற்சியினுற் சம்பாதிக்கப்பட்ட தெய்வசம்பத்தாகிய சத்துவாசனையினுலே அசுரசம்பத்தாகிய துர்வாசனையை நாசம்பண்ணினுற் ஜீவன்முக்திச் சுகங்கிடைக்கும். வாசனுக்ஷயம்போலே மனுேநாசமுஞ் ஜீவன்முக்திக்கேது. அந்தப்படி சுருதிசொல்லுகிறது.

அதெப்படியென்றுல்? மனுஷியாளுக்கு மனதே பந்தத்துக்கும், மோக்ஷத்துக்குங், காரணஞ். சத்தாதிவிஷய ஆசையோடே கூடினமனது பந்தகாரணம். அந்தஆசையில்லாதமனது மோக்ஷகாரணம். யாதொன்றினுலே விஷயாசையைவிட்டமனதே மோக்ஷகாரணமோ. ஆனதால், முமுக்ஷுவானவன் தினந்தோறுந் தன்னுடையமனது விஷயாசையைவிட்டுநீங்கும்படி செம்மையாய் முயற்சி பண்ணவேண்டும். வைராக்கியத்தோடேகூடின தியானுப்பியாசத்தினுலே நிரோதிக்கப்பட்ட மனதானது யெப்போ ஒருவிஷயமனனமுமன்றியிலே பரமானந்தருபாயிருக்கிற ஆத்மாவினிடத்திலே பாலிலேவிட்டஜலம்போலே யேகரசமாக ஐக்கியத்தையடைகிறதோ அப்போ அந்தமனது நசித்தமனதென்று சொல்லப்படும். எவ்வளவு காலமட்டுக்கும் பழகினதினுலே மனதாத்மாவினிடத்திலே லயிக்குமோ அவ்வளவுகாலவரைக்கும் வைராக்கியதியானுப்பியாசங்களைவிடக்கூடாது. ஆத்மாவினிடத்திலே மனதுலயிக்கிறதே தியானபலமானஞானம். அதுவேமோக்ஷம். மற்றதெல்லாம் இப்போசொன்ன நியாயத்துக்கு விஸ்தாரமேயொழிய, வேறேயில்லையென்று சுருதிசொல்லுகிறது. ஆனதால், மனுேநாசமுஞ் ஜீவன்முக்திக்கேதுவென்று சித்தமாச்சுது.

தீவிரபந்தமென்றும், மிருதுபந்தமென்றும், பந்தம் இரண்டுவிதம். அதில்அசுரசம்பத்துச்சாக்ஷாதுதுக்கயேதுவானபடியினுலே

தீவிரபந்தம். தொய்தமாத்திரந்தோற்றஞ் சுயந்துக்கரூபமாகாதபடி யினாலேயும், அசுரசம்பத்தை யுண்டுபண்ணுகிறபடியினாலேயும், மிருதுபந்தம். இதில் வாசனுக்ஷயத்தாற் றீவிரபந்தமாத்திரம் நீக்கப்படும். மனோநாசத்தால் இரண்டுவிதபந்தமும் நீக்கப்படும்.

சங்கை? ஆனால், மனோநாசமேபோதும் வாசனாக்ஷயம் வேண்டாமென்றால்? அப்படிக்கூடாது ஏனென்றால்? போகேதுவான பிரபல பிராரத்தத்தால் மனது சமாதியைவிட்டு வெளியில்வரும்போது வரப்பட்ட தீவிரபந்தத்தைத் நீக்குகிறதற்காக வாசனாக்ஷயமும் வேண்டும்.

சங்கை? போகேதுவான பிரபல பிராரத்தந் தன்பலமான போகத்தைக்கொடுக்க யேற்படும்போது வாசனாக்ஷயத்தாற் றீவிரபந்தந்தான் எப்படி நிவிர்த்திக்கும் அந்தத்தீவிரபந்தமும் போகமன்றோ ஆனதால், வாசனாக்ஷயம் வியர்த்தந்தானேயென்றால்? வியர்த்தமன்று யேனென்றால்? ருமதவிர்த்திகள் தீவிரபந்தஞ் சாத்திக ராசதவிர்த்திகளிரண்டும் போகமென்று நியமமானதால் வாசனாக்ஷயத்தாற் றீவிரபந்தத்துக்கு நிவிர்த்தியுங்கூடலாந் தொய்தமாத்திரத்தோற்றமாகிய மிருதுபந்தத்தாற் போகமுங்கூடலாம் ஆனபடியினாலே வாசனாக்ஷயஞ் ஜபலந்தான்.

சங்கை? இப்படிப்பாயுள்ளளவில் மிருதுபந்தத்தையும் ஒப்புக்கொள்ளவேண்டியிருப்பதாற் றீவிரபந்தம் வாசனாக்ஷயத்தினாலேதானே நீக்கப்பட்டுப் போகிறபடியால் மனோநாசம் வியர்த்தமென்றால்? அதுகூடாது. ஏனென்றால்? றற்பலபிராரத்தத்தால் வரப்பட்டதாயும் அவசியம் புசிக்கத்தக்கதன்றியிலேயுமிருக்கிற போகத்தை நீக்குகிறதற்காக மனோநாசமும் வேண்டும் இந்தப்படி ஜீவன்முக்தியைக்குறித்து வாசனாக்ஷய மனோநாசங்கள் சாக்ஷாது சாதனங்களானபடியி

ஞலே பிரதானமென்றுந், தத்துவஞானமானது இந்தவிரண்டுகளையு முண்டுபண்ணுகிறதிற் சாக்ஷாது சாதனமானதாலுஞ், ஜீவன்முக்தி யைக்குறித்துப் பரம்பரைசாதனமானதாலும், அப்பிரதானமென்றுஞ் சித்தமாச்சுது. ஜீவன்முக்திக்கி வாசனக்ஷயம் மனோநாசங்கள் எப் படி முக்கியசாதனங்களோ அப்படி விதேகமுக்திக்கித் தத்துவஞா னஞ் சாக்ஷாது சாதனமானதால் முக்கியசாதனம் வாசனக்ஷயம் மனோநாசங்கள் தத்துவஞானத்தில் சாக்ஷாது சாதனமானதாலும், விதேகமுக்தியைக்குறித்துப் பரம்பரைசாதனமானதாலும், அமுக்கிய சாதனமென்றிப்படி யிரண்டுவிதமுக்திகளாகிய பிரயோசனங்களை யனுசரித்துத் தத்துவஞானாதிகளுக்குப் பிரதானத்துவமும், அப்பிர தானத்துவமுஞ், சித்திச்சுது. இந்த விதேகமுக்தி அப்பிரதிபந்த அப ரோக்ஷமான ஞானம் எப்போ உண்டாகிறதோ அப்போ சித்திக்கும். அந்தப்படி பாஷியக்காருள் சூத்திரபாஷியத்திற் சொல்லி யிருக் கிறுள்.

சங்கை? வர்த்தமானதேகம் விழுந்துபோனபின்பு விதேக முக்தியென்று வெகுபேர்கள் சொல்லுகிறுர்கள் அந்தப்படி சுருதி ஸ்மிருதி இதிகாசபுராணங்களிலேயுஞ் சொல்லியிருக்கிறதே அப்ப டியிருக்க நீரிங்கே ஞானமுண்டாகிறகாலத்திலேதானே விதேகமு க்தியென்று சொல்லுவதெப்படிக்கூடுமென்றுல்? இரண்டுமதமுங் கூடும்படி சமாதானஞ் சொல்லுகிறோம்.

அதேதென்றுல்? விதேகமுக்தியென்பது தேகமன்றியிலே யிருக்கின்றமோக்ஷம். அந்தவிதேகமுக்தி ஒருதேகமுமில்லாதகால த்திற் சித்திக்கத்தக்கதென்கிற அபிப்பிராயத்தால் வெகுபேர்கள் வர்த்தமானதேகம் விழுந்துபோனபின்புதான் விதேகமுக்தியென்று சொன்னுர்கள். வரப்போகிறதேகமன்றியிலே யிருக்கப்பட்ட முக்தி யே விதேகமுக்தியென்கிற அபிப்பிராயத்தால் ஞானசமகாலத்தில்

விதேகமுக்தியென்று நாமேசொன்னேம் ஆனதால் இரண்டுமெதமுங் கூடும். வரப்போகிற தேகத்தை நிவிர்த்திபண்ணுகிறதற்காகவே ஞானத்தின் சம்பாதனமானபடியினலே நாமேசொன்னபடி மேல் வரப்போகிற தேகமில்லாத மோக்ஷமே விதேகமுக்தியென்று சொல்லவேண்டும்.

வர்த்தமானதேகம் ஞானத்துக்குமுன் ஆரம்பிக்கப்பட்டபடியினலே அது ஞானத்தால் நிவிர்த்திக்கப்படமாட்டாது. அக்ஞானிகளுக்குக்கூட பிராரத்தகருமம் நசித்தஉடனே வர்த்தமானதேகம் நீங்கிப்போகிறபடியினலே அந்தத்தேகத்தின் னிவிர்த்தி ஞானபலமென்று சொல்லக்கூடாது.

சங்கை? ஆனல், வர்த்தமானலிங்கதேகநிவிர்த்தி ஞானபலமாகட்டுமென்றல்? ஞானம்வந்தபோதிலுஞ் ஜீவன்முக்தாளுக்கு லிங்கதேகநிவிர்த்தி வாக்காணுதபடியினலே அந்தசங்கை கூடாது.

சங்கை? ஞானஞ் சிலகாலம் பிராரத்தகருமத்தால் பிரதிபந்திக்கப்பட்டதுகொண்டு லிங்கதேகநிவிர்த்தியைப் பண்ணுதேபோனலும் பிரதிபந்தமான பிராரத்தம் நசித்தவுடனே அதினுடைய நிவிர்த்தியைப் பண்ணுமென்றற்? பஞ்சபாதிகாசாரியாள் ஞானம் அக்ஞானத்தையே நிவிர்த்திபண்ணுமென்று சொல்லியிருக்கிறபடியினலே அந்திச்சங்கையுங்கூடாது. ஆனதால், லிங்கதேகநிவிர்த்திக்கிச் சாதனமேதென்றற்? சாமக்கிரியினுடையநிவிர்த்தியென்று சொல்லப்படும். ஒருகிரியத்தை நிவிர்த்திபண்ணுகிறதற்குச் சாதனம் விரோதியினுடைய இருப்பென்றுஞ், சாமக்கிரியின் னிவிர்த்தியென்றும், இரண்டுவிதம். அதெப்படியென்றல்? விரோதியான வாயுவினுடைய இருப்புனலும், எண்ணை திரிமுதலான சாமக்கிரியின் னிவிர்த்தியினலும், தீபமானது நிவிர்த்திக்கப்படுகின்றதன்றே அதுபோல லிங்கதேகத்தை நிவிர்த்திபண்ணுகிறதற்குச் சாக்ஷாதுவிரோதியைக்

காணேம் ஆனதாற் சாமக்கிரியின் னிவிர்த்தியினல் லிங்கதேகம் நிவிர்த்திக்குமென்று சொல்லவேண்டும். லிங்கதேகம் ஆரம்பத்துக்குப் பிராரத்தமென்றுஞ், சஞ்சிதமென்றும், இரண்டு சாமக்கிரியுண்டு அந்த இரண்டு சாமக்கிரியினலும் அக்ஞானிகளுடைய லிங்கதேக மிந்தலோகத்திலும் பரலோகத்திலுமிருக்கும். ஞானிகளுக்கு சஞ்சிதகருமம் ஞானத்தினல் நிவிர்த்தித்துபோனபடியினலும், பிராரத்தகருமம் போகத்தினல் னிவிர்த்தித்தபடியினலும், எண்ணெ திரி முதலான சாமக்கிரியில்லாத தீபம்போலே கீழ்ச்சொன்ன இரண்டுவித சாமக்கிரியின் னிவிர்த்தியினல் லிங்கதேக நிவிர்த்திவரும் ஆனபடியினலே அந்தலிங்கதேக நிவிர்த்தி ஞானபலமன்று ஆனதால், வரப்போகிறதேகமில்லாத விதேகமுக்தி ஞானசமகாலத்தில் வருமென்று சித்தமாச்சுது.

உனக்குச்சம்மதமான வர்த்தமானதேகமில்லாத விதேகமுக்தி பிராரத்ததேகம் விழுந்துபோனபின் பிருக்கட்டும் நமக்குச் சம்மதமான விதேகமுக்தி ஞானசமகாலத்திலே யுண்டாகும் இதில் யாதொரு விரோதமுமில்லை.

அசுரவாசனையினுடைய நாசத்தைப்பண்ணுகின்ற தெய்வவாசனை ஞானசாதனமென்று சுருதிசொல்லுகிறது. அப்படியே பகவற்கீதையுஞ் சொல்லுகிறது. அதெப்படியென்றால்? மானமில்லாமை, டம்பமில்லாமை, இமிசையில்லாமை, கோபமில்லாமை சத்தாதிவிஷயங்களி லிராகமில்லாமை, குருசிசுருடை, இரண்டுவித்சௌசஞ், சமந், தமம், தைரியம், அகங்காரமில்லாமை, ஜனனமரணஞ், சரைவியாதி முதலானதால் வரப்பட்ட துக்கத்தை நினைக்குகை, இஷ்டம்வந்தாலும் அனிஷ்டம் வந்தாலுஞ் சமசித்தமாயிருக்குகை, சர்வப்பிரத்தியகபின்னான பரமேசுரனிடத்தில் விபசாரமன்றியிலே யிருக்கிற பக்தி, ஒருவருமில்லாத சுத்தமான பிரதேசத்தில் வாசங், கூட்டங்

கூடின இடத்தில் வெறுப்பு, சதாவேதாந்த நிஷ்டை, அபரோக்ஷ மான ஜீவப்பிரம ஐக்கியஞானம், இதுமுதலானது ஞானசாதனமென்று கீதையிற் சொல்லியிருக்கிறது. மனோநாசம் ஞானசாதனமென்று சுருதிஸ்மிருதிகளில் வெகுவாய்ச் சொல்லியிருக்கிறது.

விவிதிஷா சந்நியாசியினாலே சம்பாதிக்கப்பட்ட தத்துவ ஞானாதி மூன்றுகளுக்குள்ளே இக்காலத்திலிருக்கப்பட்ட வித்துவச் சந்நியாசியினிடத்தில் தத்துவஞானமாத்திரந் தொடர்ந்துவரும் வாச னாக்ஷய மனோநாசங்கள் மறுபடியும் முயற்சியினாற் சம்பாதிக்கத் தக்க துகள் அதேதெனன்றால்? லோகத்திலே சகுண உபாசனை பண்ணினவ னையும், அந்தஉபாசனை பண்ணாதவனையும், இரண்டுவித்தியாதிகாரி அதிற்சகுணப்பிரம சாக்ஷாத்கார பரியந்தமான உபாசனை பண்ணிப் போட்டுப் பின்பு ஞானத்திற் பிரவருத்தித்திருக்கிற அதிகாரிக்கி வாச னாக்ஷய மனோநாசங்கள் திடமாயிருக்கிறபடியினாலே ஞானம்வந்தபின்பு வித்துவச்சந்நியாசமுஞ், ஜீவன்முக்தியுந், தனக்குத்தானே சித்திக் கும். அப்படிப்பட்ட அதிகாரிதான் சாஸ்திரத்தில் முக்கியாதிகாரி இக்காலத்திலிருக்கப்பட்டவாள் வெகுபேர்கள் சகுண உபாசனை பண்ணாமற் றானே உச்சாகமாத்திரத்தினாற் சுருக்கிலே ஞானத்திற் பிரவருத்திக்குறார்கள். தாற்காலிகமாக வாசனாக்ஷய மனோநாச அப்பி யாசங்களையும் பண்ணுகிறார்கள் அதுகொண்டு சிரவணமனன நித் தியாசனங்கள் சித்திக்கிறதுகள். திடமாக அப்பியாசிக்கப்பட்ட அந் தச்சிரவணாதிகளால் அக்ஞானஞ், சமுயம், விபரீதம், மூன்றும். போய் விடுகிறபடியினாலே தத்துவஞானம் நன்றாயுண்டாகிறது. அப்படி உண்டான ஞானத்துக்குப்பாதகம் ஒன்றுமில்லாததினாலேயும், நசித் துப்போன அக்ஞானம் மறுபடியுண்டாகும்படியான காரண மில்லா ததினாலேயுங், கெடுதலில்லை. வாசனாக்ஷயம் மனோநாசங்களோ வென் றாற்? திட அப்பியாசமில்லாததினாலேயும், போகத்தைக் கொடுக்கத் தக்கதான பிராரத்தத்தால் அடிக்கடி வாதிக்கப் படுகிறபடியினா

லேயுங், காற்றோடேகூடின இடத்திலிருக்கப்பட்ட தீபம்போல உடனே நிவிர்த்தித்துப் போகிறதுகளானபடியினாலே இக்காலத்தி லிருக்கப்பட்ட வித்துவச்சந்நியாசிகளுக்கு ஞானமாத்திரந் தொடர்ந்துவரும் வாசனாக்ஷயம் மனோநாசங்கள் முயற்சியினாற் சம்பாதிக்கத் தக்கதுகளென்று சித்தமாச்சுது.

வாசனையாவதேதென்றால்? அதின்சொரூபம் வாசிட்டத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. அதெப்படியென்றாற்? றிடபாவனையினாலே முன்பின் ஒருவிசாரமுமன்றியிலே யுண்டாகாநின்ற குரோதாதி விர்த்திகளுக்கேதுவான சமஸ்காரமேவாசனை. அந்தவாசனை மலினவாசனையென்றுஞ், சுத்தவாசனையென்றும், இரண்டுவிதம். இதிற்றாலதேகாதி பஞ்சகோசங்களுக்கும், அதுகளுக்குச் சாக்ஷியான ஆத்மாவுக்கும், இருக்கப்பட்ட பேதத்தை மறைக்காநின்ற அக்ஞானத்தினாலே உண்டாகிற பிராந்திபரம்பரையாகிய கனமாயிருக்கிற ஆகாரத்தையுடைத்தானதாயுங், கன அகங்காரத்தோடே கூடினதாயுந், திரும்பித்திரும்பிச் ஜன்மத்தைக் கொடுக்கிறதாயு, மிருக்கிற வாசனை மலினவாசனையென்று சொல்லப்படும்.

மலினவாசனையினால் வரப்பட்ட கனஅகங்காரங் கீதையிற் சொல்லப்பட்டிருக்கிறது அதேதென்றால்? இந்தத்தினம் இப்போ யென்னாலே அடையப்பட்டது, இதை அடையப்போகிறேன், இதுயிருக்கிறது, இனிமேல் எனக்கு இது உண்டாகப்போகிறது, இந்தச் சத்துரு யென்னாலே ஜெயிக்கப்பட்டான், பின்னுஞ் சிலசத்துருக்களை நானே ஜெயிக்கப்போகிறேன், நான் யெல்லோருக்குஞ் சமானன் நான்போகி, நான்சித்தன், நான்பெலவான், நான்சுகி, நான்பாக்கியவான், நான் ஜனக்கட்டுள்ளவன், என்னோடேசமனாயாருண்டு, நான் யாகம் பண்ணப்போகிறேன், நான் தானம்பண்ணப்போகிறேனென்றிதுமுதலான அவிவேகமூலமான அகங்காரத்தினாலே மூடப்பட

டவாளாயும், அனேக சித்தப்பிரமையையுடைத்தான பெயர்களாயும், அக்ஞானமாகிய வலையினுல் சூழப்பட்டவாளாயும், விஷயபோகங்களிலே யேற்பட்டவாளாயும், இருக்கிறஜனங்கள் மஹாகோரமாயிருக்கிற ரௌரவாதிநரகத்தில் விழுவார்களென்று பகவான்சொல்லியிருக்கிறுர்.

வாரா யருச்சுனு வெகு குரூரர்களாயும். ஈசுரனிடத்திலும் ஈசுரபக்தாளிடத்திலுந் துவேஷியர்களாயும், அத்தியந்தம் அசுசியர்களாயும், மலினவாசனையோடே கூடினவர்களாயுமிருக்கிற துஷ்டஜனங்களை அசுரயோனிகளிலேதானே நாமே தள்ளிவிடுவோம். அப்படியசுரயோனிகளையடைந்து ஜன்மஜன்மத்திலேயும் மூடாளாய் நம்மையும், நம்முடைய பத்தாளையுஞ், சரணமாயடையாமற்றுனே மேன்மேல் அதமகதியை அடைவார்களென்று. பகவான்சொல்லியிருக்கிறுர்.

ஆனதால், முமூக்ஷுக்களானபேர்கள் வெகுஜன்மபரம்பரையைக்கொடுக்கிறதாயும், நானுவித நரக துக்கசாகரத்தில் மூழுகடிக்கிறதாயும், இருக்கிற மலினவாசனையை யெம்முயற்சியினுலுந் தூரத்தில் விட்டுப்போட்டுச் சுத்தவாசனையைச் சம்பாதித்துக்கொண்டு கிருதார்த்தாளாகவேண்டும்.

சுத்தவாசனையாவதேதென்றுல்? பிரத்தியகபின்ன பிரமதத்துவத்தைத் திடாபரோக்ஷமாக அறிந்தபுருஷனிடத்திலிருக்கப்பட்டதாயும், வறுத்தவிதை குதிர் நிரம்புகிறதற்குமாத்திரம் எப்படி உபயோகிக்குமோ ருசியான அன்னத்தின்பொருட்டும், பயிருண்டாகிறதின்பொருட்டும், உபயோகிக்கமாட்டாதோ. அப்படிப்போலத் தேகஞ் ஜீவித்திருக்கிறதின்பொருட்டு மாத்திரம் உபயோகிக்கிறதாயும், டம்பங் கெறுவமுதலான அசுரசம்பத்தை உண்டுபண்ணுததாயுஞ், ஜன்மாந்தரத்துக் கேதுவன்றியிலேயுமிருக்கிற வாசனை சுத்த வாசனையென்று வாசிட்டத்திற்சொல்லியிருக்கிறது.

கீழ்ச்சொன்ன மலினவாசனை- லோகவாசனையென்றுஞ், சாஸ்திரவாசனையென்றுந், தேகவாசனையென்றும், மூன்றுவிதமாயிருக்கும். அதிற் சகலஜனங்களும் நம்மை யெந்தப்படியிருந்தால் நிந்திக்கமாட்டார்களோ தோத்திரமாத்திரம் பண்ணுவார்களோ அந்தப்படிநடக்கவேண்டுமென்கிற துரபிமானம் லோகவாசனை. அந்தவாசனைசம்பாதிக்கிறதற் கருமையானபடியினால் மலினவாசனையென்று சொல்லப்பட்டது. இதற்குதாரணமேதென்றால்? இந்தலோகத்திலே சகலகுணங்களோடேயுங் கூடினபுருஷன் ஆரென்றுகேட்ட வான்மீகியைப்பார்த்து இட்சுவாகு வமுஷங்களிலுண்டானவரான ஸ்ரீராமன்தான் னீர்கேட்ட சகலகுணங்களோடேயுங் கூடினவரென்று நாரதர் வெகுபிரகாரமாய்ச் சொல்லியிருக்கிறார். அப்படிப்பட்ட ஸ்ரீராமனையுஞ் ஜகத்துமுதலியவனைத்திற்கும் ஆதாரமாயிருக்கிற மஹாபதிவிரதையான சீதாதேவியையும் பார்த்து வாயினாலே சொல்லக்கூடாததாயுங் காதினாலே கேட்கக்கூடாததாயுமிருக்கிற அபவாதத்தைச் ஜனங்கள் சொல்லியிருக்கிறார்கள். அப்படியிருக்க மற்றபேர்களுக்குச் ஜனஅபவாதம்வருகிறதில் கேழ்க்கவேண்டியதென்ன. அப்படியே தென்தேசத்திலிருக்கிற ஜனங்களை வடதேசத்திலிருக்கிற ஜனங்கள் தங்கள் தங்கள் குலங் கோத்திரம் பெந்துவர்க்கம் இஷ்டதேவதைமுதலானதில் அபிமானத்தால் நிந்திக்கிறார்கள். தங்களைத்தோத்திரம்பண்ணிக் கொள்ளுகிறார்கள். வடதேசத்தில் வசிக்கிறவர்களைத் தென்தேசத்தில் வசிக்கப்பட்டவர்களும் அப்படியே நிந்திக்கிறார்கள் தங்களையுந் தோத்திரம்பண்ணிக்கொள்ளுகிறார்கள். பின்னுந் தன் தேச ஆசாரங் குலதருமம் பாஷையின்பேதம் அதிலிருக்கப்பட்டசுபசப்தம் அபசப்தம் முதலானதில் அபிமானத்தாற் றங்களுடைய ஸ்துதியையும் பிறருடைய நிந்தையையுஞ் ஜனங்கள் பண்ணுகிறார்கள். இதுகளெல்லாம் லோகவாசனைக்குதாரணம்.

இந்தலோகவாசனை நசிக்கிறதற்குபாயமேதென்றால்? சகல ஜனங்களுக்குஞ் சந்தோஷம்வரும்படி நடக்கத்தக்கதான உபாயம் யாதொன்றுமில்லைத் தன்தன்மனதுக்குத் தோணினபடி சொல்லாநி ன்ற ஜனங்களுடைய சொல்லினாலேநமக்கென்ன எவ்விதமும் நமக் குஇதத்தையே அனுஷ்டிக்கவேண்டுமென்கிற விவேகமே லோகவா சனை நசிக்கும்படியான உபாயம். இந்த அபிப்பிராயத்தை வைத்து க்கொண்டுதான் மோக்ஷசாஸ்திரத்தில் "அங்கங்கே தியானபுருஷனு க்கு நிந்தையிலுந் ஸ்துதியிலுஞ் சமமாயிருக்கிற புத்திவேண்டுமெ ன்று சொல்லியிருக்கிறது."

சாஸ்திரவாசனையாவதேதென்றால்? கருமசாஸ்திரபாட அபி மானமென்றும், அந்தச்சாஸ்திர அர்த்தஅபிமானமென்றும், அந்தச்சா ஸ்திர அர்த்தஅனுஷ்டானஅபிமானமென்றுஞ், சாத்திரவாசனை மூன் றுவிதம். அதிற் சாஸ்திர பாடஅபிமானத்துக் குதாரணமாவதேதெ ன்றால்? பாரத்துவாசரென்கப்பட்டவர் மூன்று புருஷாயுசு மட்டுக்கும் வெகு வேதங்களை அத்தியயனம்பண்ணி நாலாம் புருஷாயுசுலே இந்தி ரனாலே மறுபடியும் வேதபாடத்தில் பிரவருத்திக்கப்பட்டவராய்க் கொண்டு அப்போது மிஞ்சியிருக்கிற வேதத்தினுடைய அத்தியயன த்தின்பொருட்டு முயற்சிபண்ணினார் அப்படிப்பட்ட பாரத்துவாசர்க் குக்கூட வேதபாடமுழுவதுங் கிடைக்காமற் போனபடியினாலே அந் தப்பாடஅபிமானம் மலினவாசனையென்று சொல்லப்பட்டுது.

பின்புஅவருடையபாடத்தின் அசாமார்த்தியத்தை இந்திரன் பார்த்து வேதபாடத்தில்நின்றுந் திருப்பி அதைக்காட்டிலும் அதி கமாயிருக்கிற புருஷார்த்தத்தின்பொருட்டுச் சகுணப்பிரமஉபாசனை யை உபதேசித்தானென்று இதெல்லாந் தைத்திரியப்பிரமாணத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படியே வெகுசாஸ்திர அர்த்தத்தை அறியவேண்டுமென்கின்ற அபிமானமும் பரமபுருஷார்த்தத்துக்குச் சாதனமாகாதபடியினாலே மலினவாசனையென்று காலக்ஷேபகீதையிற் சொல்லியிருக்கிறது. அதேதென்றால்? ஒருரிஷியானவர் வெகுவிதமான சாஸ்திரபுஸ்தகபாடங்களோடேகூட மஹாதேவரைப் பிரதக்ஷிண நமஸ்காரங்கள்பண்ணித் தரிசனம்பண்ணுகிறதற்காகப் பரமசிவன் சன்னிதானத்தில் வந்தார் அப்போது அந்தச்சன்னிதானத்தில் அவரைப்பார்த்துப் பின்னொரு ரிஷியானவர் பாரஞ்சுமக்கிற கழுதைபோல நன்றாய்ப்புஸ்தகபாரங்களைக் சுமக்கிறீரென்று கிருபையினாலே பரிகாசம் பண்ணினார் அதைக்கேட்டு முந்தினரிஷியானவர் புஸ்தகபாரங்களையெல்லாம் லவணசமுத்திரத்தி லெறிந்துபோட்டார். அப்போ கிருபாமூர்த்தியாயிருக்கிற மஹாதேவரானவர் அந்தரிஷியை ஆத்தும வித்தையிலே பிரவருத்திப்பித்தாரென்று சொல்லியிருக்கிறது.

ஆத்துமவித்தையும் அந்தர்முகனன்றியிலேயுங் குருகிருபை ஈசுரகிருபை இல்லாதவனாயுமிருக்கிறவனுக்கு வேதசாஸ்திரமாத்திரத்தினாலேதானே யுண்டாகமாட்டாது.

நாரதபகவானானவர் அறுபத்துநாலுவித்தைகளிலுஞ் சமர்த்தரானபோதிலும் ஆத்துமவித்தை இல்லாததினாலே சோகத்தோடேகூடினவராய்ச் சனற்குமாரரைச்சரணமாயடைந்து வாருமையாகுருவே? ஆத்துமவித்தையிருக்கிறவனே சோகத்தைத்தாண்டுவனென்று தங்களைப்போலிருக்கப்பட்ட பெரியவாளிடத்தில்நின்றும் நான்கேட்டிருக்கிறேன் எனக்கு அறுபத்துநாலுவித்தைகள் வந்திருந்தபோதிலும் நான் மந்திரவித்தேயொழிய ஆத்மவித்தன்று ஆனதாற் றுக்கத்தையே அநுபவிக்கிறேன் சுகம்லேசாலேசமுங்கிடையாது அப்படிப்பட்ட யென்னைத் துக்கசமுத்திரத்தில் நின்றுங் கரையேற்றிவைக்க

வேண்டுமென்று பிரார்த்தித்தார். சனற்குமாரருஞ் சுத்தசித்தராய் உத்தம அதிகாரியாயிருக்கிற நாரதபகவானுக்கு ஆத்துமவித்தையை உபதேசித்து அவரைச் சோகசாகரத்தில்நின்றுங் கரையேற்றினரென்று சாந்தோக்கிய உபநிடதத்திற்சொல்லியிருக்கிறது. அப்படியே பின்னும் வெகு சுருதிஸ்மிருதிகளிலேயுஞ் சொல்லியிருக்கிறது.

ஆனதால், இக்காலத்திலிருக்கப்பட்டவர்களும் ஈசுரபக்தியோடே கூடச் சற்குருவைச் சரணமாயடைந்து அவருடையமுகத்தினாலே மஹாவாக்கிய உபதேசம்பெற்று மனனம் நிதித்தியாசனம்பண்ணி அதினால் நிர்விகற்ப சாக்ஷாத்காரத்தையடைந்து ஜீவன்முக்திச்சுகத்தை அநுபவித்துச் சகலசமுசார துக்கத்தையும் போக்கவேண்டுமேயொழியத் தான்தானே யேதாகிலுஞ் சிலவேதாந்தங்களைப் பார்த்துப்போட்டு வாக்குமாத்திரவேதாந்தத்தால் மோக்ஷசுகத்தை அடையக்கூடாது. சமுசார துக்கத்தையும் போக்கக்கூடாது. அப்படியிருக்க வேதாந்த பின்னசாஸ்திர வாசனையினாலே மோக்ஷசுகங்கிடைத்துச் சமுசார துக்கம் போகுமென்கிற வார்த்தைக்கிக்கூட இடமில்லை.

வாக்குமாத்திர வேதாந்தத்தினாற் பிரயோசனமில்லையென்று விஷ்ணுபுராணத்திற் சொல்லியிருக்கிறது.

அதெப்படியென்றால்? கலியுகம்வரும்போது சகலஜனங்களும் உபஸ்தஇந்திரியத்தால் வரப்பட்ட சம்போகசுகத்திலேயுஞ், சிங்நுவை இந்திரியத்தால் வரப்பட்ட ஆகாரசுகத்திலேயும், ஆஸத்தாளாய்க்கொண்டு வாக்குமாத்திரத்தினாலே பிரமதத்துவத்தைச்சொல்லுவார்களேயொழிய வேதாந்தசாஸ்திரத்திற்சொன்னபடி வைராக்கியாதி சாதனங்களை யனுஷ்டிக்கமாட்டார்களென்று சொல்லியிருக்கிறது. அந்தப்புராணத்திற்றானே சாஸ்திர அர்த்தஅனுட்டானபிமானம் மலினவாசனையென்கிறதற் குதாரணஞ் சொல்லியிருக்கிறது.

அதேதென்றால்? நிதாகரானவர் ரிபுவினாலே, அடிக்கடி ஆத்மதத்துவத்தை உபதேசிக்கப்பட்டபோதிலுங் கருமஅனுஷ்டானத்திற் சிரத்தையை விடவேஇல்லையென்கிறதே உதாரணம். தாசூரன் கருமஅனுஷ்டானத்தின்பொருட்டுப் பூமியிலொரு இடத்திலுஞ் சுத்தஸ்தலத்தை யடையவில்லையென்று வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறது அதே இதற்குதாரணம்.

இந்தசாஸ்திரவாசனை பிரமாப்பியாசத்திற்கு விரோதியானதாலும், மேன்மேற் ஜன்மத்துக்கு யேதுவானதாலும், மலினவாசனைதான். அந்தப்படி முண்டகோபநிடதத்தில் வெகுவாய்ச்சொல்லியிருக்கிறது. கீதையிலும் பகவான் நிரம்பச்சொல்லி யிருக்கிறார். கெறுவத்துக்கேதுவானபடியினாலேயுஞ் சாஸ்திரவாசனை மலினவாசனையே. சுவேதகேதுவானவர் சொற்பகாலத்தினாலேதானே சகல வேதங்களையும் அத்தியயனம்பண்ணிப்போட்டுக் கெறுவத்தினாலே தன்னுடைய பிதாவுக்கெதிரவே வணக்கமன்றியிலே யிருந்தானென்று சாந்தோக்கிய உபநிடதத்திற் சொல்லியிருக்கிறது.

வாலாகியென்கிறவன் சிலவுபாசனைகளை அறிந்துகொண்டு கெறுவத்தோடே கூடினவனாய் வெகுதேசங்களிலே வெகுபிராமணரை அவமானம்பண்ணிப்போட்டு காசியிலே அசாதசத்துருவென்கிற பிரமவித்துச்சிரேஷ்டரைச் ஜெயிக்கிரதற்கு யேற்பட்டானென்று கௌஷீதகி உபநிடதத்திற் சொல்லியிருக்கிறது.

தேகவாசனையாவதேதென்றால்? தேகமேநானென்கிற தேகாத்மப் பிரமையினாலும், தேகத்துக் குணத்தைச் சம்பாதிக்க வேண்டுமென்கிற பிரமையினாலுந், தோஷத்தைப்போக்கவேண்டுமென்கிற பிரமையினாலும், தேகவாசனை மூன்றுவிதமாயிருக்கும். அதில்- மூடஜனங்களும், லோகாயுதாளுஞ், சைதன்னியத்தோடேகூடின

வேண்டுமென்று பிரார்த்தித்தார். சனற்குமாரருஞ் சுத்தசித்தராய் உத்தம அதிகாரியாயிருக்கிற நாரதபகவானுக்கு ஆத்துமவித்தையை உபதேசித்து அவரைச் சோகசாகரத்தில்நின்றுங் கரையேற்றினரென்று சாந்தோக்கிய உபநிடதத்திற்சொல்லியிருக்கிறது. அப்படியே பின்னும் வெகு சுருதிஸ்மிருதிகளிலேயுஞ் சொல்லியிருக்கிறது.

ஆனதால், இக்காலத்திலிருக்கப்பட்டவாளும் ஈசுரபக்தியோடே கூடச் சற்குருவைச் சரணமாயடைந்து அவருடையமுகத்தினலே மஹாவாக்கிய உபதேசம்பெற்று மனனம் நிதித்தியாசனம்பண்ணி அதினல் நிர்விகற்ப சாக்ஷாத்காரத்தையடைந்து ஜீவன்முக்திச்சுகத்தை அநுபவித்துச் சகலசமுசாரதுக்கத்தையும் போக்கவேண்டுமேயொழியத் தான்தானே யேதாகிலுஞ் சிலவேதாந்தங்களைப் பார்த்துப்போட்டு வாக்குமாத்திரவேதாந்தத்தால் மோக்ஷசுகத்தை அடையக்கூடாது. சமுசாரதுக்கத்தையும் போக்கக்கூடாது. அப்படியிருக்க வேதாந்த பின்னசாஸ்திர வாசனையினலே மோக்ஷசுகங்கிடைத்துச் சமுசாரதுக்கம் போகுமென்கிற வார்த்தைக்கிக்கூட இடமில்லை.

வாக்குமாத்திர வேதாந்தத்தினற் பிரயோசனமில்லையென்று விஷ்ணுபுராணத்திற் சொல்லியிருக்கிறது.

அதெப்படியென்றால்? கலியுகம்வரும்போது சகலஜனங்களும் உபஸ்தஇந்திரியத்தால் வரப்பட்ட சம்போகசுகத்திலேயுஞ், சிங்ஙுவை இந்திரியத்தால் வரப்பட்ட ஆகாரசுகத்திலேயும், ஆஸத்தாளாய்க்கொண்டு வாக்குமாத்திரத்தினலே பிரமதத்துவத்தைச்சொல்லுவார்களேயொழிய வேதாந்தசாஸ்திரத்திற்சொன்னபடி வைராக்கியாதி சாதனங்களை யனுஷ்டிக்கமாட்டார்களென்று சொல்லியிருக்கிறது. அந்தப்புராணத்திற்றனே சாஸ்திர அர்த்தஅனுட்டானபிமானம் மலினவாசனையென்கிறதற் குதாரணஞ் சொல்லியிருக்கிறது.

அதேதென்றால்? நிதாகரானவர் ரிபுவினாலே, அடிக்கடி ஆத்மதத்துவத்தை உபதேசிக்கப்பட்டபோதிலுங் கருமஅனுஷ்டான த்திற் சிரத்தையை விடவேயில்லையென்கிறதே உதாரணம். தாரு ரன் கருமஅனுஷ்டானத்தின்பொருட்டுப் பூமியிலொரு இடத்திலுஞ் சுத்தஸ்தலத்தை யடையவில்லையென்று வாசிட்டத்திற் சொல்லியிரு க்கிறது அதே இதற்குதாரணம்.

இந்தசாஸ்திரவாசனை பிரமாப்பியாசத்திற்கு விரோதியான தாலும், மேன்மேற் ஜன்மத்துக்கு யேதுவானதாலும், மலினவாசனை தான். அந்தப்படி முண்டகோபநிடதத்தில் வெகுவாய்ச்சொல்லி யிருக்கிறது. கீதையிலும் பகவான் நிரம்பச்சொல்லி யிருக்கிறார். கெறுவத்துக்கேதுவானபடியினாலேயுஞ் சாஸ்திரவாசனை மலினவா சனையே. சுவேதகேதுவானவர் சொற்பகாலத்தினாலேதானே சகல வேதங்களையும் அத்தியயனம்பண்ணிப்போட்டுக் கெறுவத்தினாலே தன்னுடைய பிதாவுக்கெதிரவே வணக்கமன்றியிலே யிருந்தானெ ன்று சாந்தோக்கிய உபநிடதத்திற் சொல்லியிருக்கிறது.

வாலாகியென்கிறவன் சிலவுபாசனைகளை அறிந்துகொண்டு கெறுவத்தோடே கூடினவனாய் வெகுதேசங்களிலே வெகுபிராம ணாளை அவமானம்பண்ணிப்போட்டு காசியிலே அசாதசத்துருவென் கிற பிரமவித்துச்சிரேஷ்டரைச் ஜெயிக்கிரதற்கு யேற்பட்டானெ ன்று கௌஷீதகி உபநிடதத்திற் சொல்லியிருக்கிறது.

தேகவாசனையாவதேதென்றால்? தேகமேநாமென்கிற தே காத்மப் பிரமையினாலும், தேகத்துக் குணத்தைச் சம்பாதிக்க வேண்டுமென்கிற பிரமையினாலுந், தோஷத்தைப்போக்கவேண்டுமெ ன்கிற பிரமையினாலும், தேகவாசனை மூன்றுவிதமாயிருக்கும். அதில்- மூடஜனங்களும், லோகாயுதாளுஞ், சைதன்னியத்தோடேகூடின

தேகமே ஆத்மாவென்று யெண்ணுகிறார்களென்று பாஷியக்காரர் தேகாத்மப்பிரமையைச் சொல்லியிருக்கிறார். அப்படியே சுருதியு மிருக்கிறது லோகாளுடைய அநுபவமுங் கண்டிருக்கிறோம்.

தேகத்திற் குணசம்பாதனம் பண்ணுவது லௌகீகமென் றுஞ், சாஸ்திரீயமென்றுஞ், இரண்டுவிதம். அதில்-ரம்மியமாயிருக்கிற ராகத்தோடேகூடக் கானம்பண்ணுகிறதற்காக விளக்கெண்ணை மிளகு நெய்முதலானதைச் சாப்பிடுவதுந், தேகத்தைத் தொடும் போது அதுமெதுவாயிருக்கிறதாகப் புஷ்டியைப் பண்ணத்தக்க தான ஔஷத ஆகாரங்களைப் புசிப்பதுஞ், சரீரம் அழகாயிருக்கிற தின்பொருட்டு அப்பியங்கஸ்நானமுதலானதைப் பண்ணிக்கொண்டு நல்லவஸ்திராபரணங்களைத் தரிப்பதுஞ், சரீரம் வாசனையா யிருக்கிற தின்பொருட்டு புஷ்பமாலைகளைத் தரித்துக்கொண்டு சந்தனமுதலான தைப் பூசிக்கொள்ளுவதும், லௌகீகமான குணசம்பாதனம். கங் காஸ்நானம் முதலானதைப் பண்ணுவதுஞ், சாளிக்கிராமாதி தீர்த்த முதலானதைப் புரோக்ஷித்துக்கொள்ளுவதுஞ், சாஸ்திரீயகுண சம் பாதனம்.

தேகத்தினுடைய தோஷத்தைப் போக்குவது லௌகீக மென்றுஞ், சாஸ்திரீயமென்றும், இரண்டுவிதம். அதில்-வைத்தியசாஸ் திரத்திற் சொல்லப்பட்ட ஔஷதங்களினாலே முகங்கழுவுவது முத லானது லௌகீகம். சௌசம் ஆசமனீயம் முதலானது சாஸ்திரீயம். இந்த மூன்றுவிதமான தேகவாசனைகளும் மலினவாசனை யென்கிறதை மேற்சொல்லுகிறோந் தேகமே ஆத்துமாவென்பது அப்பிரமாணமா னதாலுஞ், சகலதுக்கயேதுவானதாலும், மலினவாசனை. இந்த அர்த் தத்திற் பூருவாசாரியாள் நிரம்பச்சொல்லியிருக்கிறபடியினாலே நாம் விசேஷமாய்ச் சொல்லவில்லை. குணசம்பாதனமும் வெகுமுயற்சிப ண்ணினபோதிலும் வெகுபேர்களிடத்தில் முழுவதுஞ் சித்திக்கக்

காணேம். ராகத்தோடே கானம்பண்ணுகிற பிரசித்தாளாயிருக்கிற பாடகாளும், வேதஅத்தியயனம் பண்ணிவைக்கிறவாளுங், கீழ்ச்சொன்ன முயற்சிபண்ணினபோதிலும் நல்லகண்டத்தொனியை அடையவில்லை. நியமமாய்ச் சரீரபுஷ்டியுங் காணப்படவில்லை. அழகும், வாசனையும், வஸ்திராபரணமாலை முதலானதுகளுக்கே யொழியத் தேகத்திலே கிடையாது. அந்தப்படி விஷ்ணுபுராணத்திற் சொல்லியிருக்கிறது. அதேதென்றால்? ரத்தம், மாம்சம், யெலும்பு, நரம்பு, சீ, மலம், மூத்திரம், மச்சை, சுக்கிலம், இதுகளுடைய கூட்டமான தேகத்தி லியாதொருத்தன் பிரீதிபண்ணுகிறானோ அவன் நரகத்திலேயும் பிரீதிபண்ணவேண்டுமென்றுந், தன்னுடைய சரீரத்திலிருக்கப்பட்ட நாத்தத்தைக்கண்டு யாதொருபுருஷன் வைராக்கியத்தையடையவில்லையோ அவனுக்கு வேறே யென்னவைராக்கிய யேதுவை உபதேசிக்கலாமென்றுஞ், சொல்லியிருக்கிறது. சாஸ்திரீயகுணசம்பாதனமும் பிரபலமாயிருக்கிற பின்னொருசாஸ்திரத்தினால் வாதிக்கப்படுகிறது.

பிரபலசாஸ்திரமேதென்றால்? யாதொருபுருஷனுக்கு வாத பித்த சிலேஷ்மமாகிய மூன்றுதாதுக்களோடேகூடின பிரேதரூபமான தேகத்தில் ஆத்துமபுத்தியிருக்கிறதோ. புத்திரமித்திரகளத்திராதிகளிலே நமதென்கிறமமதையிருக்கிறதோ. பாஷாணம் மிருத்து தாரு தாம்பிரமுதலானதினுடைய விகாரமான சிவவிஷ்ணுவாதி மூர்த்திகளிலேமாத்திரந் தேவதாபுத்தியிருக்கிறதோ. கங்காநதிஜலமாத்திரத்திற் தீர்த்தபுத்தி இருக்கிறதோ. அவன் தத்துவவித்துக்களான பெரியவாளுடைய சபையிற்கோவரகழுதையென்று சொல்லப்படுவனென்கிற பாகவதவசனமுந், தேகமானது அத்தியந்தம் மலினமாயிருக்கப்பட்டது. ஆத்துமாவானவர் அத்தியந்தம் நிர்மலராயிருக்கப்பட்டவர். ஆனதாற் றேகத்துக்கு யெவ்வளவு சௌசம்பண்ணின

போதிலுஞ் சுத்திகிடையாது. ஆத்மா நித்தியசுத்தரானதால் அவருக்குச் சௌசப்பிரசித்தியே கிடையாதென்கிற சூதசங்கிதையினுடைய வசனமும், பிரபலசாஸ்திரம்.

தேகம் அத்தியந்தம் மலினமென்கிறது மைத்திரசாகையிற் சொல்லப்பட்டிருக்கிறது. அதேதென்றால்? யெலும்பு, நரம்பு, தோல், மச்சை, மாமிசஞ், சுக்கிலஞ், சுரோணிதஞ், சிலேஷ்டுமங், கண்ணீர் இவைகளினாலே ஊழலாயும், மலமூத்திரம் வாதபித்தங்களினாலே நிறைந்திருக்கிறதாயுந், துற்கந்தமாயும், நிச்சாரமாயுமிருக்கப்பட்ட இந்தத்தேகத்தில். விஷயபோகங்களினாலே என்ன சுகமென்றும், இந்தச்சரீரம் ஸ்திரீபுருஷாளுடைய மைதுனத்தாலுண்டானதாயும், மூத்திரத்துவாரத்தால் வெளிப்பட்டதாயும், அஸ்தி மாமிசஞ் சருமங்களாற் கட்டப்பட்டதாயும், மலமூத்திரம், பித்தங், கபம், மச்சை, மேதசு, வசைமுதலான மலங்களினாற் பணத்தினாற் பொக்கிஷம் போல நிரம்பப்பட்டதாயுஞ், சைதன்னிய சூனியமாயும், அனேக ரோகஸ்தானமாயும், வெகுவிததுக்கத்துக்கு ஸ்தானமாயும், பிரத்தியக்ஷ நரகமாயுமிருக்கிறதானபடியினா லிதைப்போல வேறே கெட்டபதார்த்தஞ் ஜகத்திலே கிடையாதென்றுஞ், சொல்லியிருக்கிறது. இன்னம் பூருவாசாரியாள் இந்த அர்த்தத்தில் நிரம்பச் சொல்லியிருக்கிறாள். அதென்னவென்றால்? நவத்துவாரங்களினாலும் நிரந்தரம் மலம்பெருகுகிறபடியினாலுங், கணக்கில்லாதமயிற்கால் வழியாற் சதாவேர்வை பெருகுகிறபடியினாலும், ஆர்தான் சோம்பலன்றியிலே இந்தத்தேகத்துக்குச் சௌசம்பண்ணி நிருவகிப்பாள். ஒருவராலேயும் ஆகமாட்டாது. இப்படி பாகியசௌசமே கிடைக்கவில்லை. ஆந்தரசௌசமோ சொற்பனத்திலுங்கிடைக்கவே கிடையாதென்று இப்படிச்சொல்லியிருக்கிறாள்.

ஔஷதம் புசிப்பது முதலானதாற் சாந்தமானரோகம் மறுப டியும் அடிக்கடி யுண்டாகிறபடியினாலே லௌகீகமான சரீரதோஷ த்தினுடைய நீக்கங்கூடாது. கீழ்ச்சொன்ன பாகவதவசனஞ் சூதச ங்கிதைவசனம் ஆகிய இவ்வசனங்களினாற் சாஸ்திரீயமான சரீரதோ ஷநீக்கமுங்கூடாது. ஆனபடியினாலே தேகவாசனை மலினவாசனை யே. அந்தப்படி வாசிட்டத்தில் ஸ்ரீ வசிட்டர்சொல்லியிருக்கிறார்.

ஆதேதென்றால்? வாரீர்இராமா மாதாபிதாக்களினாலேயுண்டு பண்ணப்பட்ட கால்முதற் சிரசுபரியந்தமான தேகமேநானென்கிற புத்தியானது மித்தியாஞானமானபடியினாலே பந்தத்தின்பொருட் டாகும். அந்தப்புத்தி சகலநரகங்களுக்கு ஹேதுவாகும். ஆனதால், அந்தப்புத்தியை யெவ்வித முயற்சியினாலாகிலுந்தள்ளவேண்டும். அப் படித்தள்ளும்போது சகலமுங்கெட்டுப்போகிறதாயிருந்தாலும் அதற் குப்பின்வாங்காமல் வெகுதைரியத்தோடே கூடினவனாய் அதைத் தள்ளவேண்டும். எப்படிப்பட்ட ஆபத்துவந்தாலும் யோக்கியனாயிரு க்கிறபுருஷன் நாய்மாமிசத்தைப் புசிக்கிறவளாயும் அதைத்தானே கையில் வைத்துக்கொண்டிருக்கிறவளாயுமிருக்கிற சண்டாளஸ்திரீ யை யங்கீகரிப்பனோ மாட்டானே" அப்படிப்போல எப்படிப்பட்ட ஆப த்துவந்தாலுந் தேகம்நானென்கின்றபுத்தியைச் சொற்பனத்திலுங் கூட அங்கீகரிக்கக்கூடாதென்று சொல்லியிருக்கிறார். இப்படியா யுள்ளளவில் லோகவாசனை, சாஸ்திரவாசனை, தேகவாசனை, மூன்றும். அவிவேகிகளுக்கு வேண்டியதாகத் தோணினபோதிலும். விவிதிஷா சந்நியாசிக்கி ஞானவிரோதியானபடியினாலும், வித்துவச்சந்நியாசிக் கிச் ஜீவன்முக்திச் சுகவிரோதியானபடியினாலும், விவேகிகளினாலே தள்ளத்தக்கதுதான். அந்தப்படி சூதசங்கிதையிற் சொல்லியிருக்கி றது. டம்பங் கெறுவம் முதலான அசுரவாசனையாதொன்றுண்டோ அது நரகஹேதுவானபடியினாலே மலினவாசனையென்கிறது அதிப் பிரசித்தமானதால் எந்த உபாயத்தினாலாகட்டும் இந்நாலுவாசனை

களையும் நாசம்பண்ணவேண்டும். எப்படி வாசனை நாசம்பண்ணவேண்டுமோ அப்படி மனோநாசமும் பண்ணவேண்டும்.

மனதாவதேதென்றால்? சாவயமாய் அநித்தியமாய் அரக்குச் சுவர்ணம் மெழுகுமுதலானதுபோல வெகுவிதபரிணாமயோக்கியமாயிருக்கிறதிரவியம் மனது. சக்ஷுராதி இந்திரியத்தினாலே கடபடாதி விளங்குவதுபோலச் சாக்ஷியாயிருக்கிற ப்ரத்திகாத்துமாவினாலேகாமாதிவிர்த்திகள் பிரகாசமாகவிளங்குகிறதுகள். அந்தவிர்த்திகளுக்குபாதானகாரணமாயிருக்கப்பட்ட மனது கண்ணுக்குமுன்னே வெளிச்சத்திலிருக்கப்பட்ட கடபடாதியுங் காதுக்குச்சமீபத்திற் றிடமாயுச்சரிக்கப்பட்ட சப்தமும் யாதொன்று சாவதானமன்றியிலேபோனால் அறியப்படவில்லையோ யாதொன்று சாவதானமாயிருந்தால் அறியப்படுகிறதோ அதுவே அன்னுவயவிதிரேகங்களினாலே சகல விஷய ஞானத்துக்குஞ் சாதாரணகாரணமானமனதென்று பிரகதாரண்ணிய உபநிடதத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தமனது மனனம் பண்ணுகிறபடியினாலே மனதென்றுஞ், சிந்தனைபண்ணுகிறபடியினாலே சித்தமென்றுஞ், சொல்லப்படும். அந்தச்சித்தம்-மூன்றுகுணகாரியமான ஞானம், பிரவிருத்தி, மோகம், மூன்றுமநுபவிக்கப்படுகிறபடியினாலே, திரிகுணாத்துமகமாயிருக்கும். அந்தப்படி கீழேகுணாதீத லக்ஷணத்திற் சொல்லியிருக்கிறோம். சாங்கியசாஸ்த்திரத்திலும், பகவற்கீதையினுஞ், சித்தந் திரிகுணாத்துமகமென்று நிரம்பச்சொல்லியிருக்கிறது. அந்தச்சித்தத்தினுடைய மூன்றுகுணங்களுஞ் சமுத்திரத்தின் அலைகள்போல நிரந்தரம் பரிணாமத்தையடையும்போது ஒருக்கால் ஒருகுணம் மேற்கொண்டிருக்கும். மற்றவிரண்டுகுணங்கள் உள்ளடங்கியிருக்கும். அதிற் றமோகுணமேற்கொண்டிருக்கும்போது அசுரசம்பத்துண்டாகும். ரசோகுணம் மேற்கொண்டிருக்கும்போது லோகாதிவாசனைகள் மூன்றுகளுமுண்டாகுஞ் சத்துவகுணம் மேற்கொள்ளும்போது தெய்வசம்பத்துண்டாகும். இப்படி அந்தக்காணங்

திரிகுணாத்துமகமாகத் தோணினாலுஞ், சத்துவகுணமே இதற்குமுக்கியமான உபாதானகாரணம். ரசோகுணந் தமோகுணம் இரண்டுஞ் சகாயமானபடியினாலே ஞானிக்கித் தியானப்பியாசத்தினாலே ரசசு, தமசு, இரண்டுகுணங்களையும். போக்கடிக்கும்போது சத்துவகுணமே அந்தக்கரணசொரூபமாக மிஞ்சும். அந்தப்படி வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறது. அந்தச்சத்துவமுஞ் சஞ்சலத்துக்கேதுவான ரசோகுணமில்லாததினாலே ஏகாக்கிரமாயும், பிராந்தியினாற் கற்பிக்கப்பட்ட அனாத்துமரூபமான தூலபதார்த்தாகாரத்துக்கேதுவான தமோகுணமில்லாததினாலே*சூக்ஷுமமாயும், இருப்பதினால், ஆத்தும தரிசனத்துக்கு யோக்கியமாயிருக்கும். அந்தப்படி கடவல்லியில் யேகாக்கிரமாயுஞ் சூக்ஷுமமாகியுமிருக்கிற புத்தியினாலே ஆத்துமசொரூபத்தைத் தரிசிக்கலாமென்று சொல்லியிருக்கிறது.

பெருங்காற்றாலே அலையாநின்ற தீபத்தைக்கொண்டு ரத்தினலக்ஷணப் பரிட்சை யெப்படிப்பண்ணக்கூடாதோ. பெருத்திருக்கிற கடப்பாரையைக்கொண்டு வெகுசூக்ஷுமமான பட்டுமுதலான வஸ்திரத்தை யெப்படி யிழையிடக்கூடாதோ. அப்படிப்போலச் சஞ்சலமாயுந் தூலமாயுமிருக்கிற புத்தியைக்கொண்டு அசஞ்சலராயும், அதிசூக்ஷுமராயும், இருக்கிற ஆத்துமாவைத் தரிசனம்பண்ணக்கூடாது. அப்படிப்பட்ட இந்தச்சத்துவந்தானே தியானப்பியாசமில்லாத அக்ஞானிகளிடத்திலே தமோ ரசோகுணத்தோடே சேர்க்கப்பட்டுக்கொண்டு வெகுவித தொய்தப்பிரபஞ்சத்தைச் சிந்திக்கிறபடியினாலே சித்தமாகும். அந்தச்சித்தமானது தமோகுணம் அதிகமாகிறதினாலே அசுரசம்பத்து விருத்தியடையும். அப்போது தூலமாகுமென்று ஸ்ரீவசிட்டர் சொல்லியிருக்கிறார்.

அதெப்படியென்றால்? அனாத்துமாவாயிருக்கிற தேகாதியில் ஆத்துமபுத்தியினாலுந், தேகமாத்திரத்தில் எப்போதும் ஆஸத்தையி

* சூக்ஷுமமாயுங்கொண்டு-என்றும்-பாடம்.

களையும் நாசம்பண்ணவேண்டும். எப்படி வாசனு நாசம்பண்ணவே ண்டுமோ அப்படி மனோநாசமும் பண்ணவேண்டும்.

மனதாவதேதென்றால்? சாவயமாய் அநித்தியமாய் அரக்குச் சுவர்ணம் மெழுகுமுதலானதுபோல வெகுவிதபரிணாமயோக்கியமா யிருக்கிறதிரவியம் மனது. சக்ஷுவாதி இந்திரியத்தினாலே கடபடாதி விளங்குவதுபோலச் சாக்ஷியாயிருக்கிற பிரத்திகாத்துமாவினாலேகா மாதிவிர்த்திகள் பிரகாசமாகவிளங்குகிறதுகள். அந்தவிர்த்திகளுக் குபாதானகாரணமாயிருக்கப்பட்ட மனது கண்ணுக்குமுன்னே வெ ளிச்சத்திலிருக்கப்பட்ட கடபடாதியுங் காதுக்குச்சமீபத்திற் றிடமா யுச்சரிக்கப்பட்ட சப்தமும் யாதொன்று சாவதான மன்றியிலேபோ னால் அறியப்படவில்லையோ யாதொன்று சாவதானமாயிருந்தால் அறியப்படுகிறதோ அதுவே அன்னுவயவிதிரேகங்களினாலே சகல விஷய ஞானத்துக்குஞ் சாதாரணகாரணமானமனதென்று பிரகதா ரண்ணிய உபநிடதத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. அந்தமனது மன னம் பண்ணுகிறபடியினாலே மனதென்றுஞ், சிந்தனைபண்ணுகிறபடி யினாலே சித்தமென்றுஞ், சொல்லப்படும். அந்தச்சித்தம்-மூன்றுகுண காரியமான ஞானம், பிரவிருத்தி, மோகம், மூன்றுமநுபவிக்கப்படு கிறபடியினாலே திரிகுணாத்துமகமாயிருக்கும். அந்தப்படி கீழேகுணா தீத லக்ஷணத்திற் சொல்லியிருக்கிறோம். சாங்கியசாஸ்த்திரத்திலும், பகவற்கீதையினுஞ், சித்தந் திரிகுணாத்துமகமென்று நிரம்பச்சொல்லி யிருக்கிறது. அந்தச்சித்தத்தினுடைய மூன்றுகுணங்களுஞ் சமுத்திர த்தின் அலைகள்போல நிரந்தரம் பரிணாமத்தையடையும்போது ஒரு க்கால் ஒருகுணம் மேற்கொண்டிருக்கும். மற்றவிரண்டுகுணங்கள் உள்ளடங்கியிருக்கும். அதிற் றமோகுணமேற்கொண்டிருக்கும்போது அசுரசம்பத்துண்டாகும். ரசோகுணம் மேற்கொண்டிருக்கும்போது லோகாதிவாசனைகள் மூன்றுகளுமுண்டாகுஞ் சத்துவகுணம் மேற் கொள்ளும்போது தெய்வசம்பத்துண்டாகும். இப்படி அந்தக்கரணங்

திரிகுணாத்துமகமாகத் தோணினாலுஞ் சத்துவகுணமே இதற்குமுக்கியமான உபாதானகாரணம். ரசோகுணந் தமோகுணம் இரண்டுஞ் சகாயமானபடியினாலே ஞானிக்கித் தியானாப்பியாசத்தினாலே ரசசு, தமசு, இரண்டுகுணங்களையும். போக்கடிக்கும்போது சத்துவகுணமே அந்தக்கரணசொரூபமாக மிஞ்சும். அந்தப்படி வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறது. அந்தச்சத்துவமுஞ் சஞ்சலத்துக்கேதுவான ரசோகுணமில்லாததினாலே ஏகாக்கிரமாயும், பிராந்தியினாற் கற்பிக்கப்பட்ட அனாத்துமரூபமான தூலபதார்த்தாகாரத்துக்கேதுவான தமோகுணமில்லாததினாலே*சூக்ஷமமாயும், இருப்பதினால் ஆத்தும தரிசனத்துக்கு யோக்கியமாயிருக்கும். அந்தப்படி கடவல்லியில் யேகாக்கிரமாயுஞ் சூக்ஷமமாகியுமிருக்கிற புத்தியினாலே ஆத்துமசொரூபத்தைத் தரிசிக்கலாமென்று சொல்லியிருக்கிறது.

பெருங்காற்றாலே அலையாநின்ற தீபத்தைக்கொண்டு ரத்தினலக்ஷணப் பரிட்சை யெப்படிப்பண்ணக்கூடாதோ. பெருத்திருக்கிற கடப்பாரையைக்கொண்டு வெகுசூக்ஷமமான பட்டுமுதலான வஸ்திரத்தை யெப்படி யிழையிடக்கூடாதோ. அப்படிப்போலச் சஞ்சலமாயுந் தூலமாயுமிருக்கிற புத்தியைக்கொண்டு அசஞ்சலமாயும், அதிசூக்ஷமமாயும், இருக்கிற ஆத்துமாவைத் தரிசனம்பண்ணக்கூடாது. அப்படிப்பட்ட இந்தச்சத்துவந்தானே தியானாப்பியாசமில்லாத அக்ஞானிகளிடத்திலே தமோ ரசோகுணத்தோடே சேர்க்கப்பட்டுக்கொண்டு வெகுவித தொய்தப்பிரபஞ்சத்தைச் சிந்திக்கிறபடியினாலே சித்தமாகும். அந்தச்சித்தமானது தமோகுணம் அதிகமாகிறதினாலே அசுரசம்பத்து விருத்தியடையும். அப்போது தூலமாகுமென்று ஸ்ரீவசிட்டர் சொல்லியிருக்கிறார்.

அதெப்படியென்றால்? அனாத்துமாவாயிருக்கிற தேகாதியில் ஆத்துமபுத்தியினாலுந், தேகமாத்திரத்தில் எப்போதும் ஆஸக்தையி

* சூக்ஷமமாயுங்கொண்டு-என்றும்-பாடம்.

ஞலும், புத்திரன் ஸ்திரீமுதலான சமுசாரத்திஞலும், அகங்காரத்தி ஞலுண்டாகப்பட்ட இது நமதென்கிறமமதையிஞலும், மானசதாப மாகிய ஆதியிஞலுஞ், சுரந், தலைவலி, வயிற்றுவலி, முதலானவியாதி யிஞலுஞ், சமுசாரத்திற்ருனே துக்கம் நீங்கிச் சுகமுண்டாகுமென் கிற புத்தியிஞலும், அதிற்ருனே இது தள்ளத்தக்கது இது கூட்டத் தக்கதுயென்கிற சிந்தையிஞலும், புத்திராதிகளிடத்திற் சினேகத்தி ஞலும், பணத்தாசையிஞலும், நல்ல ஸ்திரீகள் ரத்தினங்கள் ஆபரண ங்களிஞலும், பின்னும் மேலெழுந்தவாரியாய்ப் பார்க்கும்போது ரம்மியம்போலே தோணுகின்ற சத்தாதிவிஷயத்திஞலுஞ், சித்தமா னது. தூலமாகுமென்று சொல்லியிருக்கிருர். இப்படி நாசம்பண்ண த்தக்கதுகளான வாசனை மனதுகளுடைய சொரூபம் நிரூபிக்கப் பட்டுது.

இனிவாசனக்ஷய மனோநாசங்களைக் கிரமமாக நிரூபிக்கிறோம்.

அதில் - வாசனக்ஷயப் பிரகாரத்தை ஸ்ரீ வசிட்டர்சொல்லி யிருக்கிருர். அதெப்படியென்ருல்? விசனையின்சம்பந்தமே பந்தம் அதின் க்ஷயமே மோக்ஷம். ஆனதால், இராமா நீர் முந்திமானசவா சனைகளை விட்டுப்போட்டுப் பின்பு விஷயவாசனைகளைவிடும். அதின் பிறகு நிர்மலமாயிருக்கிற மைத்திரியாதி வாசனைகளை அப்பியாசி யும். அதற்குப்பிறகு அந்த மைத்திரியாதி வாசனைகளோடே விவகா ரம்பண்ணினபோதிலும் மனதில் நான் மைத்திரியாதி வாசனைகளை யுடைத்தானவனென்கிற அபிமானமன்றியிலே சகல ஆசைகளும் நீங்கினவராகிச் சின்மாத்திரவாசனையைப் பழகும். பிற்பாடு சவிகற் பமாயிருக்கிற சின்மாத்திரவாசனையையும் விட்டுப்போட்டு. ஒருவிக ற்பமுமன்றியிலே நிர்விகற்பமாயிருக்கிற சின்மாத்திரசொரூபத்திற் சமாதியையடைந்து எந்தமுயற்சியிஞலே கீழ்ச்சொன்ன மனோவி

காரத்தையெல்லாம் விட்டீரோ அந்தமுயற்சியையும் விட்டுவிடுமென்று ஸ்ரீ வசிட்டர் சங்கிரகித்துச் சொல்லியிருக்கிறார்.

அதைத்தானே நாமிங்கே விஸ்தாரமாய்ச் சொல்லுகிறோம்.

அதேதென்றால்? சத்தாதிவிஷயங்களை இச்சிக்கிறகாலத்திலுண்டாகிற சமஸ்காரமானை வாசனையென்றும், அந்தவிஷயங்களைப் புசிக்கிறகாலத்திலுண்டாகிற சமஸ்காரம் விஷயவாசனையென்றுஞ், சொல்லப்படும் கீழ்ச்சொல்லப்பட்ட லோகவாசனை, சாஸ்திரவாசனை, தேகவாசனை, அசுரவாசனை, நாலுகளும் இந்தமானசவாசனை விஷயவாசனைகளைக்காட்டிலும் வேறன்று. அந்தநாலுவித வாசனைகளையும் இங்கே இரண்டுவித வாசனைகளாகச் சொல்லியிருக்கிறது. இந்த இரண்டுவித வாசனைகளையும் முந்திவிடவேண்டும்.

சங்கை? வாசனைகளுக்கு மூர்த்திஇல்லாதபடியினாலே அதுகளை எப்படிவிடுகிறது. மூர்த்தி இருந்தாலன்றோ வாருகோலுனாலே கூட்டப்பட்ட தூளியோடேகூடின செத்தைகளைப்போல வாசனைகளைவிட்லாமென்று சங்கைவந்தால் அது கூடாது. ஏனென்றால்? லோகத்திலே°சுபாவமாய் வரப்பட்டபோசனக்கிரியையும், நித்திரையையும், மூர்த்தியன்றியிலேபோனாலும். போசனத்தியாகமாகிய உபவாசமும், நித்திரையின்றியர்கமாகியசாகரணமும், எப்படிக்கூடுமோ. அப்படிப்போல வாசனைகளுக்கு மூர்த்தியன்றியிலேபோனாலும் அதுகளை விடலாம். ஆனதாற் கீழ்ச்செய்யப்பட்ட சங்கைகூடாது.

சங்கை? இன்றையத்தினம் நிராகாரமாயிருந்து ராத்திரி நித்திரையன்றியிலே நாலுசாமத்திலும் பரமசிவபூசை பண்ணுவோமென்கிற சங்கற்பம்பண்ணிக்கொண்டு அந்தப்படி சாவதானமாயிருப்பதேபோசனநித்திரைகளைத் தள்ளிவிடுவனதென்றால்? அப்படியே

இங்கு பிரவைஷமந்திரத்தினால் ஏஷனை மூன்றுகளையும் விட்டுப்போட்டுப் பிரமாதமன்றியிலே சாவதானமாயிருக்கிறதை ஆர்தடிகொண்டு விலக்கினார்களென் றுத்தரம்.

வைதீகமந்திரத்தில் அதிகாரமில்லாத பேர்களுக்குத் தங்கள் தங்கள் பாஷையினாலே ஏஷனைமூன்றுகளையும் விட்டுப்போட்டேனென்று சங்கற்பித்துக்கொண்டு சாவதானமாயிருக்கலாமே அவடத்திற் கறி பருப்பு அன்னம் படுக்கை முதலானதுகளுடைய சன்னிதித்தியாகம் இருக்கிறதேயென்றால்? இவடத்திலுஞ் சிற்குச் சந்தனம் ஸ்திரீமுதலானதின் சன்னிதித்தியாகம் வேண்டியதுதான். அவடத்திற் பசிமுதலானதை மறக்கும்படியான புராணசிரவணஞ், சிவபூசை, நிர்த்தனங், கானம், வாத்தியமுதலானதாற் சித்தத்தைச் சுவாதீனப்படுத்துக்கொள்ளலாமேயென்றால்? இவடத்திலும் மைத்திரியாதிகளிலே சித்தத்தைச் சுவாதீனப்படுத்திக்கொள்ளலாம்.

மைத்திரிகளாவதேதென்றால்? பதஞ்சலிபகவான் சூத்திரத்திற் சொல்லியிருக்கிறார். அந்த அர்த்தத்தை நாமிங்கே சொல்லுகிறோம்.

சுகிகளாயிருக்கிற பிராணிகளிடத்திலே மைத்திரியைப் பாவிக்கிறவனுக்கு ராகம் நீங்கிச் சித்தம் நிர்மலமாகும். அதெப்படியென்றால்? முன் நன்றா யநுபவிக்கப்பட்ட சுகவிசேஷத்தை அனுசரித்து அந்தச்சுகம்போலே இருக்கப்பட்ட சகலசுகமுந் தனக்குவேண்டுமென்று உண்டாகிறசித்தவிர்த்தியே ராகம். அப்படிப்பட்ட ராகமானது திஸ்டமானசிற்குச் சந்தனவனிதாதி விஷயரூபமாயும் அதிஷ்டமான புண்ணியரூபமாயுமிருக்கிற சுகத்திற்குச் சாதனமான சாமக்கிரி இல்லாததினாலே புருஷனுடைய சித்தத்தை மலினமாகப் பண்ணிவைக்கும். எப்போ அந்தப்புருஷன் சுகிப்பிராணிகளிடத்

திலே சகலமானசுகிகளும் நம்முடையவாளென்கிற மைத்திரியைப் பாவிக்கிறானே அப்போது அவாளுடையசுகந் தன்னுடையசுகம் போலே யாகிறபடியினாலே அந்தச்சுகத்தில் வரப்பட்டராகம் நிவிர்த்திக்கும். அதற்குவமையேதென்றால்? தனக்கு ராச்சியமில்லாவிட்டாலும் புத்திராதிகளுக்குக் கிடைத்திருக்கிற ராச்சியத்தைத் தனது ராச்சியமாகப் பாவிக்கிறவனுக்கு அந்தராச்சியசுகந் தனது சுகம் போலே எப்படியாகுமோ அப்படிப்போலச் சுகிகளிடத்தில் மைத்திரியைப் பார்க்கிறவனுக்கு அவாளுடையசுகம் தன்னுடையசுகம் போலேயாகிறபடியினாலே ராகம் நிவிர்த்தித்துப்போய்விடும். அப்போதுவருஷாகாலம்போய்ச் சரற்காலம்வரும்போது நதிகளுடைய சலம் நிர்மலமாவதுபோலப் புருஷனுடையசித்தம் நிர்மலமாகிவிடும்.

அப்படியே தன்னால் அநுபவிக்கப்பட்டதுக்கவிசேஷத்தை அநுசரித்து இப்படிப்பட்டதுக்கமெல்லாம் ஒருக்காலும் நமக்குவேண்டாமென்றுண்டாகிற சித்தவிர்த்தி துவேஷம். அந்தத்துவேஷந் துக்கயேதுவான சத்துருசர்ப்பசோரவியாக்கிராதிகளிருக்கச்சே நீங்கமாட்டாது. துக்கயேதுக்களான சகலசத்துருவாதிகளையுஞ்சங்கரிக்கவுஞ் சத்தியிருக்கமாட்டாது. ஆனதாற் றுவேஷமானது சதாபுருஷனுடைய இருதயத்தைத் தகிக்குந் தனக்கெப்படித் துக்கம்பிரதிகூலமானதால்வேண்டாமோ அப்படியே அன்னியாளெல்லோர்களுக்குந் துக்கம்வேண்டாமென்கின்ற கருணையைத் துக்கிப்பிராணிகளிடத்தில் எப்போ பாவிக்கிறானோ அப்போ சத்துருவாதிகளிடத்தில் வரப்பட்ட துவேஷம் நிவிர்த்தித்துப்போய்ப் புருஷனுடைய சித்தம் நிர்மலமாய்விடும். அப்படியே ஸ்மிருதிசொல்லுகிறது. அதேதென்றால்? தன்தன் பிராணங்கள் தனக்கெப்படி இஷ்டங்களோ அப்படியே சகலசெந்துக்களும். பிராணங்களிஷ்டமானபடியினாலே

தன்னிடத்திற்போலப் பிறரிடத்திலுஞ் சாதுக்கள் தயைபண்ணுவா ளென்று ஸ்மிருதிசொல்லுகிறது.

அந்தத் தயையினுடைய பிரகாரத்தைப் பெரியவாள் சொல் லியிருக்கிறுள்.

அதெப்படியென்றுல்? இந்தப்பிரபஞ்சத்திற் சகலமானபேர் களுஞ் சுகிகளாயிருக்க்ட்டும். ஒருவருக்குந்துக்கம் வரவேண்டாம். எல்லாரும் புண்ணியங்களேபண்ணட்டும். ஒருவரும் பாவத்தைப்பண் ணவேண்டாமென்றிப்படிப் பெரியவாள் பிராத்திக்கிறுள். ஆனதாற் றுக்கிகளிடத்திற் கருணையைப்பாவிக்கிறவனுக்குத் துவேஷம் நீங்கிச் சித்தம் நிர்மலமாகும்.

அப்படியே புண்ணியவான்களிடத்தில் முதிதையும், பாவிக ளிடத்திலு உபேட்சையையும், பாவிக்கிறவனுக்கு விதனமன்றியிலே சித்தம்நிர்மலமாகும். அதெப்படியென்றுல்? லோகத்திலே பிராணிகள் சுபாவமாய்ப் புண்ணியபலமான சுகத்தை இச்சிக்கிறுர்கள். அதற்கு ச்சாதனமான புண்ணியத்தை யனுஷ்டிக்கிறுர்களில்லை. அப்படியே பாவமான துக்கத்தைத் துவேஷிக்கிறுர்கள். அதற்கேதுவான பாவ த்தைத்தானேமுயற்சியோடேகூட அனுஷ்டிக்கிறுாகள. அதனுற் புருஷனுக்கு மரணகாலவிதனமுண்டாகும் அந்தப்படி சுருதியிற் சொல்லியிருக்கிறது. எப்போ இந்தப்புருஷன் புண்ணியவான்களிட த்திற் சந்தோஷமாகியமுதிதையைப் பாவிக்கிறுனே அப்போ அந் தப்புண்ணியவாசனையினுலே தானும் பிரமாதமன்றியிலே புண்ணிய த்திற் பிரவருத்திப்பன். அப்படியே பாவிகளிடத்திலுபேட்சையைப் பாவிக்கிறதினுலே தானும்பாவத்தில் நின்றும் நிவிர்த்திப்பன். ஆன படியினுலே நாமேன் புண்ணியத்தைப் பண்ணுதேபோனேம்

என்பாவத்தைப் பண்ணினேனென்கிற மரணகாலத்தில் வரப்பட்ட விதனமுண்டாகமாட்டாது. அதினாற் சித்தம் நிர்மலமாகும்.

சுகிகளிடத்தில் மைத்திரியைப்பாவிக்கிறவனுக்கு ராகத்தினுடைய நிவிர்த்திமாத்திரம் பிரயோசனமன்று. பின்னையோவென்றால்? பிறர்குணங்களிலே பொறாமையாகிய அசூயையும், குணங்களிருக்கச்சே பிறருடைய தோஷத்தைத்தானே பிரகாசம்பண்ணுவதாகிய ஈரிஷைமுதலானது நிவிர்த்திக்கிறதும், பிரயோசனம். ஏனென்றால்? எப்போ மைத்திரிவசத்தினாலே பிறருடையசுகந்தன்சுகம்போலேயாகிறதோ அப்போ தன்குணத்திலே எப்படி அசூயைமுதலானதுண்டாகும் உண்டாகவேமாட்டாது. இப்படியே பின்னுஞ் சில தோஷங்களுடைய நிவிர்த்தியை நியாயமாக யுக்தியினாலே பார்த்துக்கொள்ளத்தக்கது.

துக்கிகளிடத்திற் கருணையைப்பாவிக்கிறவனுக்குச் சத்துருவாதி இமிசைக்கேதுவான துவேஷம் எப்படி நிவிர்த்திக்கிறதோ அப்படியே நம்முடையசத்துருக்கள் துக்கத்தை அநுபவிக்கிறார்கள். நாஞ்சுகத்தையே அநுபவிக்கிறோமென்கிற கெறுவமுதலானது நிவிர்த்திக்கும். நான்ஈசுரன், நான்போகி, நான் சித்தியுள்ளவன், நான் பெலவான், நான்சுகி, நான்பாக்கியமுள்ளவன், னெனக்குச்சமானமாக யாரிருக்கிறானென்றிப்படிக் கெறுவப்பிரகாரத்தைக் கீதையிற்சொல்லியிருக்கிறது. அந்தக்கெறுவமெல்லாங் கருணையினுடைய பாவனையினாலே நிவிர்த்திக்கும். இந்தப்படி சுகி, துக்கி, புண்ணியவான், பாவி, நாலுபேர்களிடத்திலும். மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை, நாலுகளையும். பாவிக்கிறதினாலே ராகந், துவேஷம், புண்ணியம்பண்ணாமை, பாவம்பண்ணுவது, முதலானதுகளினால் வரப்பட்ட சித்தமலம்நீங்கிச் சித்தம் நிர்மலமாகும். ஆனதால், இந்தநாலுகளையும் பழகவேண்டும்.

சங்கை? புண்ணியவான்களிடத்தில் முதிதையைப்பாவிக்கிறவனுக்குப் புண்ணியத்திற் பிரவருத்திபலமாகச் சொல்லப்பட்டுதே. தியானம்பண்ணுகிற புருஷனுக்கு அது கூடாது. ஏனென்றால்? மலினமாயிருக்கிற சாஸ்திரவாசனையினாலே புண்ணியத்தையுட்படுத்தி முன்சொல்லப்பட் டிருக்கிறதன்றோ ஆனதால், முன்னுக்குப் பின்விரோதம்வந்துதேயென்றால்? அது தேவையில்லைத் திரும்பித் திரும்பிச் ஜன்மத்தைக்கொடுக்கிற காமியகருமம் மலினமென்று முன்னேசொன்னோம். இப்போஇங்கே தியானாப்பியாசத்தினாலுண்டாகிறதாய்ச் சித்தமலத்தைப் போக்கிவைக்கிறதாய்த் திரும்பிச் ஜன்மத்தைக் கொடாத்தாயிருக்கிற நிஷ்காமபுண்ணியத்தை முதிதைக்கிப்பலமாகச்சொன்னோம். ஆனதால், யாதொருவிரோதமுமில்லை.

சங்கை? இந்தநியாயப்படி தியானமில்லாத பேர்கள்கூடப் புண்ணியவான்களிடத்திலே முதிதையைப்பாவித்துப் புண்ணியத்திலேயே பிரவருத்திப்பார்களேயென்றால்? பிரவருத்திக்கட்டுமே அதினால் நம்மதென்ன கெட்டுப்போகும் ஒன்றும் போகாது. எவாள் மைத்திரியாதிகளினாற் சித்தத்தை நிர்மலமாகப் பண்ணிக்கொள்ளுகிறார்களோ அவாளே தியானிகள்.

வாசிஷ்டத்தில் மைத்திரியாதிகளை அப்பியாசிக்கச்சொல்லிக் கோடி கர்ண்பித்திருக்கிறது. ஆனதாற் பயமில்லாமை முதலான தெய்வசம்பத்தும், மானமும், டம்பமில்லாமை முதலான ஞானசாதனமும், ஜீவன்முக்தரிடப்பிரக்ஞாதி லக்ஷணத்திற் சொன்னதருமங்களுஞ் சுபவாசனைகள். ஆனதால், மலினவாசனைகள் நீங்கவேண்டியதின்பொருட்டு அதுகளையும் அப்பியாசிக்கவேண்டும்.

சங்கை? அனந்த சுபவாசனைகளிருக்கிறதுகளே அவ்வளவு வாசனைகளையும் ஒருவனாலே அப்பியாசிக்கிறதற்குச் சத்தியிராதே.

அந்தச்சுத்தவாசனைகளினாற் போக்கத்தக்கதான சகலமலினவாசனைகளும் ஒருவனிடத்திலிராதே. ஆனபடியினாலே, யெல்லாச்சுபவாசனைகளையும் அப்பியாசித்துப் பிரயோசனமில்லையே, வைத்தியசாஸ்திரத்திற்சொன்ன சகலஔஷதங்களும் ஒருவனாற் புசிக்கிறதற்குக் கூடாதே. அப்படிப்புசித்ததினாற் போக்கத்தக்கதுகளான சகலரோகங்களும் ஒருவனிடத்திலிராதுகளேயென்றால்? தன்னுடைய சித்தத்தை முன்னே சோதித்துக்கொண்டு அதிலெவ்வளவு மலினவாசனைகளெப்போ அநுபவிக்கப்படுகிறதுகளோ அப்போது அவ்வளவு சுபவாசனைகளை அந்த மலினவாசனைகளுடைய நிவிர்த்தியின் பொருட்டு அப்பியாசிக்கவேண்டும். புத்திர, மித்திர, களத்திராதியினாற் பீடிக்கப்பட்டபுருஷன். அதில்நின்றும் விரக்தனாய்க்கொண்டு அந்தத் துக்க நிவிர்த்தியின்பொருட்டு எப்படிச்சந்நியாசம்பண்ணிக்கொள்ளவேண்டுமோ. அப்படியே வித்தியாமதந், தனமதங், குலமதம், ஆசாரமதம், முதலான மலினவாசனைகளினாலே பீடிக்கப்பட்டபுருஷன். அந்தத்துக்கம் நிவிர்த்திக்கிறதின்பொருட்டு அதற்கு விரோதியான விவேகத்தை அப்பியாசிக்கவேண்டும்.

அந்தவிவேகத்தைச் ஜனகமஹாராஜா காண்பித்திருக்கிறார். அதெப்படியென்றால்? இப்போ யெவாள் மஹாஉத்தமமான லோகங்களிலேவசிக்கிறார்களோ அவாள் சிலநாளையிலே கீழேவிழுந்துவிடுவார்கள். அப்படியிருக்க ஏ மனதே இந்தராஜ்ஜியமுதலான சொற்பமகிமையி லுனக்கென்ன நம்பிக்கை. அப்படியே முன் வெகுபிரசித்தாளாய்ச் சக்கிரவர்த்திகளாயிருந்த ராஜாக்களெல்லா மெங்கே. அவாளுடைய தனமுதலானதுமெங்கே. முன் மகாகுலத்திலுண்டானவாளாயும் உத்தமாசாரசம்பன்னளாயுமிருந்த பெரியவாளெல்லோருமெங்கே. ஒருவரையுங்காணேமே. உனக்குமாத்திரந் தன்குலமுதலானதிலென்னநம்பிக்கை. எத்தனைகோடி பிரமாக்களோ போய்

விட்டார்கள். அவாளுடைய பிரபஞ்சங்க ளெத்தனைகோடிக ளிருந்தவிடந் தெரியாமற்போய்விட்டுதுகள். நீமாத்திரமெப்படித்தீர்க்க காலஞ்ஜீவித்திருக்கப் போகிறையோ தெரியவில்லை. அதுவுமன்றியிலே இப்பொழுதுகூட யெவாள் கண்ணைத்திறந்தமாத்திரத்திற் ஜகத்துக்களுண்டாகிக் கண்ணைமூடினவுடனேநசித்துப்போகிறதுகளோ. அப்படிப்பட்ட மஹாத்மாக்களிருக்கச்சே. என்னைப்போலிருக்கப்பட்டவாளுடைய பவிஷியம் யென்னவென்று இப்படிச் ஜனகமஹாராஜா விவேகத்தைக்காண்பித்திருக்கிறார்.

சங்கை ? நித்தியாநித்தியவஸ்து விவேகாதிசாதனமன்றியிலே பிரமஞானமுண்டாகாது. ஆனபடியினாலே இந்த விவேகந் தத்துவஞானமுண்டாகிறதற்குமுன் வேண்டியதன்றோ? இங்கேயோ வென்றால்? பிரமசாக்ஷாத்காரம் வந்தவனுக்குச் ஜீவன்முக்தியின் பொருட்டு வாசனக்ஷயமுதலான சாதனத்தைச் சொல்லுகிறதற்காக ஆரம்பிக்கப்பட்டுதே. ஆனதால், அகாலத்திலே இதென்னகூத்துவந்ததென்றால்? இது கூத்தன்று. ஏனென்றால்? முந்திச்சாதன சம்பத்தியுள்ளவனுக்குப் பின்பு பிரமஞானமென்று எல்லாருக்கும் பிரசித்தமான சாதாரணமார்க்கம். ஜனகருக்கோவென்றால்? பூருவபுண்ணியவிசேஷ பரிபாகத்தினாலே ஆகாசபலம்போலே அகாரணத்தினாலே சித்தர்கீதையின் சிரவணமாத்திரத்தினாலேயே பிரமஞானமுண்டாயிற்று. பின்பு சித்தவிசிராந்தியின்பொருட்டு இந்தவிவேகம் பண்ணப்பட்டபடியினாலே இதுயுக்தந்தான்.

சங்கை? ஆனபோதிலும். பிரமஞானம் வந்தபிற்பாடு இந்தவிவேகம் பண்ணப்பட்டபோதிலுஞ் ஜனகருக்கு மலினவாசனை தொடாதபடியினாலே சுத்தவாசனை யப்பியாசம்வேண்டாமே. ஆனதால்,

இந்த விவேகம்வேண்டியதில்லையென்றால்? ஜனகருக்கு மலினவாசனை தொடர்ந்து வராததுகொண்டு விவேகம் வேண்டாதே போனாலும். யாக்ஞவற்கர், பகீரதன், முதலானபேர்களுக்கு மலினவாசனைதொடர்ந்துவந்திருக்கிறபடியினாலே அவர்களுக்கு விவேகம் வேண்டியது தான். யாக்ஞவற்கருக்கும், அவருடையபிரதிவாதிகளான உஸத்தாக் கோளர் முதலானவர்களுக்கும், வெகுவித்தியாமதமுண்டென்று பிரகதாரண்ணியசுருதியை விசாரித்துப்பார்க்கும்போது நன்றாய்த் தெரியப்படுகிறது. யாக்ஞவற்கருக்குப் பிரதிவாதிகளைச் ஜெயிக்கிறதற்கேற்பட்டபடியினாலே வித்தியாமதம் யெப்படியுண்டோ. அப்படியே வெகுபிரமவித்துக்களுக்குமுன்னே நிறுத்தப்பட்டதுகளாயுஞ், சுவர்ண அலங்காரங்களோடே கூடினதுகளாயும், இருக்கிற ஆயிரம்பசுக்களைத் தான் கிரகித்துக்கொண்டு பின்பு ஜனகமஹாராஜா சபையிலிருக்கப்பட்ட பிரமவித்துக்களைப்பார்த்து நாம் பிரமநிஸ்டர்களின்பொருட்டு நமஸ்காரம்பண்ணுகிறோம். நமக்குப் பசுக்களிலேதானிச்சையென்று பரிகாசமாய்ச் சொன்னபடியினாலே தனத்திணைசையுமுண்டு. இதுவுமன்றியிலே அந்தச்சபையிலிருந்த பிரமவித்துக்கள் இவரொருவர் நமக்குக்கிடைக்கும்படியாயிருந்தகோதானத்தை அபகரித்துக்கொண்டாரேயென்று மஹாகெறுவத்தோடே கூடினவாளாய்ப் பிரம விஷயமாக வெகு கேள்விகேட்டார்கள் அதுக்கெல்லாமுத்தரஞ்சொல்லிப்போட்டு வேதாந்தமரியாதையைத்தாண்டி அதிகசங்கை பண்ணின சாகல்லியனைக் குரோதத்தினாற் சபித்துக் கொன்றுபோட்டார். இப்படிப் பிரமகத்திபண்ணின யாக்ஞவற்கருக்கு மோக்ஷமில்லையென்று சங்கிக்கக்கூடாது. ஏனென்றால்? பிரமஞானிக்கி மாதாவினுடைய வதத்தினாலும், பிதாவினுடையவதத்தினாலுஞ், சுவர்ணத்தையபகரிக்கிறதினாலுங், கெற்பசிசுவதத்தினாலும், மற்ற சகல பாவ கருமத்தினாலும், ஒருபலமுமில்லையென்று கௌஷதகி உபநிடதத்திற் சொல்லியிருக்கிறபடியினாலும், அப்படியே சேஷாரியையிலே

லட்சம் அசுவமேதயாகம் பண்ணினபோதிலும், லட்சம்பிரமகத்தி பண்ணினபோதிலும், பரமார்த்தமான பிரமசொரூபத்தை அறிந்தவனுக்கு அந்தப்புண்ணியபாவ சம்பந்தங்கிடையாதென்று சொல்லியிருக்கிறபடியினாலும், கீழ்ச்செய்த சங்கைகூடாது. நிரம்பச்சொல்லியென்ன பிரமவித்துக்களாயிருக்கிற யாக்ஞவற்காதிகளுக்கு மலினவாசனைகளுடைய தொடர்ச்சி யுண்டாவேயுண்டு.

பகீரதனும் பிரமதத்துவத்தை அறிந்துராஜ்ஜியபரிபாலனம் பண்ணும்போது மலினவானசனைகளினாற் சித்தவிசிராந்தி வாராததுகண்டு சகலத்தையும் விட்டுப்போட்டுப் பின்பு சித்தவிசிராந்தியை அடைந்தானென்று வாசிட்டகதையிற் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனதாற் பிறருடைய தோஷத்தைப்போலத் தன்னுடைய மனதிலிருக்கப்பட்ட மலினவாசனைகளை நன்றாய்ச்சோதித்துப்பார்த்து அதுகள் நிவிர்த்திக்கும்படியான உபாயத்தைச் செம்மையாயப்பியாசிக்கவேண்டும். அப்படியே ஸ்மிருதியிற் சொல்லியிருக்கிறது. அதேதென்றால்? லோகத்திலே புத்திமானாய்ச் சமர்த்தனாயிருக்கிறபுருஷன் பிறருடைய தோஷங்களை வெகுசாக்கிரதையா யெப்படியாராய்ந்து பார்க்கிறானோ அப்படிப்போலத் தன்னுடைய தோஷங்களை நன்றாயாராய்ந்துபார்க்கிற யெந்தப்புருஷன்தா னிந்தச்சமுசாரதுக்கத்தில் நின்றும் விடுபட்டு மோக்ஷசுகத்தை யடையமாட்டானென்று ஸ்மிருதியிற்சொல்லியிருக்கிறது.

முன்னம் முன்னே வித்தியாமதம் நிவிர்த்திக்கிறதற்கு உபாயமேதென்றால்? எந்தஇடத்திலாகட்டும் யாராகட்டும் நம்மையுஞ் ஜெயிக்கிறவாளிருப்பாள். அதினாலபஜெயஞ் சிலயிடங்களில் யெப்படியும் வந்துவிடுமென்கிற விவேகமே பிறரைக்குறித்துத் தன்மனதிலிருக்கப்பட்ட வித்தியாமதம்போகும்படியான உபாயம். அதற்

குதாரணமேதென்றால்? சுவேதகேதுவானவன் வித்தையினாலேமத்தனாய்ப் பிறவாகணனென்கிற ராஜாவினுடைய சபையிலேபோய் வசிக்கும்போது அந்தராஜா பஞ்சாக்கினிவித்தையிற் பரிட்சைபண்ணினான் அப்போ அந்தவித்தை சுவேதகேதுவுக்குத் தெரியாதபடியால் அதற்குத்திரஞ் சொல்லமாட்டாமல் ராஜர்வினால் வெகுவித மாயவமானம் பண்ணப்பட்டவனாய்க்கொண்டு தன்பிதாவினுடைய சமீபத்தில்வந்து ராஜாவினுடைய சபையிற் றனக்குவந்த அவமானத்தைச்சொல்லிக்கொண்டான் பிதாவாகிய உத்தாலகர் தனக்குவித்தியாமதமில்லாததினாலே அந்தராஜாவிடத்தில் வந்துசேர்ந்து அவனிடத்தில்நின்றுந்தானே அந்தவித்தையை யடைந்தாரென்றும், வாலாகியென்கிறவன் வித்தையினாலே கெறுவத்தையடைந்து காசியிலே அசாதசத்துருவென்கிற ராஜாவோடே வாதம்பண்ணி அந்தராஜாவினால் அவமானப்பட்டபிற்பாடு வித்தியாகெறுவத்தை விட்டுப்போட்டு அந்தராஜாவைத்தானே பிரமவித்தியாலாபத்தின் பொருட்டுச் சரணமாயடைந்தானென்றும், உஸத்தாக்கோளர் முதலானபேர்கள் யாக்ஞவற்காற் ஜெயிக்கப்பட்டாரென்றும், உபநிடதங்களிற் சொல்லியிருக்கிறதே உதாரணம். எப்போதன்னைக்குறித்துப்பரன் வித்தியாமதத்தினால் நிந்தித்து அவமானம்பண்ணுகிறானோ அப்போ பரன் நம்மை நிந்தித்தாலும், அவமானம்பண்ணினாலும், அதினால் நமக்கென்னகெடுதல் ஒன்றுமில்லையென்கிற விவேகத்தைப் பழகவேண்டும். அந்தப்படி பெரியவாள்சொல்லியிருக்கிறாள். அதேதென்றால்? தியானம் பண்ணுகின்ற யாதொருபுருஷனுக்குப் பிறராற் பண்ணப்பட்ட நிந்தையும், அவமானமும், அலங்காரம்போலே தோணுகிறதே அப்படிப்பட்ட புருஷனுடைய சித்தத்துக்கு விட்க்ஷேபம்வரும்படியாக வாயாடிகளான வாதிகள் எப்படிப்பண்ணிவைப்பாள் மாட்டார்களென்று சொல்லியிருக்கிறாள்.

நிந்தையைச் சகிக்கிறதற் குபாயமேதென்றால்? ஆராகிலும் நம்மை நிந்தித்துக்கொண்டு சந்தோஷத்தை யடைவாளேயானால் அதைக்காட்டிலும் நமக்கு வேறேயென்ன அனுக்கிரகம்வேண்டியது. ஏனென்றால்? லோகத்திலே நன்மைவேண்டுமென்று யெண்ணுகிறபுருஷாள் பாருடையசந்தோஷத்தின்பொருட்டுத் தேசாந்தரங்களிலேபோய் வெகுவருத்தப்பட்டுச் சம்பாதித்த தனமுதலானதுகளைக் கொடுத்துவிடுகிறார்களே. அப்படியொன்றுமன்றியிலே நம்மை நிந்தித்தமாத்திரத்தாற் பராளுக்குச் சந்தோஷம்வருமானால் அதைவிட நமக்கென்னநன்மைவேண்டும் அதுவேநன்மையென்றும். எப்போதுஞ் சுகமன்றியிற் றுக்கத்தோடேகூடின இந்தச் ஜீவலோகத்திலே யாராகிலும் நம்மை நிந்தித்ததினாலே சுகத்தையடைவாளேயானால் அப்போநமக்குப் பிரத்தியக்ஷமாயாகட்டும், அப்பிரத்தியக்ஷமாயாகட்டுந் தங்களுக்குத்தோணினபடி வேண்டியமட்டுக்கும் நிந்திக்கட்டும். ஏனென்றால்? வெகுதுக்கத்தோடேகூடின இந்தச்ஜகத்திலே சுகங்கிடைக்கிறது துர்லபமன்றோ. ஆனதாற், பராள்நம்மை நிந்தித்துக்கொண்டு சுகத்தையடைகிறதே நமக்குநன்மையென்று இப்படிப்பட்டவிவேகத்தைப் பழகிறதே நிந்தையைச் சகிக்கிறதற் குபாயம். இதுபோலவே அவமானத்தைச் சகிக்கிறதற்குபாயத்தை யுக்தியினாலே பார்த்துக்கொள்ளவேண்டும், அந்தப்படி ஸ்மிருதியிற் சொல்லியிருக்கிறது.

அதேதென்றால்? தியானியானவன் பெரியவாளுடைய மரியாதையைமாத்திரந் தாண்டாமல் மூடாளானபேர் தன்னைக்காணும்போது அவமானம் பண்ணும்படியாயும், அவாள்தன்னோடே சேர்ந்து வம்புபண்ணித் தியானவிரோதம் பண்ணாமலிருக்கும்படியாயும், நடக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறது.

தனத்திறைசை நிவிர்த்திக்கிறதற்குபாயமேதென்றால்? முன்னே தனத்தைசம்பாதிக்கிறதே துக்கம். பின்பு அதைக்காப்பாத்துகிறதுந் துக்கந்தான். பிற்பாடு வியாபாரம்பண்ணியும், வட்டிக்கிக்கொடுத்தும், நிலமுதலானதைவாங்கியும், அதைவிருத்திபண்ணுகிறதுந் துக்கந்தான். சிலவுபண்ணும்போதுந் துக்கந்தான். இப்படியிருக்கச்சே அந்தத்தனஞ் சோராதியினால் நசித்துப்போனால் அப்போவரப்பட்ட துக்கத்துக்குக்கணக்கில்லை. ஆனதாற், தனத்தைச்சுட வேண்டும். அதினாற்றுக்கமேயொழியச் சுகம் லேசமுங் கிடையாதென்கிற விவேகமே தனத்திறைசை நிவிர்த்திக்கிறதற்குபாயம்.

ஹ

பரானைக்குறித்துத் தன்மனதில் வரப்பட்டகோபம் நிவிர்த்திக்கிறதற் குபாயமேதென்றால்? ஏ மனதேயுனக்கு அபகாரம்பண்ணுகிறவனிடத்திற் கோபம்வருமானாற் கோபத்தினிடத்தி லுனக்கேன் கோபம்வரவில்லை அப்படிக்கோபம் அபகாரியோவென்றால், அபகாரிதான். அதெப்படியென்றால்? தருமார்த்தகாமமோக்ஷமான புருஷார்த்தம் நாலையும். ஒருகோபந்தானே அதம்பண்ணிப்போட்டுப் புருஷனை நரகத்திற் றள்ளிவிடுகிறதன்றோ. ஆனதால், அதைப்போலே வேறேஅபகாரிகிடையாது. இந்த அர்த்தத்தை நீ நன்றாய் விசாரித்துப்பார்த்துக் கோபத்தினிடத்திற் கோபத்தைப்பண்ணு அதினாற்சாந்திவந்துனக்குப் பரமபுருஷார்த்தங் கிடைக்குமென்றுங், கோபமானது வசவடிமுதலான தன்னுடைய பலபரியந்தம் வளர்ந்துதேயானால் அப்போ தருமார்த்தங்கீர்த்திமுதலானதை நாசம்பண்ணிப்போடுந் தனக்குச் சத்தியில்லாததினாலே பலபரியந்தம் வளராமல் மனதிற்றானே யுண்டாயிருக்குமேயானால் அப்போ தன்மனதைத்தானே நன்றாய்த்தகிக்கும். ஆனதால், யாதொருகோப மிந்தலோகத்திலும், பரலோகத்திலும், உபகாரத்தின்பொருட்டாகாமல் அனர்த்தத்தின் பொருட்டாகிறதோ அப்படிப்பட்டகோபஞ் சாதுக்

களுடையமனதில் யெப்படியுண்டாகும் உண்டாகவேமாட்டாதென்றும், இப்படிப்பட்டவிவேகத்தைப் பழகுவதே பராளைக்குறித்து வரப்பட்ட கோபம் போகிறதற்குபாயம்.

தன்னைக்குறித்துப்பராள் எப்போ கோபித்துக்கொள்ளுகிறார்களோ அப்போ இந்தச்ஜனங்கள் நாமொரு அபராதமும்பண்ணாமலிருக்கச்சேகூட அகாரணத்திலே வீணாய் நம்மைக்குறித்து யேன் கோபம் பண்ணுகிறார்களென்று நினைக்கக்கூடாது. ஏனென்றால்? யாதொருகாரணத்தினாலே பராள்கோபம் பண்ணுகிறதற்குமுன்னமே நாமிந்தச்சமுசாரத்தில்நின்றும்விடுபட்டு அசரீரனாய்ச் சரீரத்திரயமன்றியிலே சச்சிதானந்த பிரமசொரூபமாத்திரமாக மிஞ்சுவதாகிய மோக்ஷத்தையடையவில்லையோ. அதுவே நம்மிடத்தில் வெகுபெரிதான அபராதமன்றோ. ஆனதால், நம்மிடத்திலொரு அபராதமுமில்லையென்று நாமெப்படிநினைக்கலாம் நினைக்கக்கூடாது. இப்படி இந்தவிவேகம் பராள் கோபித்துக்கொண்டபோதிலும் அதினாற்றன்னுடையமனதில் விக்ஷேபம்வாராமலிருக்கிறதற்கெப்படி உபாயமோ அப்படிப் பின்னும் ஒருபாயமுண்டு. அதேதென்றால்? ஏ கோபித்துக்கொள்ளுகிற ஜனங்களே உங்களுடைய கோபத்தின்பொருட்டு நான் நமஸ்காரம் பண்ணுகிறேன் ஏனென்றால்? உங்களுடையகோபமானது யென்னிடத்திலிருக்கப்பட்ட சகலதோஷங்களையும் நன்றாய்த் தெரியப்படுத்தி அதின்வழியாக யெனக்கு நல்லவைராக்கியத்தையுண்டுபண்ணுகிறதுமல்லாமல் உங்களுடையமனதையும் பொசுக்கிறதன்றோ இதைவிட யெனக்கு வேறேயென்ன உபகாரம்வேண்டும் ஆனதாலுங்களுடைய கோபத்தின்பொருட்டு நான் அனந்தநமஸ்காரம்பண்ணுகிறேனென்றிப்படிச் செய்கிறவிவேகமும் ஒருபாயம்.

ஸ்திரியினிடத்தில் வரப்பட்ட ஆசைநீங்கும்படியான விவேகம் வாசிட்டத்திற்சொல்லப்பட்டிருக்கிறது. அதெப்படியென்றால்?

எலும்பு, நரம்பு, மாமிசங்களினுற் கட்டப்பட்டுத் தோலினுல் மூடப்பட்டிருக்கிற பொம்மைரூபமான ஸ்திரீயினுடைய அவயவங்களுக்குள்ளே யெந்த அவயவந்தான் சுந்தரமாயிருக்கப்பட்டது யெல்லாம் அத்தியந்தம் அமங்களந்தான். அதெப்படி யென்ருல்? ஏ மனதே! யெந்தஸ்திரீயினுடைய நேத்திரத்தைக்கண்டு மயங்கிக் கருநெய்தற் புஷ்பம்போலவுந், தாமரை மடல்போலவும், வெகுசுந்தரமாயும், மச்சம்போலக் காதுபரியந்தம் நீண்டதாயுமிருக்கிற நேத்திரத்தினுலே இந்தநாயகியானவள் நம்மிடத்தில் ஒருதரங் கடாக்ஷம் பண்ணி நம்மைத் தன்னியனுகப் பண்ணுவாளாவென்று யெண்ணியெண்ணி மயங்கிச் சாகிறயோ அந்தநேத்திரத்திலிருக்கப்பட்ட மாமிசம், ரத்தங், கண்ணீர், பூளை, நாத்தமுதலானதை. விவேகத்தினுலே வெவ்வேருய்ப்பிரித்து நீ நன்ருய் விசாரித்துப்பாரு அப்படி விசாரிக்கும்போது அந்த நேத்திரம் உனக்கேற்க ரம்மியமாயிருந்தால் நீ மயங்குகிறது யுக்தந்தான் அப்படியில்லாமலிருக்கச்சே யேன்வீணுய் மயங்கிமயங்கிச்சாகிருய் அப்படியே ஸ்திரீயினுடைய யெந்த ஸ்தனங்களைக்கண்டு மயங்கிச் சுவர்ணகும்பங்கள் போலவுஞ், செவ்விளநீர்கள் போலவும், உருண்டு திரண்டு வெகுஉன்னதங்களாயும், இன்னம் ஒருதரம் பாரோமோவென்று வெகுவாய்த் திருஷ்டிக்கிப்பிரியங்களாயு மிருக்கிற ஸ்தனங்களோடேகூடின இந்தநாயகியானவள். ஒருதரமாகிலும் நம்மைத்திடமா யாலிங்கனம் பண்ணிக்கொள்ளுவாளா நாமுமிந்த நாயகியை ஒருதரமாகிலு மாலிங்கனம் பண்ணிக்கொண் டிவளுடைய சம்போக சாம்பிராஜ்ஜியசுகத்தை யடையும்படியான க்ரீடம்பண்ணி இருப்போமோவென்று இப்படி வெகுவிதமாகமயங்கிறயோ அந்தஸ்தனங்க ளிலிருக்கப்பட்ட மாமிசமுதலானதைமுன்போல விவேகத்தினுலே பிரித்துப்பார்த்து ரம்மியமாயிருந்தால் அப்போ அந்தவிஷயத்தில் நீ பிரவருத்திக்கிறது யுக்தந்தான் அப்படி ரம்மியமன்றியிருக்க என் விருதாவாய்க் கெட்டுப்போகிருய் எந்தஸ்தனங்களிலே மேரு

பருவதசிருங்கத்தில் விளங்காநின்ற கெங்காப்பிரவாகம்போலிருக்கப் பட்ட முத்தாரங்கள் காணப்பட்டுதுகளோ அந்தஸ்தனங்கள் தானே சிலநாளையிலே மயானத்திலேயுந், திக்குவிதிக்கிலேயும், நாய்களினாலே சோற்றுப்பிண்டம்போலே பட்சிக்கப்பட்டதுகளாகக் காணப்படுதுகளோ அப்படிப்பட்ட ஸ்தனங்கள்முதலான ஸ்திரீயினுடைய அவயவங்களிலே ஆசைவைக்கிறது நரகத்துக்கேதுவன்றியில் வேறேயில்லை. பின்னும் யாதொருத்தனுக்கு ஸ்திரீ இருக்கிறாளோ அவனுக்குப் போகேச்சையுண்டு அவளில்லாவிட்டால் அந்த இச்சைக்கேது கிடையாது. ஆனதால், ஸ்திரீயொருத்தியைவிட்டால் வெகு வாகுவாய்ச் ஜகத்திலிருக்கிற விஷயங்களெல்லாம் விடப்பட்டதுகளாகும். அவ்விடுதியினாற் சுகங்கிடைக்குமென்று இது முதலின்னம் வெகுவிதமாய் வாசிட்டத்திற் சொல்லப்பட்டவிவேகமே ஸ்திரீயினாசைபோகிறதற்குபாயம்.

புத்திரனிடத்தில் வரப்பட்ட ஆசைபோகும்படியான உபாயம் பிரமானந்தப் பிரகரணத்திற் காண்பிக்கப்பட்டிருக்கிறது. அதேதென்றால்? முன்னே புத்திரனுண்டாகாமலிருக்கச்சே புத்திரனில்லையென்றும், யெவ்விதமாகிலும் புத்திரனை உண்டுபண்ணிக்கொள்ளவேண்டுமென்றும், மாதாபிதாக்களுக்குத் துக்கம். பின்பு கெற்பமானபோதிலும் பாதியிலே பிண்டம் யெங்கே கரைந்துபோய்விடுமோவென்று துக்கம். பிறகு சுகப்பிரசவமாக வேண்டுமேயென்று துக்கம். பிரசவகாலத்தில் வரப்பட்ட துக்கத்துக்கோ கணக்கில்லை. பிறந்தபின்பு வாலக்கிரகம்பிடித்தாலும், ரோகம்வந்தாலுந், துக்கந்தான். குமாரனாயிருக்கச்சே அசல்வீட்டுப்பிள்ளைகளோடே சண்டைப்பட்டு விஷமம்பண்ணும்போதுந் துக்கமே. உபநயனம்பண்ணினபிற்பாடு வித்தைவாராமலிருந்தா லதுவுந்துக்கமே. வித்தைவந்தபோதிலுந் தரித்திரத்தினாற் கலியாணம்பண்ணச் சத்தியில்லா

விட்டால் அதொருதுக்கம். யெவ்வனம்வந்தவுடனே பரஸ்திரீக ளைப் பிடிக்கிறதினுல் மஹாதுக்கம். வீட்டிலே நாலுகுட்டிகள்பிற ந்து வெகுகுடும்பியாயிருக்கச்சே அன்னவஸ்திரங்களுக்குக் கிடை யாமலிருந்து கஷ்டப்படுவதொருதுக்கம். பணங் காசு வித்தை குடும்ப மெல்லாமொத்திருக்கச்சே அந்தப்பிள்ளை செத்துப்போனுல் அப்போ மாதாபிதாக்களுக்குவரப்பட்ட துக்கத்துக்கு முடிவில்லை. இப்படிப் புத்திரனுலே உற்பத்தியாகிறதற்குமுன்னேதொட்டு மரணபரியந்தந் துக்கம் அநுபவிக்கத்தக்கதாகயிருக்கச்சே அந்தப்புத்திரனைப் புத்தி மானுயிருக்கிறவனுருதா னிச்சிப்பனென்கிற விவேகம் புத்திரனிடத்தி லாசைவாராமலிருக்கிறதற்குபாயம்.

எப்படி வித்தியாமதந், தனம், ஆசை, கோபம், ஸ்திரீ, புத்திரா ளிடத்தில். ஆசைகளாகிய மலினவாசனைகள் நீங்கும்படியான உபா யங்காண்பிக்கப்பட்டதோ. அப்படிப்போல மற்ற மலினவாசனைக ளும் நீங்கும்படியான உபாயத்தைச் சாத்திரத்திஞலும், யுக்தியினுலும், பார்த்துப் பழகவேண்டு. அப்படிச் செய்யப்பட்ட விவேகாப்பி யாசமாகிய சுத்தவாசனையின் பழக்கத்தினுலே மலினவாசனைகளெல் லாம் நீங்கும். அப்போது ஜீவன்முக்திரூபமான பரமபதங்கிடைக் கும். அந்தப்படி வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறது.

அதேதென்முல்? வாருமிராமா நீர் சகலமலினவாசனைகளும் போகும்படியான முயற்சியைப் பண்ணினீரேயானுல் அப்போ உமக் குச் சகல ஆதிகளும் வியாதிகளும் அந்தக்ஷணமே. நீங்கிப்போய் விடும். ஆனதாற் புருஷமுயற்சியினுல் நடுவிலே யெப்படிப்பட்ட விக்கினம் வந்தாலும் பின்வாங்காமல் வெகுதைரியத்தோடே கூடச் சகலவாசனைகளையும் விட்டுப்போட்டு நிர்விகற்ப சமாதிநிஸ்டையை யடையும். அதினுலுமக்குச் ஜீவன்முக்திப் பதங்கிடைக்குமென்றிரா மனைப்பார்த்து ஸ்ரீ வசிட்டராற் சொல்லப்பட்டிருக்கிறது.

சங்கை? இவடத்திற் புருஷமுயற்சியென்பது கீழ்ச்சொல்லப்பட்ட விஷயதோஷங்களுடைய விவேகமன்றோ? அந்தவிவேகம் அடிக்கடிபண்ணப்பட்டபோதிலும். பிரபலமாயிருக்கிற இந்திரிய வியாபாரத்தினாலே கெடுக்கப்பட்டுபோகுமே. அப்படியே பகவானுங் கீதையிற்சொல்லியிருக்கிறாரே. ஆனதால் விவேகாப்பியாசம் பண்ணியும் வியர்த்தந்தானேயென்றால்? அது சரிதான். ஆனால், அப்பியாசத்தினாற் சம்பாதிக்கப்பட்ட விவேகத்தை ரக்ஷிக்கிறதின்பொருட்டு இந்திரியங்களை நிரோதம்பண்ணவேண்டும். அதுவுங்கீதையிற் சொல்லப்பட்டிருக்கிறதன்றோ? இந்த அர்த்தம் வேறே ஸ்மிருதியிலுஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

(1) அதெப்படியென்றால்? யாதொரு சந்நியாசியானவன் பிக்ஷையெடுத்துப் போஜனம் பண்ணும்போது இந்த அன்னமுதலானது சட்ரசபேதமாய் நாக்குக்கு நல்லருசியாயிருக்கிறதென்றும், இது அப்படியில்லையென்று மெண்ணாமற் பராளுக்கு யிதமாயுஞ், சத்தியமாயுஞ், சொற்பமாயுமிருக்கிற வசனத்தைச் சொல்லுகிறானோ அவன் சிங்குவை இந்திரியமிருந்தாலும் அதில்லாதவனாவான்.

(2) யாதொருசந்நியாசி இப்போபிறந்தபெண்ணையும், பதினாறுவயதுள்ள யெவ்வனஸ்திரீயையும் நூறுவயதான கிளவியையும், பார்த்து அவாள் மூன்றுபேர்களையுங்குறித்துத் தன்மனதிலொருவிகாரமுமன்றியிருக்கிறானோ அவனுபஸ்த இந்திரியமிருந்தாலும் அந்த இந்திரியமில்லாதவனாவான்.

(3) யாதொருசந்நியாசி பிக்ஷையெடுக்கிறதற்காகவுஞ், சலமலம் விசர்சனம் பண்ணுகிறதற்காகவுஞ், சொற்பமாய்ச் சஞ்சாரம் பண்ணுகிறானோ யெப்போவாகிலும் யாத்திரைமுதலானது பண்ணவேண்டுமென்று தோணினாலொருயோசனை தூரத்திக்குமேற்

சஞ்சாரம் பண்ணவில்லேயோ அவன் பாதஇந்திரியமிருந்தாலும் அதி ல்லாதவன்றான்.

(4) யாதொருசந்நியாசியினுடைய நேத்திர இந்திரியமான தொருவிடத்திலிருக்கும்போதுஞ், சஞ்சரிக்கும்போதும், நாலுநுகத் தடிபரியந்தமான பூமியைவிட்டுப்போட்டதிகப்பிரதேசத்திற் சஞ்சரி த்து ரூபத்தைக்கிரகியாமலிருக்கிறதோ அவனுக்கந்த இந்திரியமிருந் தாலும் அதனுடைய வியாபாரம் அதிகமாக இல்லாததினாலே அந்தச் சந்நியாசி நேத்திரஇந்திரியமில்லாதவனென்று சொல்லப்படுவன்.

(5) யாதொருசந்நியாசி தனக்கிதமாயுஞ், சொற்பமாயும், மனதுக்குஞ், சுரோத்திரத்துக்கும், ரம்மியமாயுந், துக்கத்தைப்போ க்கிவைக்கிறதாயு மிருக்கிற ஜனங்களுடைய வசனத்தைக் கேட்டுங் கேட்கவில்லேப்போல இருக்கிறானே அவன் சுரோத்திர இந்திரிய மிருந்தாலும் அதில்லாதவனே.

நிரம்பச்சொல்லுவானேன் சகலவிஷயங்களும் யெதிரேயிருந்த போதிலும் அதுகளேயநுபவிக்கிறதற்கு யோக்கியங்களான சகல இந்திரியங்களோடேகூடியிருந்தபோதிலுந் தூங்குகிறவன்போலொரு இந்திரியவியாபாரமுமன்றியிலே இருக்கவேண்டும். பின்னுமொரு ஸ்திரீயோடேயும் வார்த்தை சொல்லக்கூடாது. முன்றன்னாலே காணப்பட்டஸ்திரீயை நினேக்கவுங்கூடாது. ஸ்திரீகளுடைய கதை யையுஞ்சொல்லக்கூடாது. சித்திரத்திலெழுதப்பட்ட ஸ்திரீயைக் கூடக் கண்ணாற்பார்க்கக்கூடாதென்று ஸ்மிருதியிற் சொல்லியிருக் கிறது.

ஆனபடியினாலே லோகத்திலே யேகவாரபோசனம், ராத் திரிபோசனமுபவாசம், மௌனமுதலான விரதத்தைக் கருமியாயிருக்

கிறவன் சங்கற்பித்துக்கொண்டு அந்தப்படியந்த விரதத்தைச் சாவதானமாய் நடுவிலே விட்டுவிடாமல் ரட்சிக்கிருனே அப்படிப்போல இந்திரிய வியாபாரத்தினுடைய நிரோதமாகிய விரதத்தை ஞானியாயிருக்கிற சந்நியாசியானவன் சங்கற்பித்துக்கொண்டு அதைச்சாவதானமா யிரட்சித்தால் அதினால்விவேகம் ரட்சிக்கப்படும். இப்படி வெகுகாலபரியந்தஞ் சிரத்தையோடேகூட நிரந்தரம் அனுஷ்டிக்கப்பட்ட விஷயதோஷ விவேகம், இந்திரியநிரோதங், ஆகிய இவைகளினாலே மைத்திரியாதிபாவனைகள் திடப்படும். அதினால் மலினவாசனைகள் நசிக்கும். அதற்குப்பிறகு மூச்சுக்காற்றைவிட்டுக் கிரகிப்பதுபோலவுங், கண்ணைக்கொட்டித் திறப்பதுபோலவும், புருஷமுயற்சியன்றியிலேதானே யுண்டாகாநின்ற மைத்திரியாதி வாசனைகளோடே லோகத்தில் விவகாரம்பண்ணினபோதிலும் அந்தலோகத்தினுடைய அதிகங்குறைச்சலொன்றையும் மனதில் நினையாதபடிக்கி நித்திரை, மயக்கம், மனோராச்சியரூபமான சகலசித்த விவகாரத்தையும். முயற்சியினாலேயப்பண்ணிக்கொண்டு சின்மாத்திவாசனையைப் பழகவேண்டும்.

சின்மாத்திரவாசனையாவதேதென்றால்? சர்வாதிஷ்டான சின்மாத்திரரூபமானபிரத்தியகபின்ன பரப்பிரமத்தினிடத்திற் கற்பிக்கப்பட்ட பாகியாந்தரமான சகலஜகத்தும் அன்னியோன்னிய அத்தியாசத்தினாலே அவிசாரதிசையிற் சித்ரூபமாயுஞ், சடரூபமாயுந் தோணும். கடந்தோணுகிறது, படந்தோணுகிறது, குட்டியந்தோணுகிறது, குசூலந்தோணுகிறதென்கிறதே இதற்கனுபவம். இப்படி அவிசாரதிசையிற் சகலஜகத்துஞ் சிற்சட உபயரூபமாய்த் தோணினாலும் விசாரித்துப்பார்க்கும்போதுகற்பிதஜகத்து அதிட்டானசித்தினாலே தோற்றப்படுகிறபடியால் அந்தச்ஜகத்துச் சடந்தான். இப்படியாயுள்ளளவில் மூந்தி அதிஷ்டானமாகச் சித்தித்திருக்கிற பிரமசித்தே

பின்பு ஆரோபிதமாய்த் தோணுநின்ற சடஜகத்துக்கு நிசமாயிருக்கப்பட்ட சொரூபமென்று இப்படிச் சுருதியுக்திகளினால் நன்றாய் விசாரித்தறிந்துகொண்டு பின்பு கற்பிதமான சகல சடஜகத்தையுஞ் சர்வாதிஷ்டான பிரத்தியகபின்ன பிரமசித்துரூபமாக நினைத்துப் பின்பு அகண்டேகரசமான பிரமமேநாம் நாமேபிரமமென்று பாவனைபண்ணுவதே சின்மாத்திரவாசனை.

இந்த அர்த்தம் மாபலிசுக்கிரசம்வாதத்தால் நன்றாய்த்தெரியப்படுகிறது. அதெப்படியென்றால்? ஏ சுக்கிரபகவானே இங்கே காலத்திரயத்திலு மிருக்கப்பட்ட வஸ்துவென்ன அதற்குப் பரிமாணமெவ்வளவு இந்தச் ஜகத்திற்கு நிசமானரூப மென்ன நீரார் நானார் இந்தச்ஜனங்களெல்லா மார் இதை யெனக்குச் சங்கிரகித்துத் தெரியும்படியாகச் சொல்லுமென்று கேட்ட மாபலிச்சக்கிரவர்த்தியைப் பார்த்துச் சுக்கிரபகவான் பதிலுத்தரஞ்சொன்னதென்னவென்றால்? இங்கே யெப்போதுமிருக்கப்பட்டது சித்துத்தான். அந்தச் சித்து யேகரசமானதா லதற்களவுகிடையாது. அதுவேயெங்கும் பரிபூரணமாயிருக்கப்பட்டது. சடமாய்த்தோணுநின்ற இந்தச்ஜகத்துக்குச் சித்தே நிசமான ரூபம். நீயுஞ்சித்து. நானுஞ்சித்து. இந்தச் ஜனங்களுஞ் சித்துத்தான். இதுவே சகலவேதாந்தசாரமான சங்கிரக அர்த்தமென்று சுக்கிரபகவானாலே வாசிட்டத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியே ஆரோபிதமான சகலஜகத்தும். அதிஷ்டானப் பிரமசொரூபமேயொழிய வேறில்லையென்று சுருதிகளினாலும், ஸ்மிருதிகளினாலுஞ், சூதசங்கிதைமுதலான புராணங்களினாலும், வெகுவாய்க் கோஷிக்கப்பட்டிருக்கிறது.

ஆனதாற் சொற்பனத்திற்காணப்பட்ட சராசரமான சகலஜகத்தும். அதைக்காணுநின்ற சித்துரூபமான நம்மைக்காட்டிலும்

எப்படி வேறன்றோ; அப்படியே ஜாக்கிரத்திற் காணப்பட்ட சரா சரமான சகலஜகத்தும் அதைக்காணுகிற சித்துருபமான நம்மைக் காட்டிலும் வேறன்றென்கிற அநுபவயுக்தியாற் பார்த்துச் சர்வாத் மகமாய்ச் சர்வபரிபூரணமாயிருக்கிற சின்மாத்திர பிரத்தியகபின்ன பிரமசொரூபத்தை யெப்போதுந் தியானிக்கவேண்டும்.

எவ்வளவுகாலந் தியானம்பண்ணினதினுற் சடஜகத்து அணு மாத்திரங்கூடத் தோன்றாமற் சர்வஞ்சின்மாத்திரம் நாமுஞ்சின்மாத் திரமென்கிற விர்த்தி தயிலதாரைபோலத் தொடர்ந்துவருமோ அவ் வளவுகாலமட்டுக்கும் இந்தச்சின்மாத்திரவாசனையில் முயற்சிபண்ண வேண்டும்.

சங்கை? முன்னேதானே சின்மாத்திர வாசனுப்பியாசம் பண்ணினதினுலே மலினவாசனைகள் நிவிர்த்தித்துப் போகலாமே அப்படியிருக்க மைத்திரியாதிகளை அப்பியாசிக்கத் தேவையில்லையே என்ருல்? அதுகூடாது. ஏனென்ருல்? சுவர்திடமாயிருக்காமற் போனுல் வீடு யெப்படித் திடமாயிராதோ; பேதிக்கிச்சாப்பிட்டுப் பிரபலமலமுதலானதை நீக்கிக்கொள்ளாமற் புசிக்கப்பட்ட ஒளஷ தம் யெப்படிரோகத்தை நிவிர்த்திபண்ணமாட்டாதோ; அப்படிப் போல மைத்திரியாதிபாவனை திடப்படாவிட்டாற் சின்மாத்திரவாச னை திடப்படமாட்டாது. அந்தச்சின்மாத்திரவாசனை திடப்படாததி னுல் மலினவாசனைகளும் நிவிர்த்திக்கமாட்டாதுகள். ஆனதால், மைத்திரியாதிகளும் வேண்டியதுதான். இப்படியா யுள்ளளவில் நான் பிரமாதமன்றியிலே யேகாக்கிரமாயிருக்கிற மனதினுலே சின் மாத்திரத்தைப் பாவிக்கப்போறேனென்கிற கர்த்துருகாணுனுசந் தானத்தோடேகூடினதாயுந் தியானமென்று சொல்லப்பட்டதாயுமி ருக்கிற சின்மாத்திரவாசனை மூச்சுக்காற்று விடுகிறதுபோல யெப் போ சுபாவமாய்ச் சித்திக்குமோ அதுவரைக்கும் அந்தவாசனையை

ப்பழகிப் பின்பு சவிகற்பமான அந்தச்சின்மாத்திர வாசனையையும் விட்டுப்போட்டுக் கீழ்ப்பண்ணப்பட்ட தியானப்பியாச பரிபாகத்தினாலே கர்த்துருகாரணானுசந்தான மொன்றுமன்றியிலே சமாதியென்று சொல்லப்பட்ட நிர்விகற்பசின்மாத்திரவாசனையைப் பழகவேண்டும்.

தியான சமாதிகளுக்கு லக்ஷணத்தைப் பதஞ்சலிபகவான் சூத்திரத்திற் சொல்லியிருக்கிறார். அதைமேலே விஸ்தாரமாய்ச் சொல்லுகிறோம்.

வெகுகாலபரியந்தம் நிரந்தரமாய்ச் சிரத்தையோடேகூடி யனுஷ்டிக்கப்பட்ட அந்தநிர்விகற்ப சின்மாத்திரசொரூப நிஷ்டையாகிய சமாதி திடப்பட்டபிற்பாடு கர்த்துருகாரணானுசந்தானமாகிய விகற்பத்தை விடுகிறதற்காக யாதொருமுயற்சியுண்டோ அந்தமுயற்சியையும் விடவேண்டும்.

சங்கை? இப்படியாயுள்ளளவில் அந்த முயற்சியைவிடப் பின்னொருமுயற்சி அதைவிடுகிறதற்குப் பின்னொருமுயற்சியென்றிப்படி அனஅவத்தைவருமேயென்றால்? அப்படி வரவேண்டியதில்லை. ஏனென்றால்? லோகத்திலே கலங்கியிருக்கிற ஜலத்தினுடைய கலக்கந் தெளிகிறதற்காக அந்தஜலத்திற் போடப்பட்ட தேத்தாங்கொட்டையினுடைய தூளியானது ஜலத்திலிருக்கப்பட்ட கல்மஷத்தோடேகூடத் தானுமெப்படி நிவர்த்தித்துப்போகிறதோ; அப்படிப்போல கர்த்துருகாரணானுசந்தானத்தை விடுகிறதற்கேதுவான முயற்சியும் அந்த அனுசந்தானத்தைநீக்கிப்போட்டுத் தானும் நீங்கிப்போகும். அதுவும் நீங்கிப்போனபிற்பாடு மலினவாசனைகள்போலச் சுத்தவாசனைகளும், நசித்துப்போனபடியினாலே மன்றொரு வாசனையுமன்றியிலே நிர்வாசனையாய்ச் சாந்தமாகிவிடும். அந்தப்படி வாசிட்டத்தில் வெகுவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

அதேதென்றால்? எ இராமா வாசனைகளினாலே மனதிற்குப் பந்தமானதால் அதுகள் நீங்கினால் முக்திதான். நீரும் விவேகத்தினாலே வாசனாக்ஷயத்தைச் சம்பாதியும். சமுசயவிபரீதமன்றியிற்றிடமாயிருக்கப்பட்ட தத்துவஞானத்தினாலே வாசனாக்ஷயம் வரும்போது சித்தமானது யெண்ணை இல்லாத தீபம்போலச் சாந்தியையடையும். அதினாற் ஜீவன்முக்திப்பதங்கிடைக்கும். வெகுசாத்திரத்தை விசாரித்துப் பார்த்தபோதிலும், வெகுசாதுக்களோடே சகவாசம்பண்ணி அவாளோடே வெகுகாலபரியந்தம் விசாரம்பண்ணியறியவேண்டியதை யறிந்தபோதிலும், ஒருவாசனையுமன்றியில் நிர்வாசனையாயிருக்கிற மனதினுடைய சாந்தியைத்தவிர வேறேஉத்தமகதி கிடையாதென்றிப்படி வெகுவாய் வாசிட்டத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனதால் வாசனாக்ஷயத்தினாற் ஜீவன்முக்திகிடைக்குமென்று சித்தமாச்சுது. இப்படி வாசனாக்ஷயப் பிரகாரத்தைச் சொன்னோம்.

இனிச்ஜீவன்முக்திக்கிச் சாதனமான மனோநாசத்தை நிரூபிக்கிறோம்.

சங்கை? வாசனாக்ஷயஞ் சித்தித்துதேயானால் அதினாலே தானே மனது தனக்குத்தானே நசித்துப்போமேயென்றால்? அது சரிதான். ஆனாலும் மனோநாசத்தையுஞ் சுதந்தரமாக நன்றாயப்பியாசிக்கவேண்டும். அப்படி யப்பியாசிக்கப்பட்ட மனோநாசத்தினாலே வாசனாக்ஷயமானது ரக்ஷிக்கப்படும். இந்திரிய நிரோதாப்பியாசத்தினாலேதானே வாசனாக்ஷயம் ரக்ஷிக்கப்பட்டுப் போகிறபடியினாலே மனோநாசாப்பியாசந் தேவையில்லையென்று சொல்லக்கூடாது. ஏனென்றால்? மனோநாசஞ் சித்தித்துதேயானால் அப்போ இந்திரியநிரோதந் தனக்குத்தானே சித்திக்கும். அதற்காக வேறே அப்பியாசப்பிரயாசந் தேவையில்லை. ஆனபடியினாலே மனோநாசாப்பியாசம் வேண்டும். எனக்கு இந்திரிய நிரோதாப்பியாசப் பிரயாசம்போல உம

க்கு மனோநாசாப்பியாசப்பிரயாசம் இருக்கிறதேயென்றால்? அந்த மனோநாசாப்பியாசம் அவசியம் வேண்டியிருப்பதினாலே அந்தப்பிரயாசம் நமக்குச்சுகமாயிருக்கட்டும். மனோநாசமன்றியிலே இந்திரிய நிரோதம்யெவ்வளவு அப்பியாசிக்கப்பட்டாலுந் திடமாகமாட்டாது. ஆனதால், மனோநாசாப்பியாசஞ் சுதந்தரமாக வேண்டியதுதான். இந்திரிய நிரோதாப்பியாசம் இதுபோலே அவசியமன்று; அப்படியே வாசிட்டத்திற் ஜனகமஹாராஜா மனோநாசத்தைச் சொல்லியிருக்கிறார். அதெப்படி யென்றால்? இந்தப்பெரிதான சமுசாரமாகியவிருக்ஷத்துக்கு மனதொன்றே வேர் அந்தமனது சங்கற்பரூபமானதாற் சங்கற்பநாசத்தினாலே அதைநாசம் பண்ணுகிறேன் அதினாலே அந்த விருக்ஷம் இருந்தவிடந்தெரியாமற் போயேபோய்விடும். அகோ! ஆச்சரியம்!! ஆச்சரியம்!!! நானிப்போதான் விழித்துக்கொண்டேன். இப்போதான் விழித்துக்கொண்டேன். ஏனென்றால்? ஆத்ம அபகாரியாயிருக்கிற சோரனை இப்போவன்றோ கண்டேன். இந்தச்சோரனுக்கு மனதென்றுபெயர். இந்தச்சோரனை இந்தக்ஷணம் நாசம்பண்ணுகிறேன். இவனாலேயன்றோ நானிவ்வளவுநாட்பரியந்தம் அதம்பண்ணப்பட்டேன். ஆனபடியினாலே இப்போநானிவனையதம்பண்ணிப்போடுகிறேனென்று ஜனகமஹாராஜா சொல்லியிருக்கிறார்.

வாசிட்டத்திற்றானே சகலதுக்கத்தைதையுங்கொடா நின்ற இந்தச்சமுசாரவிருக்ஷம் நாசத்தையடைகிறதற்குத் தன்னுடைய மனோநாசமொன்றுமாத்திர முபாயமேயொழிய வேறே உபாயங் கிடையாது. ஆனபடியினாலே, கையோடேகையைப் பிசைந்துகொண்டு பல்லுக்களோடே பல்லுக்களைக்கிட்டிக்கொண்டு யெவ்வருத்தப்பட்டாகிலும் முன்னே தன்னுடைய மனதைச் ஜெயிக்கவேண்டும். யாதொருஜனங்களுடைய மனதினாற்றாங்கள் ஜெயிக்கப்படவில்லையோ அவாள்தான். இந்தப்பூமண்டலத்தில் நல்ல ஞானமுள்ள புருஷாள்

அவாளைத்தான். புருஷகதையி லெடுத்துச்சொல்லலாம். மற்றச்ஜனங்கள் புருஷாளன்று. திரியக்குச்சாதிபோலவேயென்று இதுமுதல் வெகுபிரகாரமாக ஸ்ரீவசிட்டருஞ்சொல்லியிருக்கிறார்.

கௌடபாதாசாரியாளும் மனோநிக்கிரகத்தினாலேயே சகலதியானிகளுக்கும் ஞானம், துக்கநாசம், பயமில்லாமை, நித்தியமாயிருக்கிறசாந்தி, யெல்லாங்கிடைக்குமென்று சொல்லியிருக்கிறாள்.

ஸ்ரீக்ருஷ்ணா மனது மஹாசஞ்சலமன்றோ ஆனதால், அந்த மனதை நிக்கிரகம்பண்ணுவது வாயுவை நிக்கிரகம்பண்ணுகிறதைக் காட்டிலும் வெகுவருத்தமென்கிறதாக அருச்சுனனாலே கீதையில் யாதொருவசனஞ் சொல்லப்பட்டதோ; அது அடநிக்கிரகவிஷயம். அந்தப்படி வாசிட்டத்தில் ஸ்ரீவசிட்டர்சொல்லியிருக்கிறார்.

அதேதென்றால்? அங்குசமன்றியிலே மதம்பிடித்திருக்கிற துஷ்டகஜத்தை யெப்படிச் ஜெயிக்கக்கூடாதோ; அப்படிப்போலப் பழுதன்றியிலிருக்கப்பட்ட நல்லயுக்தியன்றியிலே மூடனொருவிடத்திலிருந்துகொண்டு அடிக்கடி யேகாக்கிர சித்தத்தோடே கூடப்பண்ணப்பட்ட அடநிக்கிரகத்தினாலேதானே மனதை ஜெயிக்கக்கூடாது.

அத்தியாத்மவித்தை, சாதுசங்கம், வாசனாக்ஷயம், பிராணசலன நிரோதங்களான இந்தயுக்திகள், மனோஜெயத்தின் பொருட்டு நிரம்பியிருக்கச்சே யெவாள் அடத்தினாலேதானே மனதை நிக்கிரகிக்கிறதற்கேற்படுகிறாளோ அவாள் தீபமன்றியிலே அஞ்சனத்தைக் கொண்டுதானே அந்தகாரத்தைநாசம்பண்ணுகிறதற்கும், தாமரைநூலினாலே மதத்தகஜத்தைக் கட்டுகிறதற்கும், யேற்பட்ட புத்திமான்களென்று ஸ்ரீவசிட்டர் சொல்லியிருக்கிறார்.

அட நிக்கிரகமென்றுங், கிரம நிக்கிரகமென்றும், நிக்கிரகம் இரண்டுவிதம். அதில்-சக்ஷுசுரோத்திர முதலான ஞானேந்திரியங்களும், வாக்குப்பாணி முதலான கருமேந்திரியங்களும், அந்தந்தக் கோளகத்தைத் தகைந்த மாத்திரத்தினலே நிக்கிரகிக்கப்படும். அது போலேதானே மனதையு நிக்கிரகிப்போமென்று மூடனயிருக்கிறவனுக்குப் பிராந்தியுண்டாகும். அது கூடாது. ஏனென்றல்? மனதினுடைய கோளகமான இருதய கமலத்தைப் பாகிய கோளகத்தைப் போலத் தகையக்கூடாத படியினலே கீழ்ச்சொன்ன பிராந்திகூடாது. ஆனபடியினலே கிரமநிக்கிரகமே யோக்கியம். அந்தக்கிரமநிக்கிரகத்தில் அத்தியாத்ம வித்தை முதலானதுக ளுபாயங்கள். அந்த வித்தையானது திரிசயமுழுவதும் மித்தையென்றுந், திருக்காயிருக்கிற பிரத்திகாத்மா சொப்பிரகாசரென்றும், அறிவிக்கிற படியினலே மனதானது தனக்கு விஷயமான திரிசயத்திற் பிரயோசனமில்லையென்றும் பிரயோசனமுள்ள பிரத்திகாத்த மாவைத்தான் விஷயமாகப் பண்ணிக்கொள்ள யோக்கியமன்றென்றும், விவேகத்தின லறிந்துக்கொண்டு விறகில்லாத அக்னிபோலத் தனக்குத்தானே யுபசாந்தியையடையும். அந்தப்படி சுருதிசொல்லுகிறது.

அதேதென்றல்? விறகு நசித்துப் போனதினலே அக்கினி தன்னுடைய காரணத்தினலெப்படி யடங்கிப்போமோ அப்படிவிர்த்தி நசித்ததினலே மனதுந் தன்னுடைய காரணத்தினலேயடங்கிப்போகுமென்று சுருதிசொல்லுகிறது.

யாதொரு முமூக்ஷுவானவன் குருவினலே போதிக்கப்பட்ட போதிலும் பிரமசொரூபத்தை நன்றயறியவில்லையோ; யாதொருத்த னறிந்தபோதிலும் அந்தச்சொரூபத்தை மறந்து போகிருனே; அவாளிரண்டு பேர்களுக்கும் மனேநிக்கிரகத்திற் சாதுசங்கமுபாயம்.

ஏனென்றால்? சாதுக்கள் அடிக்கடி சொரூபத்தைப் போதிப்பார்கள். அப்படியே மறந்தசொரூபத்தை நினைக்கும்படியும் பண்ணுவார்கள். ஆனதாற் கீழ்ச்சொன்ன மனோநிக்கிரகத்திற் சாதுசங்க முபாயந்தான். யாதொருத்தன் வித்தியாமதம் முதலான துர்வாசனையினாலே கெடுக்கப்பட்டவனாய்க்கொண்டு சாதுக்களையனுசரிக்கச் சம்மதிக்கவில்லையோ அவனுக்குக்கீழ்ச்சொல்லப்பட்ட விஷயதோஷ விவேகத்தினாலே வாசனாக்ஷயம் பண்ணுவதே மனோநிக்கிரகத்திலுபாயம். துர்வாசனைகள் வெகுபிரபலமாயிருந்து விவேகத்தினாலேகூட அதுகளைவிடச் சக்தியன்றியிலே போனாலப்போ பிராணசலன நிரோதம் மனோநிக்கிரகத்திலுபாயம். ஏனென்றால்? பிராணசலனம், வாசனை, இரண்டும்சித்தத்தை யசைத்துவைக்கிறபடியினாலே அந்த இரண்டுகளையும் நிரோதம்பண்ணும்போது சித்தசாந்தி கூடலாம். அந்தப்படி வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறது.

அதேதென்றால்? ஏ இராமா காமாதிவிர்த்திகளாகிய பணைகளையுடைத்தாயிருக்கிற சித்தமாகிற விருக்ஷத்துக்கு வாசனையென்றும், பிராணசலனமென்றும், இரண்டுவிதைகள். அந்தவிதைகளினாலே சித்தவிருக்ஷமானது சாகோபசாகையாய் நிமிஷத்துக்கு நிமிஷம் மேன்மேல்வளருது. ஆனதாற் பீசரூபங்களான வாசனை, பிராணசலனங்களை, நிரோதித்தாற் சித்தஞ் சாந்தமாகும். இந்தவிரண்டுகளுஞ் சித்தம் விருத்தியாகிறதிலெப்படிக்காரணங்களோ; அப்படியொன்றுக்கொன்று விருத்தியாகிறதிலுங் காரணமானதால் இரண்டுகளுக்குள்ளேயொன்றுநசித்தால் மற்றதொன்றுந் தன்க்குத்தானே நசித்துப்போம். வாசனைநசிக்கிறதற்குபாயங் கீழே சொல்லப்பட்டிருக்கிறது.

பிராணசலன நிரோதத்திற் குபாயமேதென்றால்? பிராணாயாமத்தினுடைய திடாப்பியாசங், குருவினா லுபதேசிக்கப் பட்டயுக்தி

ஆசனநியமம், ஆகாரநியமம், இதுகளுபாயங்களென்று இப்படி வாசிட்டத்திற் சொல்லப்பட்ட கிரமம். அதில் - ஆசனத்துக்கு லக்ஷணம், அதற்குபாயம், அதின்பலம், மூன்றும். பதஞ்சலிபகவானாலே சூத்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

அதேதென்றால்? பதுமஞ், சுவஸ்திகம், முதலான யாதொராசனத்திலிருந்து அதினாலே புருஷனுடைய கால்கைமுதலான அவயவங்களுக்கு விருத்த முண்டாகாமற் சரீரமசையாமல் ஸ்திரமாயிருக்குமோ அதுவே முக்கியமாயிருக்கப்பட்ட சுகாசனம். வீட்டுக்காரியங், தீர்த்தயாத்திரை, யாகம், ஓமம், முதலானதைக்குறித்துண்டாகிற உச்சாகத்தைக்கெடுப்பது ஆசனஜெயத்தில் லௌகீகமான உபாயம். அந்த உச்சாகத்தைக் கொடாவிட்டால் அது பெலோற்காரணத்தினாலே தேகத்தைக்கிளப்பிவிட்டு மூலைக்குமூலை திரியும்படி பண்ணிப்போடும். ஆனதாலதைக் கெடுக்கவேண்டும். ஆயிரம்படங்களோடே பூமியைத்தரித்துக்கொண்டு வெகுதீரராயிருக்கிற யாதொரு ஆதிசேஷ பகவானுண்டோ அவரே நாமென்கிறதியானம் ஆசனச்ஜெயத்திற் சாஸ்திரீயமான உபாயம். அந்தத்தியானத்தால் ஆசனச்ஜெயம்வரும்படியான புண்ணியாதிட்ட முண்டாகும். இந்தஉபாயங்களினாலே ஆசனந்திடமாய்ச் சித்திக்கும்போது, சீதோஷ்ணங்கள், சுகதுக்கங்கள், மானாவமானமுதலான துவந்துவங்கள், முன்போலே புருஷனை வாதியாமலிருப்பதே ஆசனச்ஜெயத்துக்குப்பலம். அப்படிப்பட்ட ஆசனத்துக்கு யோக்கியமான பிரதேசமேதென்றால்? ஒருஜனமுமன்றியிலே சமமாய்ச், சுத்தமாய்ச், சுக்காங்கல்லு மணற்சமீபத்திலக்கினிசலவாடை யடிக்கும்படியான குளமுதலான பாதகமொன்று மன்றியிலிருக்கப்பட்டதாய்க், கண்ணுக்கு ரம்மியமாய், மனதுக்குச்

சம்மதமாயிருக்கிறகுகை, மடமுதலானதே ஆசனயோக்கியப் பிரதேசம். இப்படி ஆசனநியமஞ் சொல்லப்பட்டுது.

ஆகாரநியம மாவதேதென்றால்? தனக்கு வேண்டுமென்கிற ஆகாரத்தை உத்தேசமாய்ப் பார்த்துக்கொண்டு அதிலிரண்டுபங்கு வெஞ்சனத்தோடே கூடின அன்னம்புசித்து ஒருபங்கு ஜலம்சாப்பிட்டுப் பின்னொருபங்கு வாயுசஞ்சாரத்தின் பொருட்டுவிடுவதே ஆகாரநியமம். அப்படியே பகவான் கீதையிற்சொல்லியிருக்கிறார்.

ஆசனஜெயம் வந்தவனுக்குப் பிராணாயாமத்தினாலே மனோநாசஞ் சுவேதாசுவதர உபநிடதத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. அதெப்படியென்றால்? யோகியானவன் வித்யாமதாதி ஆசுரசம்பத்தில்லாதவனாயும், அதோடேகூடினவனாயும், இரண்டு விதமாயுமிருப்பன். அதில்முந்தினயோகிக்கிப் பிரமத்தியானத்தினாலேமனது நிக்கிரகிக்கப்படும்போதுஅதற் கவாந்தரபலமாகப்பிராண நிரோதஞ்சித்திக்கும். இரண்டாவதுயோகிக்கிப் பிராணாயாமாப்பியாசத்தினாலேபிராணநிரோதம் வரும்போது அதற்கவாந்தரபலமாக மனோநிக்கிரகஞ் சித்திக்குமென்று பிராணாயாமத்தினால் மனோநாசஞ் சொல்லப்பட்டிருக்கிறது.

இதற்கு யுக்தி ஏதென்றால்? பிராணன் சலித்தால் மனது சலிக்கிறபடியினாலே பிராணன் யாதொன்றுண்டோ அதுவே மனதினுடைய சலனமானதாற் பிராணனை நிரோதிக்கும்போது மனோநாசஞ் சித்திக்குமென்று வாசிட்டத்திற் சொல்லியிருப்பதே யுக்தி. துஷ்டக் குதிரைகள் தானிழுக்கப்பட்ட ரதத்தை நல்ல வழியைவிட்டுப்போட்டுக் குறுக்குவழியி லிழுத்துக்கொண்டு போனாலுஞ்சாரதியானவன் கடிவாளத்தை இழுத்துப்பிடிக்கும்போது அந்தரதம் நல்வழியிலெப்படிவந்துசேருமோ அப்படி இந்திரியங்களினாலும், வாசனைகளினா.

லும், நாலுதிக்கிலு மிழுத்தலைக்கப்பட்டமனதும் பிராணனுகிறகயி றைத் திடமாயிழுத்துத் தகையும்போது தானுந்தகையப்படுமென்று கீழ்ச்சொன்ன உபநிடதத்திற் சொல்லியிருப்பதும் யுக்திதான்.

பிராணுயாமமாவதேதென்றால்? இடதுமூக்குத் துவாரத்தி னாலே தனக்குச்சக்தியுள்ளமட்டுக்கும் உசுவாசமென்று சொல்லப் பட்ட பிராணவாயுவை வெளியில்விடுவதுரேசகம். பிறகு வலது மூக்குத் துவாரத்தினாலே நிசுவாசமென்று சொல்லப்பட்ட அபான வாயுவை யுள்ளே இழுப்பது பூரகம். பிறகு உசுவாசமும், நிசுவாச மும், அன்றியிற்றேகமசையாதபடிக்கு வாயுவைத் தடஸ்தமாக நிறுத் திக்கொள்ளுவது கும்பகம். அதுவே பூரகம் பண்ணினபிறகு இருத யத்திற் செய்யப்பட்டா லாந்தரகும்பகம். ரேசகம்பண்ணினபிறகு பாகியத்திற் செய்யப்பட்டால் பாகியகும்பகம். இப்படி இந்தரேச காதிகளைச் செய்யும்போது இவ்வளவுகாலஞ் செய்தோமென்று கண் க்குத்தெரிகிறதற்காகப் பிரணவம் பஞ்சாக்ஷரமுதலான மந்திரத் தைச் செபித்துக்கொண்டு யெத்தனையாவிர்த்திவரைக்கும் ரேசகம் பண்ணப்பட்டதோ அத்தனையாவிர்த்தி பூரகம் பண்ணவேண்டும். அத்தனையாவிர்த்தியே கும்பகத்தையும் பண்ணவேண்டும். இப்படி ரேசகாதிமூன்றையும் ஒராவிர்த்திபண்ணினால் அதொரு பிராணு யாமம். தூக்கமயக்கமுதலான பிரபலதோஷமுள்ளவாளிந்த மூன்றை யுங் கீழ்ச்சொன்னபடி செய்யவேண்டும். அந்தத்தோஷமில்லாத வாள் ரேசகபூரகங்களைச் செய்யாமற்றானே உசுவாசமன்றியிற் றட ஸ்தமாக வாயுவை நிறுத்துவதாகிய கேவலகும்பகத்தைமாத்திரம் பண்ணலாம். இப்படித் தினக்கிரமமாக நாளுக்குநாட் கொஞ்சம் அதிகமாகும்படி பிராணுயாமாப்பியாசம் பண்ணினாற் பிராணசல னம் நிரோதிக்கப்படும். அதினால் மனோநாசஞ் சித்திக்கும். இந்தப் பிராணுயாமப் பிரகாரத்தை அடயோகசாஸ்திரத்தில் விஸ்தாரம

யச் சொல்லியிருக்கிறபடியினாலே இங்கே விசேஷமாய்ச்சொல்லவில்லை. குருமுகமாகச் ஜகத்து மறந்துபோகும்படியான ஔஷதம் புசிப்பதுமுதலானது குருவினாலுபதேசிக்கப்பட்ட யுக்தி இதுவெல்லாம் அடையோகிகளிடத்திற் பிரசித்தமாயிருக்கும். இப்படி மனோநாசத்துக் குபாயங்களான அத்தியாத்மவித்தை, சாதுசங்கம், வாசனாக்ஷயம், பிராணசலனநிரோதம், நாலுகளுஞ் சொல்லப்பட்டுதுகள்.

இனிஇந்தமனோநாசத்துக்குபாயமான சமாதியைச் சொல்லுகிறோம்.

அதேதென்றால்? ஐந்துபூமிகளோடே கூடிக்கொண்டிருக்கிற மனதிற் புருஷமுயற்சியினாலே மூன்றுபூமிகளை நீக்கிவிட்டபிறகு மிஞ்சாநின்ற இரண்டுபூமி சமாதியென்று சொல்லப்படும். அதில்-முந்தினபூமி சவிகற்பசமாதி. இரண்டாவது பூமி நிர்விகற்பசமாதியென்று விவேகித்தறியவேண்டும். அந்தப்பூமிகளாவது - சித்தம் மூடம், விச்சித்தம், ஏகாக்கிரம், நிருத்தமென்றைந்துபூமிகள். அதில்-ஆசுரசம்பத்து லோகசாத்திர தேகவாசனைகளோடே கூடினமனது சித்தம். நித்திரை மயக்கம் ஆலசிய முதலானதோடே கூடினமனது மூடம். எப்போவாகிலும் ஒருக்காற் றியானத்தோடே கூடினமனது விச்சித்தம். அதிற் சித்த மூடங்களிலே சமாதியென்கிறவார்த்தைகூடக்கிடையாது. விச்சித்தபூமியோடேகூடின மனதில் விக்ஷேபத்தோடேகூட ஒருக்காற் றியானங்கிடைத்தபோதிலும் அது விக்ஷேபத்திலகப்பட்டு அக்கினியிலகப்பட்ட விதைபோலுடனே நசித்துப்போகிறபடியினாலே அந்தத்தியானமுஞ் சமாதியிற் சேர்ந்ததன்று. மனதானதுமுந்தினவிர்த்தியினாலே எந்தவஸ்துவைக் கிரகிக்கிறதோ அந்தவஸ்துவைத்தானே மேன்மேலுண்டாகிற விர்த்திகளினாலுங் கிரகித்துதேயானால் அப்பேது ஏகாக்கிரம். அப்படிப்

பட்டமனதிற் சத்ரூபமான பிரத்தியகபின்ன பிரமசொரூபத்தைத் தோற்றிவைக்கிறதாய்க் கிலேசங்களையுங், கருமபந்தங்களையும், நழுவப்பண்ணுகிறதாய் நிர்விகற்பசமாதிக்கிச் சாதனமான சித்தநிரோதத்தை யெதிரேகொண்டுவந்து விடுகிறதாய்த் தயிலதாரைபோல இடைவிடாமலிருக்கிற யாதொருபிரமாகார மனோவிர்த்திப் பிரவாகமுண்டோ அது சவிகற்பசமாதி. இந்தச்சமாதி கிடைக்கும்போது ரசோகுணவிகாரமான மனதினுடைய சலனம் அடங்கிப்போகிறபடியினாலே மனதுமுன்போல நாமரூபவிகாரத்தைக் கிரகியாமல் நிர்விகார சச்சிதானந்தரூபமான பிரத்தியகபின்ன பிரமசொரூபத்தில் நாளுக்குநாட் க்ஷணத்துக்க்ஷணம் ஏகாக்கிரமாகும். சவிகற்பசமாதியினுடைய அப்பியாசபெலத்தினாற்றியானிக்கிறவன் தியானந் தியானிக்கப்பட்ட சொரூபமென்று சொல்லப்பட்ட திரிபுடியன்றியிலே மனது சூக்ஷுமரூபமாக ஒருவனாலேயுமிப்படிப்பட்டதென்று சொல்லக்கூடாததாயிருக்கிற பரமானந்த அநுபவத்தோடேகூடப் பாலிற்கலந்த ஜலம்போலப் பரிபூரண பரமானந்தப் பிரத்தியகபின்னபிரமசொரூபத்திற் கலந்துநிற்பதே நிர்விகற்பசமாதி.

அந்தப்படி யோகசூத்திரத்திற் பதஞ்சலிபகவான் விஸ்தரித்துச் சொல்லியிருக்கிறார். சகலசுருதி ஸ்மிருதி இதிகாசபுராணங்களிற் றுற்பரியத்தோடே சொல்லிமுடிந்த நிஷ்டை இதுவே. சகல வித்துவான்களுமிந்த நிஷ்டையிலே எப்போதும் மகாப்பிரீதியுடைத்தாயிருப்பார்கள். இதற்காகவே சகலமுமூக்ஷுக்களுஞ் சாஸ்திரத்திற் சொன்ன சகலமுயற்சியையுஞ் செய்யவேண்டியது. இந்த நிஷ்டையினுடைய மகிமை பிரம விஷ்ணு ருத்திரன் முதலானபேர்களாலேகூடச் சொல்லிமுடியாது. ஆனதால் முமூக்ஷுக்களெப்போது மிந்த நிஷ்டைகிடைக்கும்படியான முயற்சியை எவ்வருத்தப்பட்டுஞ் செய்யவேண்டும்.

கீழ்ச்சொன்ன சவிகற்பசமாதிக்கி இயமம், நியமம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், ஆகியவைந்துகளும் பகிரங்கசாதனங்கள்.

அதில்-இயமமாவதேதென்றால்? இமிசையில்லாமை, பொய்யில்லாமை, திருட்டில்லாமை, சம்போகமில்லாமை, ஒருவனிடத்தில்நின்றும் ஒருபதார்த்தத்தை வாங்குவதில்லாமை, ஆகிய இவ்வைந்தும் இயமமென்று சொல்லப்படும். நியமமாவதேதென்றால்? பாகியாந்தரசௌசம், கிடைத்ததைக்கொண்டு சந்தோஷம், நடந்தமட்டுக்குந்தவசு, வேதஅத்தியயனம், ஈசுரத்தியானம், ஆகிய இவ்வைந்தும் நியமமென்று சொல்லப்படும். ஆசனம், பிராணயாமங்கள் முன்னையே சொல்லப்பட்டுதுகள். சத்தாதி விஷயங்களிலே நின்றுஞ் சுரோத்திராதி இந்திரியங்களோடேகூட மனதை அந்தர்முகமாகத்திருப்பிக்கொள்ளுவது பிரத்தியாகாரம். அந்தர்முகமாகத்திருப்பிக் கொண்டமனதைப் பிரத்தியகாத்தும சொரூபத்தில் நிறுத்துவது தாரணை. அந்தச்சொரூபத்தில் மனதுக்குச் ஸஜாதீயவிர்த்திப் பிரவாகமுண்டாகுவது தியானம். அந்தமனதினுடைய ஸஜாதீய விர்த்திப் பிரவாகந்தானே அப்பியாசபெலத்தினாலே திடப்படுவது சமாதி. இந்தத்தாரணை, தியான, சமாதி, ஆகிய மூன்றுகளும் மனோதருமங்களானபடியினாலே சவிகற்பசமாதிக்கி அந்தரங்கசாதனங்கள். எதாகிலும் ஒருபுண்ணியவிசேஷத்தினால் முந்தி அந்தரங்கசாதனங் கிடைத்துவிட்டாற் பகிரங்கசாதனங் கிடைக்கவேண்டுமென்று நிரம்பவருத்தப்படவேண்டியதில்லை. அந்தரங்க சாதனமே போதும்.

சங்கை? சவிகற்பசமாதி அங்கியன்றோ? அப்படியிருக்க அந்தசவிகற்பசமாதியைத் தியானத்துக்குப் பிறகுண்டாகிற யெட்டாமங்கமான சமாதிக்கட்டத்திலெப்படிச் சொல்லலாமென்றால்? ஏழாமங்கமான தியானம், எட்டாமங்கமானசமாதி, அங்கியானசவிகற்ப

சமாதி, இந்தமூன்றுகளுக்கும் நிரம்பப்பேத மில்லாததினாலே எட்டாமங்கமான சமாதிக்கட்டத்தில் அங்கியானச விகற்பசமாதியைச் சொல்லாமே. அதெப்படிப்போலவென்றால் ? வேதாத்தியயனம் பண்ணுகிற பிரமச்சாரி அடிக்கடி மறந்து மறந்து மறுபடி நினைத்துக்கொண்டு வேதம்சொல்லுகிறான். வேதாத்தியயனம் பண்ணிமுடிந்தவன் சாவதானமாய்ச் சொன்னால் மறவாமற் சொல்லுகிறான். அத்தியயனம் பண்ணிவைக்கிறகுரு சாவதானமன்றியில் மயங்கிவிழுந்துகொண்டு சொன்னபோதிலும் மறவாமற் சொல்லுகிறார். இவாள், மூன்றுபேரும் ஒருவேதத்தையேசொன்னபோதிலும் அப்பியாச தாரதன்மியத்தினாலே சொல்லுகிறதிற் கொஞ்சந் தாரதன்மியமேயொழிய நிரம்பப் பேதமெப்படியில்லையோ அப்படிப்போலச் சச்சிதானந்தபரிபூரண பிரமசொரூபமே நாம். நாமே அந்தப் பிரமசொரூபமென்று செய்யப்பட்ட மனோதருமமாகிய தியானஞ்சமாதி, விகற்பசமாதி, மூன்றுகளுக்கும் அப்பியாச தாரதன்மியத்தினாலே கொஞ்சந் தாரதன்மியமேயொழிய நிரம்பப்பேதமில்லை. ஆனதாற் கீழ்ச்செய்த சங்கைகூடாது. கீழ்ச்சொன்ன ஸஜாதீய விர்த்திப்பிரவாகமாகிய தியானம். விச்சின்னத்தியானமென்றுஞ், சந்ததத்தியானமென்றும், இரண்டுவிதம். அதில்-அகண்டேகாசமான பிரமமே நாம் நாமேபிரமமென்று செய்யப்பட்ட பாவனையாகிய தியானஞ் சிலபொழுது தொடர்ந்துவந்து நடுவில்விட்டுவிட்டுப்போய்க் கடபடாதிவிஷயமான விஜாதீயவிர்த்திகளுண்டானபோதிலுந் திரும்பித்திரும்பிப் புருஷமுயற்சியினாலே விஜாதீய விர்த்திகளைத் தள்ளிச் ஸஜாதீயமாயிருக்கிற பிரமாகார மனோவிர்த்தியைச் சம்பாதிக்கிறதே விச்சின்னத்தியானம். அப்படியில்லாமல் அப்பியாசபெலத்தினாலே தயிலதாரைபோல அவிச்சின்னமாயுண்டாகிற பிரமாகார மனோவிர்த்திப்பிரவாகமே சந்ததத்தியானம். இதில்-விச்சின்னத்தியானத்தைப் பழகப்பழகச் சந்ததத் தியானங்கிடைக்கும்.

அதைப்பழகப்பழகச் சவிகற்பசமாதிகிடைக்கும். அந்தச் சந்ததத் தியானஞ், சவிகற்பசமாதி, இரண்டையும் சர்வாநுபவயோகி சொல்லியிருக்கிறார்.

அதேதென்றால்? அக்ஞானதற்காரியமான சகல கற்பிதப் பிரபஞ்சத்தையுஞ் சிருஷ்டிக்கிரமத்துக்கு விபரீதக்கிரமமாகப் புத்தியினாலே காரியத்தைக் காரணரூபமாய்நினைப்பதாகிய பிறவிலாபம் பண்ணிக்கொண்டு மிஞ்சியிருக்கிற அதிஷ்டான சச்சிதானந்தரூபப் பிரமசொரூபம் யாதொன்றுண்டோ அதுவே நாம். நாமே அதுவென்று தயிலதாரைபோல இடைவிடாமற் பாவிப்பதே தியானமென்றும். அப்படித் தியானம்பண்ணும்போது சுரோத்திராதி இந்திரியங்களினாலே சத்தாதிவிஷயங்களொன்றும் அறியப்படாமற் றியானப்பியாசபெலத்தினாலே கிடைத்த ஸஜாதீயமான பிரமாகாரமனோவிர்த்தி சவிகற்பசமாதியென்று சர்வானுபவயோகி சொல்லியிருக்கிறார். வாசிட்டவியாக்கியானக்காரரும் அப்படியேசொல்லியிருக்கிறார். ஸ்ரீசங்கராசாரியாளும் அப்படியே சொல்லியிருக்கிறாள். ஆனபடியினாலே தியானம்பண்ணும்போது மனதிற்றொடர்ந்த விர்த்திப்பிரவாகமுண்டாகியிருந்தபோதிலும் எவ்வளவுகாலம் வரைக்கும் பாகியாந்தரகரணங்களினாலே பாகியாந்தரவிஷயங்களறியப்படுகிறதுகளோ அவ்வளவுகாலமட்டுக்குந் தியானந்தான். எப்போ ஒருகரணத்தினாலும் ஒருவிஷயமும் அறியப்படாமல் மனதிற் பிரமாகாரமான தொடர்ந்த விர்த்திப்பிரவாகமாத்திரங் கிடைக்கிறதோ அப்போது அது சவிகற்பசமாதி. எப்போ அந்த விர்த்திப்பிரவாகமன்றியிற் பரிபூரணபிரமானந்தத்தில் மனது மூழ்கிப்போய்ச்சமஸ்காரமாத்திரமாகிய சூக்ஷமரூபமாயிருக்கிறதோ அப்போது அந்தமனதினுடைய ஸ்திதி நிற்விகற்பசமாதியென்று சித்தமாச்சுது. கீழ் கிருத்தமென்று சொல்லப்பட்ட ஐந்தாம்பூமியான இந்தநிற்விகற்ப

சமாதியைப் பதஞ்சலிபகவான் சூத்திரத்திற் சொல்லியிருக்கிறார். அதேதென்றால்? சமாதியி லிருக்கும்போது அதற்கு விரோதங்களான மனோவிகாரங்கள் புருஷமுயற்சியினாலே நாளுக்கு நாட் க்ஷணத்துக்குச்க்ஷணமடங்கி அந்தமனோவிகாரங்களை நாசம்பண்ணும்படியான நிரோதவாசனை மனதிலுண்டாகும். க்ஷணத்துக்குச்க்ஷணம் வளராநின்ற அப்படிப்பட்ட நிரோதவாசனையே நிர்விகற்பசமாதியென்று சொல்லியிருக்கிறார்.

சங்கை? மனதுக்குச் சர்வதா பாகியத்திலே ஏதாகிலும் ஒரு விஷயாகாரமான பரிணாமங்காணப்படுகிறதே; அப்படிச் சமாதியில் நிருத்தமான மனதுக்கும் யேதாகிலும் ஒருபரிணாமஞ் சொல்லவேண்டுமேயென்றால்? சொல்லுகிறோம். லோகத்திலே ஸமித்து, நெய், அவிசு, முதலானதை அக்கினியினிடத்தில் ஓமம் பண்ணும்போது அக்கினி மேன்மேல் வளர்ந்து சொலித்தபோதிலும் அந்தச் ஸமித்து முதலானது நசித்துப்போகும்போது அக்கினியும் முந்தினக்ஷணத்திற்கொஞ்சம், இரண்டாஞ்க்ஷணத்திற்கொஞ்சம், மூன்றாஞ்க்ஷணத்திற்கொஞ்சம், விழுக்காடு மேன்மேலெப்படிச் சாந்தியையடைகிறதோ; அப்படிப்போலச் சமாதியில் நிரோதிக்கப்பட்டமனதும் மேன்மேல் க்ஷணத்துக்குச்க்ஷணஞ் சாந்திப்பிரவாகரூபமான பரிணாமத்தையடையும். அக்காலத்தில் முன்னமுன்னேயுண்டாகிற சாந்திவாசனையே பின்னுண்டாகும்படியான சாந்தியிற் காரணம். இந்தநிர்விகற்ப சமாதிக்கி விரோதங்களாயும், புருஷமுயற்சியாற் றள்ளத்தக்கதுகளாயும், இருக்கிற மனோவிகாரங்கள். உத்தாலகருடைய சமாதிக்கட்டத்தில் வாசிட்டத்திற் சொல்லப்பட்டிருக்கிறதுகள். அதேதென்றால்? உத்தாலகரானவர் ஒரு மனோவிகாரமுமன்றியில் எப்போ நித்தியசுத்த நிருவிகாரமான பரமபதத்திலே நாம் சித்தவிசிராந்தியை யடைவோமென்று வெகுசிந்தையோடேகூட அடிக்கடி உட்கார்ந்து

தியானுப்பியாசம் பண்ணினுர். அப்போ அவருடையமனது மற்கடம்போலச் சஞ்சலமாய்ச் சமாதியை யடையமாட்டாமற் சில காலம் பாகியவிஷயத்தை நினைத்துக்கொண்டலைந்தது. அதைவிட்ட பிறகு அந்த மனதாகிய மற்கடஞ் சிலகாலம் ஆந்தரவிஷயத்தை நினைத்துக்கொண்டலைந்தது. மறுபடி ஆந்தரவிஷயத்தில் நின்றும் பாகியவிஷயத்திலும், பாகியவிஷயத்தில்நின்றும் ஆந்தர விஷயத்திலும், இது ஆந்தரம் இதுபாகியமென்று ஒன்றுந்தோணுமற் பயங்கொண்ட பக்ஷியானது ஆகாசத்திற்கிளம்பிப் பறக்கிறதுபோலச் சில காலம் மூலைக்குமூலை யலைந்துதிரிந்தது. ஒருக்காற் சூரியோதயமானதுபோல விஸ்தாரமாயிருக்கிறதேஜஸை நினைத்தது. ஒருக்கால்நிபிடமாயிருக்கிற தமசைநினைத்தது. ஒருக்கால் ஆகாசம்போல வெட்டவெளியை நினைத்தது. இப்படித்தோணினபடி க்ஷணத்துக்குக் க்ஷணமுண்டாகிற மனோவிகாரங்களையெல்லாம் உத்தாலகரானவர் விவேகத்தினுலே உடனேக்குடனே நாசம் பண்ணினுர். அப்படி நாசம்பண்ணினபோதிலும் மறுபடியும் விவேகமாகிய சூரியனைமறைக்கும்படியான மைபோலிருக்கப்பட்ட தமசுதோணித்து. அதையும் விவேகத்தினுடைய திடத்தன்மையினுலே தள்ளும்போது மறுபடி நிபிடமானதேயிசுதோணித்து. அதையுந்தள்ளும்போது மனது மயங்கிப்போய் நித்திரையை யடைந்தது. விவேகபெலத்தினுல் மனதை நித்திரையைவிட்டு வெளிப்படுத்திச் ஜாக்கிரதை பண்ணும்போது மறுபடி ஆகாசம்போல வெளிதோணித்து. அதையுந்தள்ளின பிறகு ஒன்றுந்தோணுமல் மனது மூடமாய்ப் போயிற்று. அதிதீரராயிருக்கிற உத்தாலகர் அந்த மூட அவத்தையையுந் தள்ளும்போது தேயிசு தமசு நித்திரை மோகம் முதலானதொன்றுமன்றி வாக்குனுலே இப்படிப்பட்டதென்றுசொல்ல அருமையான ஒரு நிஷ்டையையடைந்து அதினுல் மனது க்ஷணகாலமட்டுக்கும் பரிபூரண பரமானந்த பிரத்தியகபின்ன பிரமசொரூபத்தில் விசிராந்தியை யடைந்ததென்று வாசிட்

டத்திற் சொல்லியிருக்கிறது. ஆனபடியினலே இக்காலத்திலிருக்கப்பட்ட முமுக்ஷுக்களும் உத்தாலகரைப்போல நிர்விகற்பசமாதிக்கி விரோதங்களாக எப்படிப்பட்ட மனோவிகாரங்கள் வந்தாலும் பயந்து நடுவிலே தியானத்தை விட்டுவிடாமற் றயிரியத்தோடே புருஷமுயற்சியினலே திரும்பித்திரும்பித் தியானப்பியாசத்தையே செய்யவேண்டும். அதினலெவ்விதமும் ஈசுரானுக்கிரகத்தினலே நிர்விகற்பசமாதி கிடைக்கும். இப்படி யடயோகசாஸ்திரானுசாரமாக நிர்விகற்பசமாதிக்கிச் சாதனமாயிருக்கப்பட்ட இயமாதி சொல்லப்பட்டுது.

அப்படியே ஸ்ரீ சூங்கராசாரியாளாலே அபரோக்ஷாத்மாநுபூதிப்பிரகரணத்தில் அந்தநிற்விகற்பசமாதிக்கிச் சாதனமாயிருக்கிற இயமம் முதலான பதினைந்தங்கம் ராசயோகானுசாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

அதேதென்றால்? இயமம், நியமம், தியாகம், மௌனம், தேசம், காலம், ஆசனம், மூலபெந்தம், தேகசமத்தன்மை, லக்ஷியதிருஷ்டி, பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி, யென்று பதினைந்தங்கம். அதின் விபரம் யாதெனிற்சொல்லுகிறோம்.

(1) சர்வம் பிரமமென்கின்ற விவேகக்கியானத்தினலே இந்திரியக்கூட்டத்தினுடைய நிரோதத்தை அடிக்கடிபழகுவதே இயமம்.

(2) அந்த விவேகக்கியானத்தைத்தானே விஜாதீயவிர்த்தியன்றியிற் ஸஜாதீயவிர்த்திப்பிரவாகரூபமாகக் கிடைக்கும்படி நியமமாய்ப் பழகுவதே நியமம்.

(3) சர்வாதிஷ்டான சச்சிதானந்த பிரமசொரூபத்திற் கற்பிக்கப்பட்ட நாமரூபப்பிரபஞ்சம் அதிஷ்டானத்தைக் காட்டிலும் வேறன்றென்று தள்ளுவதே மகான்களுக்குச் சம்மதமான தியாகம்.

(4) சகலவாக்குக்களும் மனதோடேகூட யாதொருசொரூபத்தை விஷயீகரிக்கமாட்டாமற் றிரும்பிவிடுகிறதுகளோ; யாதொன்றானது சகலயோகிகளினாலும் அடையும்படியான நித்தியமௌனசொரூபமோ; அப்படிப்பட்ட சொரூபத்தை யெப்போதும் நினைப்பதே மௌனம். வாக்குமாத்திரம் நிரோதமாகிய மௌனம். அவிவேகிகளுக்கேயொழிய விவேகிகளுக்கன்று.

(5) யாதொரு சொரூபத்திற் கீழ்மேல்நடு வொருவிடத்திலும் ஒருஜனமும் பரமார்த்தமாகக்கிடையாதோ; யாதொருசொரூபத்தினாற் சகலமும் ஆகாசத்தினாற்போல வியாபிக்கப்பட்டிருக்கிறதோ; அந்தச்சொரூபமே விவேகிகளுக்கு வசிக்கும்படியான சுத்ததேசம்.

(6) யாதொருசொரூபமானது பிரமாதிசகல சராசரப்பிரபஞ்சத்தையும் நிமிஷகாலத்திற் கற்பனைபண்ணுகிறதோ; அப்படிப்பட்ட அகண்டானந்த அத்தொய்த சொரூபமே காலம்.

(7) எப்படித்தேக அவயவங்களை வைத்துக்கொண்டிருக்கிறதினாலே மனதுக்குத் தேகமூலமாய் வருத்தந்தோணாமலெப்போதும் பிரமானுசந்தானங் கிடைக்குமே; அதுவே சுகமாயிருக்கப்பட்ட ஆசனம்.

(8) யாதொருசொரூபஞ் சகல ஜகத்திற்கும், அதைத்தோற்றுவிக்கிற சித்தத்திற்கும், மூலமோ; அதுவே ராசயோகிகளிருக்கிறதற்கு யோக்கியமான மூலபெந்தம்.

(9) சிரவணமனன நிதித்தியாசனப் பெலத்தினாலே மனது சமமான்பிரமசொரூபத்தில் லயிப்பதே தேகசமத்தன்மையேயொழிய காஞ்சகட்டைபோல ஒழுங்காகத்தேகத்தை வைத்துக்கொள்ளுவது தேகசமத்தன்மையன்று.

(10) விவேகக்கியானமாகிய திருஷ்டியினாலே சகல ஜகத்தையும் பிரமமயமாகப் பார்ப்பதேலக்ஷியதிருஷ்டி. அல்லது ஞாதா ஞேயம் ஞானமென்று சொல்லப்பட்ட திரிபுடியானது யாதொரு சொரூபத்திலுண்டாகியடங்குகிறதோ; அந்தச்சொரூபத்திற்றிருஷ்டி வைப்பதே லக்ஷியதிருஷ்டி. அப்படியில்லாமல் மூக்குநுனிமுதலானதிற்றிருஷ்டிவைப்பது லக்ஷியதிருஷ்டியன்று.

(11) சித்தமுதலான சகலகற்பிதவஸ்துவையும் அதிஷ்டானப் பிரமசொரூபமாகப் பார்த்துச் சகலசித்தவிர்த்திகளையும் நிரோதிப்பது பிராணாயாமம். அதில் - அக்ஞானதற்காரியமான சகலபிரபஞ்சத்தையும் நேதிபண்ணித்தள்ளுவது இரேசகம். பின்பு நிருபாதிகமான பிரமசொரூபமே நாமென்கிற சித்தவிர்த்தியைச் சம்பாதிப்பது பூரகம். அந்தச்சித்தவிர்த்தியை சலியாமல் நிறுத்திக்கொள்ளுவது கும்பகம். இந்தப்பிராணாயாமமும் விவேகிகளான ராஜயோகிகளுக்குச் சொல்லப்பட்டது. அவிவேகிகளான அடயோகிகளுக்குப் பிராணசலன நிரோதரூபமான பிராணாயாமங் கீழ்ச்சொல்லப்பட்டிருக்கிறது.

(12) திரிசியமான சகலவிஷயங்களையும் ஆத்மசொரூபமாகப்பார்த்து மனதைத் திருக்குரூபமான ஆத்மாவினிடத்திற் றிருப்பிக்கொள்ளுவது பிரத்தியாகாரம்.

(13) மனது யெங்கெந்த விஷயத்திற் போகிறதோ உடனே யந்தவிஷயத்தைப் பிரமசொரூபமாகப்பார்த்து அந்தமனதைச் சொரூபத்திலிருத்திக்கொள்ளுவது தாரணை.

(14) ஒருபற்றுமன்றியிற் சச்சிதானந்த பரிபூரண பரமாத்துவைத பிரத்தியகபின்ன பிரமசொரூபமேநாம் நாமே அதென்று பழ

கப்பட்ட தொடர்ந்த விர்த்திப்பிரவாகமே பரமானந்தத்தைக்கொடுக்குப்படியான தியானம்.

(15) அந்தவிர்த்திப்பிரவாகந்தானே சத்தாதிவிஷயந் தோணுமலிருக்கும்போது சவிகற்பசமாதி. இந்தப் பதினைந்தங்கத்தையும் நிர்விகற்பசமாதி கிடைத்து நித்திய நிரதிசய நிருபாதிக பரமானந்தாநுபவம் வரும்வரைக்கும் நடுவிலே விட்டுவிடாமல் வெகுசிரத்தையோடே பழகினால் அதினாலெவ்விதமும் ஈசுரானுக்கிரகத்தினாலே நிர்விகற்பசமாதி சாக்ஷாத்காரங் கிடைத்துச் ஜீவன்முக்திச் சுகஞ்சித்திக்குமென்று ஸ்ரீ சங்கராசாரியாள் அபரோக்ஷாத்மாநுபூதிப் பிரகரணத்திற் சொல்லியிருக்கிறாள்.

மனோவிகாரங்கள் ஓயும்படியான புருஷ முயற்சியினாலே நிர்விகற்பசமாதி உண்டாகுமென்று பகவான் கீதையிலே சொல்லியிருக்கிறார். அதை நாம் இங்கே விஸ்தரித்துச் சொல்லுகிறோம். அதேதென்றால்? சிற்குச், சந்தனம், ஸ்திரீ, புத்திரன், மித்திரன், கிரகஞ், க்ஷேத்திரம், பசு, முதலானவிஷயங்கள். மோக்ஷசாத்திரத்திரத்திற் சமர்த்தாளாயிருக்கிற விவேகிகளுக்குப் பிரசித்தங்களான வெகுதோஷங்களோடே கூடிக்கொண்டிருந்தாலும்; அவிவேகிகளுக்கந்ததோஷங்களை அஞ்ஞானமான அவித்தையானது மறைந்துப்போட்டு அந்தவிஷயங்களைக் குணத்தை யுடைத்தானதுகள்போலவுஞ், சுகசாதனங்கள்போலவுந், தோற்றிவிடுகிறது. அதினாலே இந்த விஷயம் நமக்குவேண்டும் இந்தவிஷயம் நமக்குவேண்டுமென்று ஆசையுண்டாகிறதுகள். அந்தச் சிற்குச்சந்தனாதிவிஷய ஆசைகளையும்; அப்படியே பிரமலோகமுதலானதிலும், அணிமாதி அட்ட ஐஸ்வரியங்களிலும், உண்டாகிற ஆசைகளையும்; விஷயங்களிலிருக்கப்பட்ட அநித்தியதுக்கத்தன்மை முதலான தோஷதரிசனத்தினாலே மறுபடி மறு

படி ஆசைகளுண்டாகாமல் நாய்வாந்திபண்ணின அன்னத்தைப் போல சுத்தமாய் விட்டுப்போட்டு இந்திரியங்களைச் சுவாமிதரிசனங்கள் முதலானதிற்கூடப் போகாமற் சுவாதீனப்படுத்திக்கொண்டு பூமிகளின் ஜெயக்கிரமமாக மெள்ளமெள்ளச் சித்தசாந்தியைச் சம்பாதிக்கவேண்டும்.

பூமிகளாவதேதென்றால்? அதுகளைக் கடவல்லி யுபநிடதத்திற் சொல்லியிருக்கிறது. அதில்-வாக்குவியாபாரநிரோதம் முதற்பூமி. இதம் விர்த்திருபமான மனோநிரோதம், இரண்டாம் பூமி. விசேஷ அகங்கார நிரோதம் மூன்றாம் பூமி. சாமான்னிய அகங்கார நிரோதம் நாலாம்பூமி. இந்த நாலுபூமிகளையும் கிரமமாகச்சொல்லுகிறோம். லௌகீகமென்றுஞ், சாஸ்திரீயமென்றும், வாக்குவியாபாரம் இரண்டுவிதம். அதில் - வீண்வார்த்தையாகிய லௌகீகவாக்குவியாபாரம் வெகுவித விக்ஷேபயேதுவானபடியினாலே சமாதிபண்ணாத சமயத்திலேகூட அதைவிட்டுவிடவேண்டும். பஞ்சாக்ஷரசெபஞ், சிவநாமகீர்த்தனம், வேதாந்தவார்த்தை, இவைகள்முதலான சாஸ்திரீய வாக்குவியாபாரஞ் சித்தசுத்திக்கேதுவானதாலும், வெகுவிதவிக்ஷேபத்துக் கேதுவாகாதபடியினாலும், அதைச்சமாதி இல்லாத சமயத்திற் செய்யலாம். சமாதிகாலத்தில் அந்தவியாபாரத்தையும் விட்டுவிடவேண்டும். இது முந்தினபூமி. இந்த வாக்குவியாபாரம்நிரோதமாகிய முந்தினபூமி பிரயத்தனமாத்திரத்தினாலேதானாகட்டுஞ், சில நாள்களிலேதானாகட்டுஞ், சிலமாசங்களினாலேதானாகட்டுஞ். சிலவருஷங்களிலேதானாகட்டுந், திடமாகச் ஜெயித்துக்கொண்டு பின்பு இரண்டாம்பூமியில் முயற்சிபண்ணவேண்டும். அப்படி முந்தினபூமியைத் திடப்படுத்திக்கொள்ளாமல் விருதாஉச்சாகத்தினாலே மேல்ப்பூமியிலேறப்பட்டால் அப்போ முதற்படியைத் திடப்படுத்திக் கொள்ளாமல் மேன்மேல்க்கட்டப்பட்ட மாடியினுடைய படிகளைப்

படி நசித்துப்போமோ; அப்படி முந்தினபூமி திடப்படாததினுலே மேல்பூமிகள் நசித்துப்போகும். வாக்குவியாபாரம்போலச் சக்ஷுராதி இந்திரியவியாபாரங்களையுஞ் ஜெயிக்கவேண்டுமேயென்றால்? அவசியஞ் ஜெயிக்கவேண்டும். அந்தச்சக்ஷுராதி வியாபாரநிரோதத்தை எந்தபூமியிற் சம்பாதிக்கலாமென்றால்? இந்தவாக்குப்பூமியிற்றானுகட்டும். அல்லது மேற்சொல்லப்போகிற மனோபூமியிற்றானுகட்டுஞ், சம்பாதிக்கலாம்.

சங்கை? கடவல்லியுபநிடதத்தில் வாக்கை மனதிலடக்கச் சொல்லியிருக்கிறதே அதென்னவென்றால்? நானுவிதவிக்ஷேபத்தையுண்டுபண்ணுகிற வாக்கு, மனது, இரண்டுகளுக்குள்ளே முந்தி வாக்குவியாபாரத்தை விட்டுப்போட்டு மனோவியாபாரமாத்திரத்தோடேயிருப்பது வாக்கைமனதிலடக்குவதென் றுத்தரம்.

ஆடு மாடு குதிரைகளுக் கெப்படி வாக்குவியாபாரமில்லையோ; அப்படி வாக்குவியாபாரநிரோதஞ் சுபாவமாய்ச் சித்தித்த பிறகு மனதை ஞானுத்மாவினிடத்தி லடக்கவேண்டும். அதெப்படியென்றால்? நான் இன்னுனுடையபிள்ளை நான் இன்னுனென்றுண்டாகிற சரீராதிவிஷயமான அகங்காரம் விசேஷ அகங்காரம். அந்த அகங்காரத்தோடேகூடின ஆத்மா ஞானுத்மா அந்த ஞானுத்மாவினிடத்தில் மனதையடக்கலாவதேதென்றால்? அது இது வென்று நானுவிதமாய்த் தோணுகிற மனோவியாபாரங்களை விட்டுப்போட்டு விசேஷ அகங்காரமாத்திரத்தோடே யிருப்பதுதான் மனோவியாபாரத்தை யடக்குவது. அதுபிரயாசமென்று சொல்லக்கூடாது. ஏனென்றால்? வைராக்கியந், தியானுப்பியாச மில்லாதவாளுக்குப் பிரயாசமானுலும்; அதுகளுள்ளவாளுக்குச் சுலபந்தான். அந்தப்படி கீதையிற்சொல்லியிருக்கிறது.

உபாயத்தினாலே மனோவியாபாரத்தை நிக்கிரகிக்கலாமென்று திருஷ்டாந்தத்தோடேகூட கௌடபாதாசாரியாளுஞ் சொல்லியிருக்கிறாள். அதெப்படியென்றால் ? சமுத்திரக்கரையிலிருக்கப்பட்ட பக்ஷியினுடைய முட்டைகளைச் சமுத்திரன் அலையினாலே அபகரித்துப்போட்டான். அப்படிப்பட்ட சமுத்திரனை வற்றடித்துப் போடுவோமென்று அந்தபக்ஷியானது தன்னுடையமூக்குநுனியினாலே ஒவ்வொருவிந்துவிழுக்காடு சமுத்திரஜலத்தை யெடுத்தெடுத்து வெளியில் விடுகிறதற்கேற்பட்டது. அப்போதந்தப்பக்ஷிக்கி பெந்துக்களான வெகுபக்ஷிகள்வந்து தகைந்தபோதிலுந் தான் ஓயாமற்றானே அந்தபக்ஷிகளையுஞ் சகாயமாய்த்தானே யிருக்கவேண்டுமென்று பிராத்தித்தது அதுகளும் அந்தப்படி தாக்ஷணியந்தட்டாமற் சமுத்திரஜலத்தைக் கரையில் மூக்குநுனிகளினாற் கொத்திக்கொத்தி விடுகிறதற்காரம்பித்ததுகள். இப்படி யெல்லாப்பக்ஷிகளும் வெகுகாலம் வருத்தப்படுகிறதை நாரதர்பார்த்துத் தயையினாலே இந்தச் செய்தியை கெருடபகவானுக்கறிவித்து அவரைப்பக்ஷியினிடத்தில் வரும்படி யனுப்பிவித்தார். கருடபகவான் வரும்போதுதானே அவருடைய சிறகுகளினாலுண்டுபண்ணப்பட்ட வாயுவினாலேதானே சமுத்திரன்வற்றிப்போய்ப் பயந்துகொண்டு முன் தானபகரித்துக் கொண்டுபோன பக்ஷியினுடைய முட்டைகளை அந்தப்பக்ஷியின் பொருட்டுக் கொண்டுவந்து கொடுத்தானென்று கௌடபாதாசாரியாள் சொல்லியிருக்கிறாள். ஆனதால், இந்தத்திருஷ்டாந்தம்போல முமுக்ஷுவானபுருஷனும் வருத்தத்தைநினையாமல் உச்சாகத்தோடேகூடமனோநிரோதமாகிய உத்தமதருமத்தில் ஏற்பட்டுத் தியானம் பண்ணும்போது அவனுடைய வருத்தத்தைப்பார்த்துப் பரமதயாளுவாயிருக்கிற பரமசிவனனுக்கிரகம்பண்ணுவர் அதினாலே மனோநிக்கிரகஞ் சித்திக்கும். வருத்தந்தோணாமற் றியானம்பண்ணுகிறதற்குபாயமேதென்றால்? லோகத்திற் ஜனங்கள் அன்னத்தைப்புசிக்கும்

போது அதில் - அலுப்புத்தோணுமலிருக்கிறதற்காக நடுவிலே கறி குழம்பு, ரசம், பச்சடி, முதலானதைச் சேர்த்துக்கொண்டு அன்னத்தை யெப்படிப் புசிக்கிறார்களோ அப்படிப்போலத் தியானம்பண்ணுகிற புருஷனும் அதில்- அலுப்புவாராம லிருக்கிறதின்பொருட்டு நடுவில் அதற்கனுகூலமான வியாபாரத்தைப் பண்ணிக்கொள்ளவேண்டும். அந்தப்படி வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறது.

அதேதென்றால்? ஒருநாழிகையாகட்டும், ஒருமுகூர்த்தமாகட்டுஞ், சக்த்தியுள்ளமட்டுக்கும் முந்தித் தியானம்பண்ணிப் பின்பு ஒருமுகூர்த்தம் வரைக்குஞ் சாஸ்திரசிரவணாத்தினாலே தானாகட்டுஞ், சிசுருடையினாலேதானாகட்டுங், குருவையனுசரித்துப் பிறபாடு ஒரு முகூர்த்தம்வரைக்குந் தன்னுடைய தேகஸ்திதியைப் பார்த்துக் கொண்டுபின்னொரு முகூர்த்தம்வரைக்குந் தியானத்துக்கந்தரங்கமான சாஸ்திரத்தைப் பரியாலோசனை பண்ணிப்பார்த்துத் திரும்பவுந் தியானத்தை ஒருமுகூர்த்தம் அப்பியாசிக்கவேண்டுமென்று சொல்லியிருக்கிறது. இப்படித் தியானத்தை முக்கியமாய்வைத்துக்கொண்டு குருசிசுருடை சாஸ்திர சிரவணமுதலான வியாபாரத்தையும் நடுவிற் கலந்துகொண்டு தியானத்தை யப்பியாசிக்கும்போது நித்திரைக்கு முன்னேடே இன்றையதினத்தில் இவ்வளவுமுகூர்த்தம்வரைக்குந் தியானம்நடந்ததென்றெண்ணிக் கணக்குப்பண்ணிக் கொள்ளவேண்டும். அதற்கு மறுதினத்திலாகட்டுங். மறுபக்ஷத்திலாகட்டும், மறுமாசத்திலாகட்டும், தியானமுகூர்த்தத்தை வளர்க்கவேண்டும். இப்படி யெவ்வொருதியானமுகூர்த்தத்தில் ஒவ்வொரு க்ஷணஞ்சேர்ந்தாலும் ஒருவருஷகாலத்துக்குள்ளே தியானமுகூர்த்தம் அதிகமாகிவிடும். இப்படியாயுள்ளளவிற் றியானமுகூர்த்த வளருகிறதினாலே இதரவியாபாரங்களெல்லாம் இல்லாமற்போமே யென்று சங்கிக்கவேண்டியதில்லை. ஏனென்றால்? சகலவியாபாரங்

களும் இல்லாதவனுக்கே தியானத்தில் முக்கியாதிகார மானதால் இதரவியாபாரங்களில்லாமை இஷ்டந்தான். இதற்காகவே வித்துவச்சந்நியாசஞ் சுருதிகளினுலே விதிக்கப்பட்டிருக்கிறது. ஆனபடியினுலே தியானமாத்திர நிஷ்டையை யுடைத்தான புருஷன் கிரமமாக மனோவிகார நிரோதத்தையடைவன். அதெப்படிப்போலவென்ருல் ? வேத அத்தியயனம்பண்ணுகிற பிரமச்சாரி தினங் கொஞ்சம் விழுக்காடு அத்தியயம்பண்ணிப் பத்து பன்னிரண்டு வருஷத்துக்குள்ளே தாந்தானே பிறருக்கு அத்தியயனஞ் சொல்லிவைக்கும்படியான சாமர்த்தியத்தையடைந்து எப்படி வாத்தியாராக ஆகிருனே யேழையாயிருக்கிறசெட்டி ஜாக்கிரதையாய் வியாபாரம்பண்ணும் போது கிரமமாய்ச் சிலநாளையில் மேன்மேலும் பணம்வளர்ந்து எப்படி லக்ஷப்பிரபாகிருனே அப்படி அவர்களோடேகூடத் தியானத்திற்காரம்பித்து அந்தப்பிரமச்சாரி செட்டிகளை யெதிரிகள்போலே பாவித்துக்கொண்டு விடாமற் றியானம் பண்ணிக்கொண்டுவந்தால் பத்துப் பன்னிரண்டுவருஷத்துக்குள்ளே என் மனோவிகாரநிரோதஞ்சித்திக்கமாட்டாது சித்திக்கவே சித்திக்கும். ஆனதால், அடிக்கடிவரப்பட்ட மனோவிகாரங்களையெல்லாம் உத்தாலகர்போலப்புருஷமுயற்சியினுற் ஜெயித்து நானின்னுனுடைய புத்திரன் நான் இன்னுனென் றிதுமுதலான விசேஷ அகங்காரத்தை யுபாதியாயுடைத்தான ஞானத்மாவினிடத்தில் மனதை யடக்கவேண்டும். இந்த விரண்டாம்பூமியைச் ஜெயித்துக்கொண்டு பூாலன்போலவும், ஊமை போலவும், மனோவிகாரமில்லாமற் சுபாவமாய்ச் சித்தித்தபிறகு ஞானத்துமாவை மகாத்துமாவினிடத்தில் அடக்கவேண்டும், அதாவதேதென்ருல் ? நானிருக்கிறேனென்று இவ்வளவுமாத்திர முண்டாகிற அகங்காரஞ் சாமான்னிய அகங்காரம். அது சகலமானபேர்களிடத்திலும் வியாபித்துக்கொண்டிருக்கிறபடியினுலே அதற்கு மகதத்துவமென்றும் பெயர் அந்த அகங்காரத்தை யுபாதியாயுடைத்தா

ன ஆத்துமா மாகாத்துமா அந்தச் சூக்ஷமமான சாமான்னிய அகங்காரத்தோடே கூடின மகாத்துமாவினிடத்தில் ஸ்தூலமான விசேஷ அகங்காரத்தை அடக்குவது மூன்றும்பூமி. கொஞ்சமயக்கத்தை யடைந்த புருஷனுக்கு விசேஷ அகங்காரமானது தனக்குத்தானே எப்படி அடங்கிப்போகிறதோ; அப்படி மயக்கமன்றியிற்றனே அகங்காரம் மறக்கவேண்டுமென்று செய்யப்பட்ட தியானியினுடைய முயற்சியினலே விசேஷ அகங்காரம் அடங்கிப்போகும். இப்படி லோகப்பிரசித்தமான மயக்கத்துக்குச் சமானமாயுந், தார்க்கீகாளுக்குச் சம்மதமான நிர்விகற்பஞானத்துக்குச் சமானமாயும், இருக்கிற மகதத்துவமென்று சொல்லப்பட்ட சாமான்னிய அகங்காரமாத்திரமாய்மிஞ்சுவதாகிய மூன்றும்பூமி அப்பியாசபெலத்தினலே நன்றய்ச் சுவாதீனப்பட்டபிறகு அந்தச்சாமான்னிய அகங்காரத்தோடேகூடினமகாத்துமாவை யொருபாதியுமன்றியில் நிருபாதிகராய்ச் சின்மாத்திர சொரூபராயிருக்கிற சாந்தாத்துமாவினிடத்திலடக்கவேண்டும். மகதத்துவத்தையு மடக்கிப்போட்டுச் சுத்தமாய் விக்ஷேபம் ஆவரணமன்றியிற் சின்மாத்திரமாக மிஞ்சவேண்டுமென்று தாற்பரியார்த்தம். இந்தநாலுபூமிகளுங் கிடைக்கிறதற் கெந்தவிதமும் மனோவிகாரங்களை மறக்கடித்துப் போடுவோமென்கிற முயற்சியே முக்கியமான உபாயம். இப்படிக் கிரமமாக முயற்சிபண்ணும்போது சாஸ்திரம் படிக்க ஆரம்பித்த புருஷனுக்கு முந்திக் கிரந்தத்துக்குக்கிரந்தம் வியாக்கியானம் வேண்டியிருந்தாலும் சிலநாட் சாஸ்திராப்பியாசம் பண்ணி விற்பத்தியுண்டானபிறகு தனக்குத்தானே மேன்மேலக் கிரந்தமெப்படித்தோணுகிறதோ அப்படிக் கீழ்ப்பூமியில் ஆலசியமில்லாமல் வருத்தப்பட்டுச் செம்மையாய் அப்பியாசம்பண்ணிக் கீழ்ப்பூமிவசப்பட்டால் அதினலே மேல்ப்பூமிகிடைக்கும்படியான உபாயந்தனக்குத்தானேதோணும். அந்தப்படியோகபாஷியக்காரர்ள் சொல்லியிருக்கிருர்ள். ஆனதால், தியானம்பண்ணும்போது எப்படிப்பட்ட

விக்கினம்வந்தாலும் மலைத்துப்பயந்துகொண்டு நடுவிற்றியானத்தை விட்டுவிடாமல் உத்தாலகரைப்போல மஹாதயிரியத்தோடேகூடத் தியானம்பண்ணினால் எவ்விதமும் பரமேசுரானுக்கிரகத்தினாலே நிர்விகற்பசமாதிகிடைக்குஞ் சந்தேகம் லேசமுமில்லை.

கீழ்ச்சொன்ன வாக்குமுதற் சாந்தாத்துமாவரைக்கும் ஒன்றைக்காட்டிலுமொன்று ஆந்தரமாயிருக்கும். அதெப்படி யென்றால்? சாந்தாத்துமா எல்லாத்திற்கும் ஆந்தரராய்ச் சின்மாத்திரசொரூபரா யிருக்கிறார். அவரிடத்திற் சடமாய் அவ்வியுத்தமாய் ஒறக்ஞானங்கற் பிதமாயுண்டு. அந்தஅவ்வியத்தமானஅக்ஞானம் முந்திச் சாமான்னிய அகங்காரமென்கிற ரூபத்தையும், மகதத்துவமென்கிற நாமத்தையுந், தறித்துக்கொண்டு வியத்தமாகிறது. பின்பு அதற்குப்பாகியத்தில் விசேஷஅகங்காரரூபமாகவும், அதற்குப்பாகியத்தில் மனோரூபமாகவும், அதற்குப்பாகியத்தில் வாக்குமுதலான இந்திரியமாகவும், வியத்தமாகிறது. அந்தப்படி கடவல்லியுபநிடதத்திற்றானே சொல்லியிருக்கிறது. ஆனதால்; சாந்தாத்துமாவைத்தொட்டு வாக்குவரைக்கும் பாகியமானவொன்றொன்றை ஆந்தரமான வொன்றொன்றி லடக்கிக்கொண்டுவரும்போது சர்வாந்தரரா யிருக்கிற சாந்தாத்துமாவினிடத்திற் சமாதிகிடைத்துச் சொரூபானந்தாநுபவங்கிடைக்கும்.

சங்கை? மகதத்துவத்துக்குஞ், சாந்தாத்துமாவுக்கும், நடுவிலே மகதத்துவத்துக் குபாதானமாக அவ்வியத்தமான அஞ்ஞானஞ் சுருதியிற் சொல்லப்பட்டிருக்கிறதே; அதனிடத்தில் ஏன் மனதிற்கடக்கஞ் சொல்லவில்லையென்றால்? சுழுத்திவந்து நேரிடுமென்றுசொல்லவில்லை. தினந்தோறும் ஒருமுயற்சியுமன்றியிற் கிடைக்கிற சுழுத்திக்காக ஒருநிஷ்டையும் வேண்டுமா; வேண்டியதில்லை. சுழுத்தி சொரூபசமாதிக்கிப் பிரதிபந்தமென்று மேற்சொல்லப்போகிறோம். ஆனதால், அந்தச்சுழுத்திக்கேதுவான பூமியைச்சொல்லவில்லை.

சங்கை? சவிகற்பசமாதி ஏகாக்கிரவிர்த்தி ரூபமானதாற் சொரூபாநுபவத்திற் கேதுவாகலாம். சாந்தாத்துமாவினிடத்திலடக்கப்பட்டு நிர்விகற்பசமாதியை யடைந்திருக்கிற மனது ஒருவிர்த்தியுமில்லாததினாலே சுழுத்தியைப்போற் சொரூபாநுபவத்திற்கேதுவாகமாட்டாதென்று சங்கைவந்தா லெப்போதுஞ் சுபாவமாய்ச் சித்தித்திருக்கிற சொரூபாநுபவத்தை யொருவராலுந் தள்ளக்கூடாதபடியினாலும், நிர்விகற்பசமாதியில் மனது சமஸ்காரமாத்திரமாகிய சூக்ஷமரூபமா யிருக்கிறபடியினாலும், அந்தச்சங்கைகூடாது, அந்தப்படி சிரேயோமார்க்கமென்கிறகிரந்தத்திற் சொல்லியிருக்கிறதேதென்றால்? மனதானது சுபாவமாய் ஆத்துமாகாரமாவும், அனாத்துமாகாரமாகவும், மெப்போதுமிருக்கிறது. அதினால், அனாத்துமாகாரம்நீங்கி ஆத்துமாகாரமாத்திரமா யிருக்கிறதற்காக முமுக்ஷுவானவன் அனாத்துமாகாரம் நீங்கும்படியான முயற்சிபண்ணவேண்டுமேயொழிய ஆத்துமாகாரஞ் சித்திக்கவேண்டுமென்று யாதொருமுயற்சியையும்பண்ணவேண்டியதில்லை. லோகத்திலே எப்படியானால்; கடமுண்டாகச்சே ஆகாசத்தினாலே நிரம்பினதாகவேயுண்டாகிப்பின்பு புருஷமுயற்சியினாலே அரிசி ஜல முதலானதால் நிரம்பப்படுகிறதோ; அந்தக்கடத்தில் அரிசி முதலானதைத் தள்ளிவிட்டபோதிலும் அதிலிருக்கப்பட்ட ஆகாசத்தைத்தள்ளச் சக்தியில்லையோ; கடத்தினுடைய முகத்தைத் துணிமுதலானதால் மறைத்துப்போட்டாலும்; ஆகாசமுள்ளே யிருக்கவேயிருக்கிறதோ; அப்படிப்போல மனதுண்டாகச்சே ஆத்துமசை தன்னியத்தினாலே நிரம்பினதாகவே யுண்டாயிற்று. உண்டானபிறகு அந்தமனதிற் புருஷனுடைய தருமாதருமவசத்தினாலே கருவிலுருக்கி யூத்தப்பட்ட தாம்பிரமுதலானதுபோற் கடபடாதியாகார மாகவுஞ், சுகதுக்காதியாகாரமாகவும், விர்த்தியுண்டாகிறது. அதில் கடபடாதியனாத்துமாகாரத்தை நீக்கினபோதிலும் ஒருநிமித்தமுமன்றியிற் சொதசித்தமாயிருக்கிற சின்மாத்

திரூபமான ஆத்துமாகாரத்தை மனதுள்ளவரைக்கும் ஒருக்காலும் ஒருவராலும் நினைக்கக்கூடாது. ஆனபடியினாலே நிர்விகற்பசமாதியினால் அனாத்துமாகாரமான ஒருவிர்த்தியு மில்லாவிட்டாலும் மனது சமஸ்காரமாத்திரமாகிய சூக்ஷுமரூபமாக மிஞ்சிச் சின்மாத்திர ஆத்துமாகாரமாய் ஏகாக்கிரமாயிருக்கிறபடியினாலே அப்படிப்பட்ட மனதினாலே யொருபிரதிபந்தமுமன்றியில் நிருவிக்கினமாகச் சின்மாத்திராத்தும சொரூபாநுபவம் வெகுநன்றாய்க் கூடலாமென்று சொல்லியிருக்கிறது. அந்தப்படி வார்த்திகாசாரியாள் சர்வாநுபவ யோகிமுதலானபெரியவாள் வெகுபேர்கள் வெகுவாய்ச்சொல்லியிருக்கிறார்கள். ஆனதால்; ஆத்துமாநுபவம் மனதிற்குச்சொதசித்தமாயிருந்தாலும் அனாத்துமாகாரத்தை நீக்கிறதற்காகத் தியானப்பியாசம் வேண்டியதென்று சித்தமாச்சுது. தியானப்பியாசத்தினாற் கிரமமாக நிற்விகற்பசமாதிகிடைக்கும்போது அனாத்துமாகாரம் நீங்கிப் போகும். ஆனதால்; அந்தச்சமாதி கிடைத்தபிறகு ஒன்றையும் நினைக்கக்கூடாது. நிர்விகற்பசமாதியினாற் சுத்த துவம்பதார்த்த சாக்ஷாத்காரம்வந்தாலும் அந்தத் துவம்பதார்த்தத்திற்குச் சுத்ததற்பதார்த்தத்தோடே அபேதத்தை விஷயீகரிக்கும்படியான பிரமவித்தையென்கிறவிர்த்தி யெதினாலுண்டாகுமென்றால்? முன்சிரவணம்பண்ணப்பட்டிருக்கிற மஹாவாக்கியத்தினால் அந்தப்பிரமவித்தையென்கிறவிர்த்தி யுண்டாகும். சுத்த துவம்பதார்த்த சாக்ஷாத்காரத்தில் நிர்விகற்பசமாதியொன்றே ஏதுவென்று நியமங்கிடையாது சிற்சட விவேகத்தினாலேகூடச் சடமான சரீராதியைக்காட்டிலுந் தற்சாக்ஷியாயிருக்கிற சின்மாத்திர சுத்த துவம்பதார்த்தம் வேறென்று பிரிக்கும்போது அதின் சாக்ஷாத்காரங் கூடலாம், அந்தப்படி வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறது. அதேதென்றால்? யோகமென்றும், ஞானமென்றுஞ், சித்தநாசம் வருகிறதற்கிரண்டுபாயம். அதில்-சித்தவிர்த்தி நிரோதம்பண்ணுவது யோகம். சிற்சடரூபங்களான ஆத்துமா

ஞாத்துமாக்களை நன்ருய்ப் பிரித்துப்பார்ப்பது ஞானம். அதில் சில பேர்களுக்கு யோகஞ்சாத்தியமாய்த்தோன்றும். சிலபேர்களுக்கு ஞானஞ் சாத்தியமாய்த்தோன்றும். யெவர்களுக்கெதில் ருசியுண்டாகிறதோ; அவாள் அதையனுஷ்டிக்கட்டுமென்று பரமேசுரன் இரண்டு பிரகாரத்தையுஞ் சொல்லியிருக்கிருரென்று வாசிட்டத்திற்சொல்லியிருக்கிறது.

சங்கை? சிற்சடவிவேகமும் அனுபவகாலத்தில் ஆத்மாமாத்திரங் கோசரமான யேகாக்கிரவிர்த்திரூபமா யாகிறபடியினுலே யந்த விவேகஞ் சணிகசவிகற்பசமாதியாகலாமே? ஆனதால், விவேகமும் யோகமாகவேயாகிறபடியா லிரண்டுக்கும் பேதமில்லை. ஏனென்ருல்? பேதமுண்டு. அதெதினுலென்ருல்? அந்தச் சவிகற்பசமாதிக்கும், நிர்விகற்பசமாதிக்குஞ், சொரூபத்தினுலுஞ், சாதனத்தினுலும், நிரம்பப்பேதமுண்டு. அதினுல் நிர்விகற்பசமாதியாகிய யோகத்துக்கும், விவேகத்திலுண்டாகிற சணிகசவிகற்ப சமாதிக்கும், பேதந்தான். அதேதென்ருல்? சவிகற்பசமாதியில் விர்த்தியிருக்கிறபடியினுலேயும், நிர்விகற்பசமாதியில் விர்த்தியில்லாத்தினுலேயுஞ், சொரூபத்தினுலே இரண்டு சமாதிகளுக்கும் பேதம் நன்ருயுண்டு. இரண்டுகளுக்குஞ் சாதனத்தினுலே பேதமாவதேதென்ருல்? சவிகற்பசமாதிக்கிநீ தாரணை, தியானஞ், சமாதி மூன்றும். விர்த்தியோடேகூடினதுகொண்டு ஸஜாதீயமானதால் அந்தமூன்றும் அந்தச்சமாதிக்கி அந்தரங்கசாதனம். நிர்விகற்பசமாதியில் விர்த்தியில்லாததினுலே விர்த்தியோடேகூடின அந்தமூன்றும் இந்தச்சமாதிக்கிப் பகிரங்கசாதனமானதால், இரண்டு சமாதிகளுக்குஞ் சாதனத்தினுலேயும் பேதமுண்டு. விர்த்தியில்லாத நிர்விகற்பசமாதிக்கி விர்த்தியோடேகூடின தாரணைமுதலான மூன்றும் விஜாதீயமானதால், அதற்கு அதுபகிரங்கசாதனந்தான். எப்படியாகுமென்ருல்? வெகு விதமான

அனுத்தும விர்த்திகளைத் தள்ளி உபகாரம் பண்ணுகிறபடியாற் பகிரங்கசாதனமாகலாம். அந்தப்படி பதஞ்சலிபகவான் சொல்லியிருக்கிறார். அதேதென்றால்? யோகமென்றுசொல்லப்பட்ட கீழ்ச்சொன்ன நிர்விகற்பசமாதி சர்வோத்தமமென்று கீதைமுதலான சாஸ்திரத்தைக் கேட்டதினாலே நமக்கந்தயோகமே பரமபுருஷார்த்தசாதனமென்று விசுவாசமுண்டாகும். அந்தவிசுவாசமாகிய சிரத்தையினாலே யெவ்விதமும் யோகத்தைச் சம்பாதிப்போமென் றுச்சாகமுண்டாகும். அதினாலே சாஸ்திரத்திற் சொல்லப்பட்ட யோகங்களை நினைத்துக் கொண்டு அந்த நினைவினாலே சமாதியை நன்றாயனுஷ்டிக்கிறபோது சித்தம் நிருமலமாய் ரிதம்பரப் பிரக்ஞையென்று சொல்லப்பட்ட ஞானமுண்டாகும். அதாவதேதென்றால்? சூக்ஷுமமாயுந் தூரத்திலிருக்கப்பட்டதாயு மிந்திரியகோசரமன்றியிற் குட்டியமுதலானதால் மறைக்கப்பட்டதாயு மிருக்கிற சகலவஸ்துவையும் பிரத்தியக்ஷமாய் அறிகிறஞானமே ரிதம்பரப்பிரக்ஞையென்று சொன்ன ஞானம். அந்தரிதம்பரஞானமும்; விகற்பத்தோடே கூடினதுகொண்டு நிர்விகற்பசமாதிக்கிப் பிரதிபந்தம். ஆனதால், அந்தஞானமும் இந்த நிர்விகற்பசமாதியிற் பகிரங்கசாதனமேயொழிய அந்தரங்கசாதன மன்று. அப்படியிருக்கச் சவிகற்பசமாதி பரிபாகத்தினாலுண்டாகிற அந்த ரிதம்பரஞானத்துக்குக் கீழ்ப்பட்டதாரணை முதலானது நிர்விகற்பசமாதியிற் பகிரங்கசாதனமென்கிறதிற் கேழ்க்கவேண்டியது தென்னவென்று சொல்லியிருக்கிறார். அந்தச்சமாதிக் கந்தரங்கசாதனந்தானேதென்றால்? அந்தரிதம்பரஞானத்தை நிரோதித்ததினாற் சகலவிஷயாகாரமான விர்த்திநிரோத முயற்சி யாதொன்றுண்டோ அதுவே நிர்விகற்பசமாதியில் அந்தரங்கசாதனம். அப்படிப்பட்ட அந்தச்சமாதி சுழுத்திக்கிச் சாதனமாகச் சாக்ஷிசைதன்னியத்தினால் விளங்கப்படும். அந்தச்சமாதி யொருவிர்த்தியுமில்லாததினாற் சுழுத்திதானென்று சங்கிக்கக்கூடாது. ஏனென்றால்? சுழுத்தியில் மனது

அக்ஞானத்தில் லயித்து அதிஞகாரமாகித் தன்னுடைய சொரூபமன் றியிற்போகிறது. நிர்விகற்பசமாதியில் மன்தானது நிர்விட்சேப நிராவரண பரிபூரண பரமானந்த பிரத்தியகபின்ன பிரமசொரூபத்திற் சமரசப்பட்டுத் தன்னுடைய சொரூபத்தோடேயிருக்கிறது. ஆன படியாற் கீழ்ச்செய்த சங்கைகூடாது. அந்தப்படி கௌடபாதாசாரி யாள் சொல்லியிருக்கிருள். அதேதென்ருல்? புருஷமுயற்சியினுல் நிரோதிக்கப்பட்டு நிர்விகற்பசமாதியை யடைந்திருக்கிற மனதினு டைய ஸ்திதி சுழுத்தியைக்காட்டிலும்; விலக்ஷணமேதவிரச்சுழுத்தி யன்று. ஏனென்ருல்? சுழூத்தியில் மனது லயித்துப்போகிறதன்ரே; சமாதியில் லயிக்கவில்லைப் பின்னையோவென்ருல்? சர்வத்திரபரிபூ ரணமாய்ச்சுயம்பிரகாச சித்துரூபமாய் நிர்ப்பயமாய்ப் பரமான்ந்தரூப மாயிருக்கிற பிரமசொரூபத்திற் பாலிற்கலந்த ஜலம்போல யேகரச மாய்க்கலந்து சொரூபானந்தாநுபவத்தில் மூழ்கி வெகுசூக்ஷமமா யிருக்கிறது. ஆனதால், சமாதியுஞ் சுழுத்தியுஞ் சமானமென்று ஒருக் காலுஞ் சொல்லக்கூடாதென்று சொல்லியிருக்கிருள். அந்தப்படி பின்னும் வெகுவிடத்திற் சொல்லியிருக்கிறது.

சங்கை? இப்படி நிர்விகற்பசமாதிக்குஞ் சுழுத்திக்கும் வெகு பேதமிருக்கட்டும் ஆனுலுந்; தத்துவத்தையறியவேண்டுமென்றிச் சிக்கிற சிஞாசுவுக்கு ஞானசாதனமாக அந்தச்சமாதி வேண்டியிருந் தாலுந்; தத்துவத்தையறிந்த வித்துவானுக்குச் சுழூத்தியினுலேதானே ராகத்துவேஷாதி கிலேசமாகிய பந்தம் நிவிர்த்தித்துப்போகிற படியினுலே ஞானிக்கிப் பந்தநிவிர்த்திக்காகச் சமாதிவேண்டிய தில்லை. ஏனென்ருல்? அதுகூடாது. ஏனென்ருல்? தினந்தோறுந் தனக்குத்தானே எப்போதாகிலும் வரப்பட்ட சுழுத்தி ஜாக்கிரதி சையி லநுபவிக்கப்பட்ட பந்தத்தை நீக்கிவைக்கமாட்டாது. அப்பி யாசத்தினுலே நிரந்தரமாய்ச் சம்பாதிக்கப்பட்ட சுழுத்தி பந்த

த்தை நீக்கிவைக்குமென்றுஞ் சொல்லக்கூடாது. ஏனென்றால்? ஜாக்கிரசொற்பன போகத்தைக்கொடுக்கும்படியான கருமம் நசித்து அதனால் வரும்படியான சுழுத்தி கருமநாசமன்றியிலே யெப்பேர்ப் பட்ட அப்பியாசத்தினாலும்; நிரந்தரமாய்க் கிடைக்கமாட்டாது. ஆனபடியினாலே சுழுத்தியினாற் பந்தநிவிர்த்திகூடாததினால் ஞானிக் கிப் பந்தநிவிர்த்தியின்பொருட்டு அவசியம் நிர்விகற்பசமாதி வேண் டவேவேண்டும். அந்தச்சமாதிகிடைக்கிறதற்கு ஆடுமாடு முதலா னதுபோல வாக்குவியாபார நிரோதமாகிய முந்தினபூமியும், பாலன் மூகன் முதலானவர்போல இதம்விர்த்தியாகிய மனோவியாபார நிரோதரூபமான இரண்டாம்பூமியும், மயக்கத்தைப்போல விசேஷ அகங்காரமில்லாமையாகிய மூன்றாம்பூமியுஞ், சுழுத்தியைப்போலச் சாமான்னிய அகங்காரமாகிய மகதத்துவரூபமான நாலாம்பூமியும், உபாயம். இப்படிப் பூமிக்கிரமமாக மனோநாசம் வரவேண்டுமென்கிற அபிப்பிராயத்தினாற் பகவான் கீதையில் மெள்ள மெள்ள மனதை ஓயப்பண்ணவேண்டுமென்று சொல்லியிருக்கிறார். இப்படி மனோ நாசம்பண்ணுகிறதிற் றயிரியமும், விவேகபுத்தியுஞ், சாதனம். சுபா வமாய் வெகுவேகத்தோடேகூட வெகிர்முகமாய்ப் பிரவிருத்திக்கிற மகதத்துவ அகங்கார மனோவாக்கு முதலானதுகளை நிரோதிக்கிற திற் கரையிரண்டு பிரவேசிக்கிற நதியைத் தகைவதுபோல மஹா தயிரியம்வேண்டும். முந்தினபூமி ஜெயிக்கப்பட்டுதா இல்லையா வென்று பரியாலோசனை பண்ணிப்பார்த்துச் ஜெயிக்கப்பட்டால் மேற்பூமி யாரம்பிக்கவேண்டும். இல்லாவிட்டால் அந்த முந்தின பூமியைத்தானே திரும்பித்திரும்பிப் பழகவேண்டுமென்று இப்படிப் பட்ட விவேகமாகிய புத்தியும் வேண்டும். இப்படித்தயிரியத்தோடே கூடின விவேகபுத்தியினாலே தியானப்பியாசம் பண்ணிக்கொண்டு

வரும்போது அந்தத்தியானத்திற்குப் பிரதிபந்தமாக லயமென்றும், விக்ஷேபமென்றுங், கஷாயமென்றும், ரசாஸ்வாதமென்றும், நாலுண்டு. அந்தப்படி கௌடபாதாசாரியாள் சொல்லியிருக்கிருள்.

அதில்-லயமாவதேதென்ருல்? தியானத்தின்பொருட்டு விஷயங்களிலேநின்றுந் திருப்பப்பட்ட மனது வெகுநாட்சுழுத்திப்பழக்கத்திஞலே சுழுத்தியிற் போகுவதே லயமென்கிற பிரதிபந்தம். யெப்போ லயத்தில் மனது போகிறதோ அப்போது அந்த மனதை லயத்தில் நின்றும் வெளிக்கிளம்பும்படியான முயற்சியிஞலே ஜாக்கிரதைபண்ணிவைத்துத் திரும்பித்தியானத்திற் பிரவருத்திப்பிக்கவேண்டும். முயற்சியிஞலேதானே நீங்காமல் லயம் பிரபலமாயிருந்தால் அப்போ லயகாரணத்தை நீக்கி அதிஞல் லயத்தை நீக்கவேண்டும். நித்திரையினுடைய சேஷம், அசீரணம், அதிகபோசனம், அலைச்சல் முதலானதாற் சரீரசிரமம், இந்த நாலும் லயகாரணம். அதில்-முந்தின நித்திரையின் சேஷமாகிய லயகாரணத்தை மிச்ச நித்திரையைப் பண்ணியே நீக்கவேண்டும். அசீரணம், வெகுபோசனம் இரண்டையும் முன்புசித்த அன்னமுதலானது நன்ருய்ச் சொரிக்கும் வரைக்கும் போசனத்தைத் தள்ளுகிறதிஞலேயுஞ், சொற்பபோசனம் பண்ணுகிறதிஞலேயும், நீக்கவேண்டும். அலைச்சல் முதலானதைவிட்டுச் சரீரசிரமத்தை நீக்கவேண்டும். இப்படி லயகாரணத்தை நீக்கும்போது லயம் நீங்கிப்போகும். அல்லது பிராணயாமத்திஞலேயாவது, லயத்தை நீக்கலாம். எவர்களுக்கெந்தமார்க்கத்தில் அப்பியாசமோ அந்தமார்க்கத்திஞலே லயத்தை நீக்கிக்கொண்டு மறுபடிமறுபடி தியானம் பண்ணவேண்டும். விக்ஷேபமாவதேதென்ருல்? லயத்தினின்றுந் திரும்பப்பட்டமனது தினந்தோறும் பழகின ஜாக்கிரசமஸ்காரத்திஞலே சத்தாதிவிஷயத்திலும், அதின்போகத்திலும், நினைத்து நினைத்துக்கொண்டு பிரவருத்திப்பதே விக்ஷேபம்

அந்தவிக்ஷேபத்தை மனதெப்போ அடைகிறதோ அப்போ விவேகி களாலறியத்தக்கதுகளான சத்தாதி போக்கியவிஷயத்தி லிருக்கப்பட்ட தோஷங்களையும், அதினால் வரப்பட்ட துக்கத்தையுஞ், செம்மையாய் நினைத்துப்பார்த்து. சாஸ்திரப் பிரசித்தமான நிருவிகார பரிபூரண பரமானந்த பரமாத்துவைத பிரமசொரூபத்தையும், நினைத்துப்பார்த்து. அசத்துரூபமான இந்தவிஷயங் காலத்திரயத்திலுஞ் சத்தாயிருக்கிற பிரமசொரூபத்திற் சுழுத்தியிற்போல ஒருநாளு மில்லவேயில்லை யென்கிற வாததிருஷ்டியினாலே தானாகட்டும், விஷயந்தோணினபோதிலுஞ்; சொற்பன இந்திரசாலம்போலப் பொய்யென்கிற மித்தையாதிருஷ்டியினாலே தானாகட்டும், எப்படியானால்? சொற்பனத்திற் காணப்பட்ட விஷயமுழுவதும் அதைக்காணுகிற சாக்ஷியாயிருக்கிற நம்மைக்காட்டிலும் வேறன்றே; அப்படிச் ஜாக்கிரகாலத்திற் காணப்படுகிற விஷயமுழுவதும் அதைக்காணுகிற சாக்ஷிசித்துரூபமான நம்மைக்காட்டிலும் வேறன்று. பின்னையோவென்றால்? சகல திரிசியமுந் திருக்காயிருக்கிற நாமே அப்படிப்பட்ட நாம் அகண்டேகரசமான பிரமமென்கிற தன்மயரூபமான பிறவிலாப திருஷ்டியினாலே தானாகட்டும், அடிக்கடியுண்டாகிற சகலவிக்ஷேபத்தையும் வெகு ஜாக்கிரதையாய் நாசம்பண்ணித் திரும்பித்திரும்பித் தியானம் பண்ணவேண்டும்.

கஷாயமாவதேதென்றால்? மனதை லயத்திலும் விடாமல் விக்ஷேபத்திலும் விடாமல் நிரோதித்துத் திடமாய்த் தியான்ம் பண்ணும்போது அந்த மனது தீவிர ராகத்துவேஷாதி வாசனையினாலே சமாதியிற்போல லயவிக்ஷேபமன்றியிற் றுக்கத்தில் மூழ்கி ஏகாக்கிரமாயிருக்கும். அந்தத் துக்கத்தில் ஏகாக்கிரமான அவத்தையே கஷாயம். அதையும் விவேகபுத்தியினாலே சூக்ஷுமமாய்ப்பார்த்துச் சமாதியென்று மலையாமற் றள்ளிப்போட்டு மறுபடியுந் தியானம்

பண்ணவேண்டும். அந்தக்கஷாயத்தைத் தள்ளுகிறதற் குபாயமே தென்றால்? விக்ஷேபநாசத்திற்குச் சொன்ன உபாயமே யதற்கு முபாயம்.

ரசாஸ்வாதமாவ தேதென்றால்? சமாதியினுடைய ஆரம்ப காலத்திற் சவிகற்பமாக உண்டாகிற ஆனந்தாநுபவமே ரசாஸ்வாதம். அந்த விகற்பத்தோடேகூடின ஆனந்தாநுபவத்திற்றானே மனதிருந் துவிடாமல் அதையும் விவேகபுத்தியினாற் றள்ளி நிருமலப்பிரக் ஞையோடேகூடத் தியானம் பண்ணவேண்டும். இப்படி வெகுகா லந்தியானுப்பியாசம்பண்ணும்போது அந்தத் தியானபரிபாகத்தினு லும், ஈசுரானுக்கிரகத்தினாலும், லய விக்ஷேப கஷாய ரஷாஸ்வாத ரூபங்களான பிரதிபந்தங்கள் நாலுகளுந் தள்ளுப்பட்டு மனது சம மான நிஷ்டையை யடையும். அப்படி சமமான பிரமசொரூபத் தில் மனது நிஷ்டையையடையும்போது இந்த நிஷ்டையும் லயமோ; கஷாயமோ; வென்று மயங்கி இதைவிட்டு மனதைக் கலைத்துவிடா மல் வெகுசூக்ஷமமான புத்தியினாலே கீழ்ச்சொன்ன லயாதிபிரதிபந் தம் இப்படிப்பட்டதென்றும், அதற்குவிலக்ஷணமான சமசொரூபநிஷ் டை இப்படிப்பட்டதென்றும், நன்றாய்ப் பிரித்துப்பார்த்து. அறிந்தந்த நிஷ்டையிற்றானே வெகுமுயற்சியினாலே மனதை நிறுத்தவேண்டும். அப்படி நிறுத்தப்பட்ட அந்தமனதிற் பிரமசொரூபமான பரமானந் தம் நன்றாயாவிற்பவிக்கும். அந்தப்படி கீதையிற் சொல்லியிருக்கி றது. சுருதியிலுஞ் சொல்லியிருக்கிறது. அதேதென்றால்? தியா னஞ் சமாதிகளினாலே சகலபிரதிபந்தமும் நீங்கி ஆத்துமசொரூபத் தில் நிறுத்தப்பட்ட மனதிற்கு யாதொருபரமானந்தமுண்டோ; அந்த ஆனந்தம் இப்படிப்பட்டதென்று வாக்கினாற் சொல்லக்கூடாத போ தினும்; அக்காலத்தில் அந்த ஆனந்தம் நிர்விகற்பசமாதியையடைந்த சூக்ஷமமான மனதினாலே நன்றாயநுபவிக்கப்படுமென்று சொல்லி யிருக்கிறது.

சங்கை? சமாதியில் ஆவிற்பவித்த பிரமானந்தம் மனதினு லே யநுபவிக்கப்படுமென்று சுருதிஸ்மிருதிகளினுலே சொல்லப்படு கிறதே; கௌடபாதாசாரியாள் சமாதியில் ஆனந்தத்தைப் புத்தியி னுலே யநுபவிக்கக்கூடாதென்று சொல்லியிருக்கிருர்களே; ஆன தாலொன்றுக்கொன்று விரோதம்வருகிறதேயென்றால்; அப்படிவர வேண்டியதில்லை. ஏனென்றால்? அந்த ஆசாரியாள் நிர்விகற்பசமா தியில் மனதினுலநுபவிக்கத்தக்கதான நிர்விகற்ப பிரமானந்தத்தை யநுபவிக்கக் கூடாதென்று நிஷேதிக்கவில்லை. பின்னையோவென் ருல்? அந்தச்சமாதிக்கி விரோதமாயிருக்கப்பட்ட சவிகற்ப ஆனந் தாநுபவத்தை நிஷேதிக்கிருர்கள். அதெப்படியென்றால்? வெயிற்கா லத்திலே நடுமத்தியானவேளையிலே கங்கையினுடைய மடுவிலேமூழ் கியிருக்கிற புருஷனுலே யநுபவிக்கப்பட்ட சைத்தியசுகம் அந்தக்கா லத்தி லிப்படிப்பட்டதென்று சொல்லுகிறதற்கு அருமையானுலும் அந்தக் கங்காஜலத்தைவிட்டு வெளிக்கிளம்பினபிறகு அந்தச்சைத் தியசுகம் இப்படிப்பட்டது அப்படிப்பட்டதென்று சொல்லும்படியா யிருக்கிறதோ; இல்லை. அதெப்படியானுல்? சுழுத்தியிற் சூக்ஷ்மமா யிருக்கிற அவித்தையாவிர்த்தியினுலே சொரூபசுகம் அநுபவிக்கப்பட் டபோதிலும்; அப்போது அந்தச்சுகஞ் சவிகற்பமான அந்தக்கரண விர்த்தியில்லாததினுலே சவிகற்பமா யநுபவிக்கிறதற்கு யோக்கியமா காவிட்டாலுஞ் சுழுத்திபோய்ச் ஜாக்கிராவத்தை வரும்போது சவிகற் பவிர்த்தியினுலே ஸ்புடமாய் நினைக்கப்படுகிறதோ; அப்படிப்போ லச் சமாதியில் விர்த்தியில்லாமற் சமஸ்காரமாத்திரமாய் மிஞ்சியிருக் கிற பிரமாகாரமான சூக்ஷ்மமனதினுலே சொரூபானந்தாநுபவங் கூடுமென்று சுருதிஸ்மிருதிகளினுலே சொல்லப்பட்டபடிக்கிக் கௌ டபாதாசாரியாளுக்குஞ் சம்மதமே. சமாதியைவிட்டு மனது வெகிர் முகமாகி அநேகா மகத்தான இந்தச்சமாதிச்சுகத்தை யநுபவித்தோ மென்று சவிகற்பமா யாதொரு சுகாநுபவமுண்டோ அது நிர்விக

ற்பசமாதிக்கி விரோதமானதால் அதைமாத்திரம் அந்த ஆசாரியாள் நிஷேதித்திருக்கிறார்கள். ஆனபடியினாலே யாதொரு விரோதமு மில்லை. அந்தப்படி அவாளே மேற்கிரந்தத்திற் சமாதியில் மஹா சுகத்தை யநுபவித்தோமென்றும், அப்படிப்பட்ட சுகத்தைக் கூடச் *சகவாசம்பண்ணுகிற தியானிகளுக்குச் சொல்லவேண்டுமென்றும், உண்டாகிற சித்த விகற்பத்தையெல்லாம் விட்டுவிட வேண்டுமென் றும், குளிர், காற்று, கொசுகு, முதலான உபத்திரத்தினாற்றானகட் டும், ரசாஷ்வாதத்தினாலே தானாகட்டும், பிரமானந்தத்தினாலே மூழ் கியிருக்கிற மனது சொரூபத்தைவிட்டுப் பிரிந்து சலித்துதேயானால் உடனேயந்தமனதை நிச்சலமாகப் பிரமசொரூபத்திற் கலந்து ஏகரச மாகும்படி செய்யவேண்டுமென்றுஞ், சொல்லியிருக்கிறார்கள். அப் படிச்செய்கிறதில் நிரோதமுயற்சியே சாதனம். இப்படிக் கௌட பாதாசாரியாள் நாலுபிரதிபந்தங்களையும், அதுகள் நிவிர்த்திக்கிறதற் குபாயத்தையுஞ், சொன்னார்கள். ஸ்ரீ சங்கராசாரியாள் அபரோ க்ஷாத்மாநுபூதிப் பிரகரணத்திற் சமாதிப்பிரதிபந்தம் ஒன்பதுவித மென்று சொல்லியிருக்கிறாள்.

அதேதென்றால் ?

1. தியானத்துக் குட்கார்ந்தவுடனே சொரூபாநுசந்தானம் மறந்துபோகுவது.

2. பிற்பாடு தியானம்பண்ணிக்கொள்ளுவோமென்று சோம் பலுண்டாகுவது.

3. போகத்திலிச்சையுண்டாகுவது.

4. தூக்கம்வருகுவது.

* சாவாசமென்றும்-பாடம்.

5. அந்தகாரந்தோன்றுவது.

6. நானாவித விஷயங்களை நினைத்து நினைத்து மனது அலைவதாகிய விக்ஷேபமுண்டாகுவது.

7. வெளிச்சந்தோன்றுவது.

8. வேர்வையுண்டாகுவது.

9. சகலதிரிசியத்தையுந் தள்ளினால் அதற்கு விலக்ஷணமாய் ஒருசொரூபத்தையுங் காணேமென்கிற சூன்யபுத்தியுண்டாகுவது.

என்றிப்படிச் சமாதியிலொன்பதுவிதப்பிரதிபந்தமுண்டு. அந்த ஒன்பதுவிதப் பிரதிபந்தத்தையுஞ் சிரவணமனனங்களினாலே பிரமசொரூபம் இப்படிப்பட்டதென்று சமுசயம் லேசங்கூடயில்லாமல் உண்டாயிருக்கப்பட்ட நிச்சயத்தினாலும், எவ்விதமும் நிர்விகற்பசமாதியினாலே அப்பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்காரத்தைச் சம்பாதித்துப்போடுவோமென்கிற உச்சாகத்தினாலும், அந்தந்தப் பிரதிபந்தம் போகிறதற்கு யுக்தமான உபாயத்தாலும், மெள்ள மெள்ளத் தள்ளவேண்டுமென்று ஸ்ரீ சங்கராசாரியாள் சொல்லியிருக்கிறாள். உத்தாலகரைவிடப் பின்னொருவருக்குச் சமாதிப்பிரதிபந்தமே உண்டாகப் போகிறதா இல்லை. சகலபிரதிபந்தமுங் கீழ்ச்சொன்ன லயாதிநாலுகளுக்குள்ளே அகப்பட்டதுதான். ஆனதால், லயாதிகளைநீக்கி ரக்ஷிக்கப்பட்ட மனது நிர்விக்கினமாக நிர்விக்ஷேப நிராவரண பரிபூரண பரமானந்தமான பிரமசொரூபத்தில் நிஷ்டையையடையும். அந்தநிஷ்டையே யோகம். அதுவே ஞானம் அதுவே ஜீவன்முக்தி. அதுவே கரும்ம், உபாசனை, சிரவணதியப்பியாசம், அடயோகாப்பியாசம், சகலத்திற்கும் பலம். அதுவே சகல சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களுடைய தாற்பரியம் முடிந்தவிடம். அதுவே பரமசிவன்

ற்பசமாதிக்கி விரோதமானதால் அதைமாத்திரம் அந்த ஆசாரியாள் நிஷேதித்திருக்கிறார்கள். ஆனபடியினாலே யாதொரு விரோதமு மில்லை. அந்தப்படி அவாளே மேற்கிரந்தத்திற் சமாதியில் மஹா சுகத்தை யநுபவித்தோமென்றும், அப்படிப்பட்ட சுகத்தைக் கூடச் *சகவாசம்பண்ணுகிற தியானிகளுக்குச் சொல்லவேண்டுமென்றும், உண்டாகிற சித்த விகற்பத்தையெல்லாம் விட்டுவிட வேண்டுமென் றும், குளிர், காற்று, கொசுகு, முதலின உபத்திரத்தினாற்றானாகட் டும், ரசாஷ்வாதத்தினாலே தானாகட்டும், பிரமானந்தத்தினாலே மூழ் கியிருக்கிற மனது சொரூபத்தைவிட்டுப் பிரிந்து சலித்துதேயானால் உடனேயந்தமனதை நிச்சலமாகப் பிரமசொரூபத்திற் கலந்து ஏகரச மாகும்படி செய்யவேண்டுமென்றுஞ், சொல்லியிருக்கிறார்கள். அப் படிச்செய்கிறதில் நிரோதமுயற்சியே சாதனம். இப்படிக் கௌட பாதாசாரியாள் நாலுபிரதிபந்தங்களையும், அதுகள் நிவிர்த்திக்கிறதற் குபாயத்தையுஞ், சொன்னார்கள். ஸ்ரீ சங்கராசாரியாள் ' அபரோ க்ஷாத்மாநுபூதிப் பிரகரணத்திற் சமாதிப்பிரதிபந்தம் ஒன்பதுவித மென்று சொல்லியிருக்கிறாள்.

அதேதென்றால்?

1. "தியானத்துக் குட்கார்ந்தவுடனே சொரூபாநுசந்தானம் மறந்துபோகுவது.

2. பிற்பாடு தியானம்பண்ணிக்கொள்ளுவோமென்று சோம் பலுண்டாகுவது.

3. போகத்திலிச்சையுண்டாகுவது.

4. தூக்கம்வருகுவது.

* சாவாசமென்றும்-பாடம்.

5. அந்தகாரந்தோன்றுவது.

6. நானாவித விஷயங்களை நினைத்து நினைத்து மனது அலைவதாகிய விக்ஷேபமுண்டாகுவது.

7. வெளிச்சந்தோன்றுவது.

8. வேர்வையுண்டாகுவது.

9. சகலதிரிசியத்தையுந் தள்ளினால் அதற்கு விலக்ஷணமாய் ஒருசொரூபத்தையுங் காணோமென்கிற சூன்யபுத்தியுண்டாகுவது.

என்றிப்படிச் சமாதியிலொன்பதுவிதப்பிரதிபந்தமுண்டு. அந்த ஒன்பதுவிதப் பிரதிபந்தத்தையுஞ் சிரவணமனனங்களினாலே பிரமசொரூபம் இப்படிப்பட்டதென்று சமுசயம் லேசங்கூடயில்லாமல் உண்டாயிருக்கப்பட்ட நிச்சயத்தினாலும், எவ்விதமும் நிர்விகற்பசமாதியினாலே அப்பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்காரத்தைச் சம்பாதித்துப்போடுவோமென்கிற உச்சாகத்தினாலும், அந்தந்தப் பிரதிபந்தம் போகிறதற்கு யுக்தமான உபாயத்தாலும், மெள்ள மெள்ளத் தள்ள வேண்டுமென்று ஸ்ரீ சங்கராசாரியாள் சொல்லியிருக்கிறாள். உத்தாலகரைவிடப் பின்னொருவருக்குச் சமாதிப்பிரதிபந்தம் உண்டாகப் போகிறதா இல்லை. சகலபிரதிபந்தமுங் கீழ்ச்சொன்ன லயாதிநாலுகளுக்குள்ளே அகப்பட்டதுதான். ஆனதால், லயாதிகளைநீக்கி ரக்ஷிக்கப்பட்ட மனது நிர்விக்கினமாக நிர்விக்ஷேப நிராவரண பரிபூரண பரமானந்தமான பிரமசொரூபத்தில் நிஷ்டையையடையும். அந்தநிஷ்டையே யோகம். அதுவே ஞானம் அதுவே ஜீவன்முக்தி. அதுவே கருமம், உபாசனை, சிரவணாதியப்பியாசம், அடயோகாப்பியாசம், சகலத்திற்கும் பலம். அதுவே சகல சுருதி ஸ்மிருதி இதிகாச புராணங்களுடைய தாற்பரியம் முடிந்தவிடம். அதுவே பரமசிவன்

முதலான பேர்களுடைய அநுபவம். அந்த நிஷ்டையையடைந்த பிறகு பின்னுமொன்றும் அடையவேண்டியதுகிடையாது. ஆனதால், அந்தநிஷ்டையை எவ்விதமும் முமூக்ஷுவானபுருஷன் அடையவேண்டும். அப்படி யடைந்தவனே கிருதார்த்தன். அவனுடைய ஜன்மமே ஸபலம். அவன் ஞானபுருஷன். அந்தப்படி சகலபிரமாணமுங் கோஷிக்கிறது.

இந்தநிர்விகற்ப நிஷ்டையே யோகமென்று பதஞ்சலிபகவான் யோகசூத்திரத்திற் சொல்லியிருக்கிறார். அந்தயோகத்திற்கு லக்ஷணமேதென்றால்? சகலசித்தவிர்த்திகளுடைய நிரோதமே லக்ஷணம். அதற்குச் சாதனமேதென்றால்? அப்பியாசவைராக்கியங்களே சாதனம். அதில் - அப்பியாசமாவ தெப்படிப்போலவென்றால்? வெகுவேகத்தோடேகூடின நதியினுடைய பிரவாகத்தை அணைக்கட்டினாற் றகைந்து அந்தச் ஜலத்தை வாய்க்காலிலேதிருப்பி வயலுக்கு நேராகக் குறுக்கேபின்னொரு பிரவாகம் உண்டுபண்ணப்படுகிறதோ; அப்படி வைராக்கியத்தினாலே சித்தநதியினுடைய விஷயத்திற்போகிற விர்த்திப்பிரவாகத்தைத் தகைந்து சமாதியப்பியாசத்தினாலே ஆத்மாஅபிமுகமாக நிரோதமென்று சொல்லப்பட்ட சாந்திப்பிரவாகத்தைச் சம்பாதிக்கிறதே யப்பியாசம்.

சங்கை? மந்திரசெபந் தேவதாத்தியான முதலானது கிரியாரூபமானதால் அதற்குத் திரும்பித்திரும்பி ஆவிர்த்திபண்ணுவதாகிய அப்பியாசங்கூடும் சர்வவியாபாரத்தினுடையநிரோதரூபமான சமாதிக்கி அப்பியாசமாவதேதென்றால்? தனக்குத்தானே வெகிர்முகமான விரத்திப்பிரவாகத்தையுடைத்தான சித்தத்தைச் சர்வப்பிரகாரத்தினாலும் தகைவோமென்கிற உச்சாகத்தைத் திரும்பித் திரும்பி ஆவிர்த்திபண்ணுவதே சமாதியினுடைய அப்பியாசம்.

சங்கை? இந்தஜன்மத்திற் செய்யப்பட்ட இந்த அப்பியாசந் திடமாகாததினால் அநாதிகாலத்தைத்தொட்டுப் பிரவருத்தித்திருக்கிற சமாதிவிரோதமான வெகிர்முகவாசனைகளை எப்படியடக்குமென்றால்? வெகுகாலம்வரைக்கும் இடைவிடாமல் ஆதரவோடேசமாதியப்பியாசம் பண்ணப்பட்டால் அப்போ அது திடமாகி அநாதி வெகிர்முகவாசனைகளை யடக்கும். அப்படியில்லாவிட்டால் அதுகளை யடக்கமாட்டாது. தியானியாயிருக்கிறபுருஷன் வெகுகாலம்வரைக்கும் அப்பியாசம்பண்ணமற் சிலநாட்களினாலேதானாகட்டுஞ், சிலமாசங்களிலேதானாகட்டும், யோகசித்தியை யிச்சித்தால்; அப்படி அவன் சொற்பகாலத்தினாலே அதையிச்சிப்பது எப்படிப்போலவிருக்கிறதென்றால்? லோகத்திலிருக்கப்பட்ட ௪வேதங்களோ; நாலுகள் தான், அதுகளை அத்தியயனம்பண்ணுகிறதற்காக நம்முடைய பிள்ளையாண்டான்போய் ஐந்துநாளாய் விட்டுது இன்னம் அவன் அதுகளை அத்தியயனம்பண்ணிக்கொண்டு வரக்காணோமென்கிற மூடனுடைய வார்த்தைபோலயிருக்கிறது. ஆனதால், வருடங்களினாலேதானாகட்டுஞ், ஜன்மங்களினாலேதானாகட்டும், வெகுகாலஞ் சமாதியப்பியாசம் பண்ணவேண்டும். அந்தப்படி பகவான் கீதையிற் சொல்லியிருக்கிறார். வெகுகாலம் அப்பியாசம் பண்ணினபோதிலும்; இடைவிட்டுவிட்டு அப்பியாசித்தால் அப்போ அப்பியாசத்தினாலுண்டாகிற யோகவாசனைகள் பின்னோடே யிடைவிடுகிறகாலத்தில் வரப்பட்ட சமாதி விரோதமான பாகியவாசனைகளினாலே கெடுக்கப்பட்டுப்போகும். அந்தப்படி கண்டனக்காரர் சொல்லியிருக்கிறார். அதேதென்றால்? மறதியைத்தானே சுபாவமாயுடைத்தாயிருக்கிற மந்தப்புத்தியானபுருஷன் வேதாத்தியயன முதலானதிற் சுருக்கில் அப்பியாசிக்கவேண்டுமென்று மேன்மேலோடும்போது கீழ்ப்பண்ணின அத்தியயன மெப்பாடி மறந்துபோய்விடுமோ; அப்படி இடைவிட்டுவிட்டுச் சமாதியப்பியாசம் பண்ணுகிறவனுக்குச் சமாதியைவிட்டு வெளிப்

பட்டகாலத்திலுண்டாகிற அனாத்துமவாசனைகளினாலே சமாதிகாலத்திலுண்டான ஆத்துமவாசனை மறந்துபோய்விடுமென்று சொல்லியிருக்கிறார். ஆனதால், வெகுகாலம் இடைவிடாமல் அப்பியாசிக்கவேண்டும். அப்படி அப்பியாசித்தபோதிலும்; லயவிக்ஷேபாதிகளைத் தள்ளுவதாகிய ஆதரவில்லாவிட்டால் அப்பியாசம் பண்ணினபோதிலும்; பண்ணினதல்ல. அந்தப்படி ஸ்ரீ வசிட்டர் சொல்லியிருக்கிறார். அதெப்படிப்போலவென்றால்? 'புராணமுதலானதாற் சொல்லப்பட்டகதையைக் கேழ்க்கிற புருஷன் அதிலாதரவில்லாமற் றன்னுடையமனது எங்கேயாகிலும் ஒருவிடத்திற் போய்விடும்போது அந்தக்கதையைக் கேழ்க்கிறவன்போலப் பிறருக்குத் தோணினபோதிலும்; தான் அந்தக்கதையைக் கேட்டுங் கேட்டவனன்றோ; அப்படி ஆதரவன்றியிற் சமாதியப்பியாசம் பண்ணினபோதிலும்; அதைப் பண்ணினவ னன்றென்று சொல்லியிருக்கிறார். ஆனதால் லயவிக்ஷேபாதியை விவேகத்தினாற் றள்ளுவதாகிய ஆதரவும் வேண்டும். இப்படி வெகுகாலபரியந்தம் யிடைவிடாமல் "ஆதரவோடே அப்பியாசிக்கப்பட்ட சமாதி திடமாகும். சமாதிக்கித்திடத்துவமாவதேதென்றால்? விஷயசுகவாசனையினாற்றானாகட்டுந், துக்கவாசனையினாற்றானாகட்டும், அசைக்கக்கூடாமையே; இதற்குத் திடத்தன்மை. அந்தப்படி பகவான் சொல்லியிருக்கிறார். அதேதென்றால்? தியானியாயிருக்கிற புருஷன் யாதொரு நிஷ்டையையடைந்து அதினாலே பின்னொருசுகாதியினுடைய லாபத்தை அதிகமென்று நினைக்கமாட்டானோ; யாதொரு நிஷ்டையிலிருக்கப்பட்டவன் மகத்தான துக்கத்தினாலேகூட அசைக்கப்படமாட்டானோ; அது திடசமாதியென்று பகவான்சொல்லியிருக்கிறார். சமாதிலாபம்வந்தவனுக்குப் பின்னொருலாபம் அதிகமன்றென்கிறதைக் கசன்கதையில் ஸ்ரீ வசிட்டர்சொல்லியிருக்கிறார். அதேதென்றால்? கசனானவன் ஒருக்காற் சமாதியைவிட்டு வெளிப்பட்டு ஆனந்தத்தை யடைந்தமனதோடேகூட ஒரு

வருமில்லாதபிரதேசத்தில் யேகாங்கியாயிருந்துகொண்டு தழுதழுத் தவாக்கோடேகூடச் சொன்னபிரகார மென்னவென்றால்? பிரளய காலசமுத்திரஜலம்போல ஆத்மாவினாலே சகலமும் நிரம்பியிருக்கிற படியினாலே நான் யெதைப்பண்ணுவேன் எங்கேபோவேன் எதைக் கிரகிப்பேன் எதைவிடுவேன் ஆத்மாவைத்தவிர ஒன்றையுங்காணே னே சரீரத்திற்கு வெளியிலே யுள்ளே கீளே மேலே திக்குகளிலே எவ்விடத்திலும் ஆத்மாவேயொழிய அனாத்துமாவான ஜகத்தைக்கா ணவேகாணேனே நானில்லாத விடமுமில்லை யென்னிடத்திலில்லா ததுமில்லை இப்படி யிருக்க நானெதைவேண்டு மென்றிச்சிப்பேன் எல் லாஞ் சின்மாத்திரமாகவே நிறைந்திருக்கிறதென்று கசன்சொன்ன பிரகாரத்தை ஸ்ரீவசிட்டர் சொல்லியிருக்கிறார். திடசமாதி மஹா துக்கத்தினாலேகூட அசைக்கப்படாதென்கிறதைச் சிகித்து வசனு டைய மூன்றுவருடங்கிடைத்த சமாதிவிருத்தாந்தத்தினாலே அவரே சொல்லியிருக்கிறார். அதேதென்றால்? சூடாலையானவள் நிர்வி கற்பசமாதி யிலிருக்கப்பட்ட சிகித்துவசராஜாவைப்பார்த்து யிவரை இந்தச்சமாதியினின்றும் வெளிப்படுத்துவோமென்கிறதாக ஆலோசி த்துக்கொண்டு வனத்திலிருக்கப்பட்ட செந்துக்களெல்லாம் பயப்ப டும்படியான சிங்கநாதத்தை அடிக்கடி செய்தாள். அப்படிச்செய்த போதிலுஞ்; சமாதியிலிருக்கப்பட்டராஜா பருவதத்திலிருக்கப்பட்ட கல்லுப்போல சமாதியைவிட்டு அசையவேயில்லை. திரும்பவுஞ் சூடாலை ராஜாவையலைத்தாள். கீழேதள்ளினாள். அதொன்றினாலே யும் ராஜா சமாதியைவிட்டு வெளிப்படவேயில்லையென்று ஸ்ரீவசிட் டர் சொல்லியிருக்கிறார் அப்படியே பிரகலாதன் கதையிலுஞ் சொல்லியிருக்கிறார். அப்படியே வீதகவ்வியாதிகளுடைய சமாதி யையும் பார்த்துக்கொள்ளவேண்டியது. இப்படி வெகுகாலம்விசை க்கும் நிரந்தரமாயாதரவோடே யப்பியாசம் பண்ணுகிறவனுக்குத்

திடசமாதி கிடைக்குமென்று சமாதிக்கிச் சாதனமான அப்பியாசப் பிரகாரஞ் சொல்லப்பட்டுது.

அதற்குச்சாதனமான வைராக்கியமாவதேதென்றால்? அதைப் பதஞ்சலிபகவானே சூத்திரத்திற் சொல்லியிருக்கிறார். அதேதென்றால்? அபரமென்றும், பரமென்றும், வைராக்கிய மிரண்டுவிதம். அதில் - எதமானமென்றும், விதிரேகமென்றும், ஏகேந்திரியமென்றும், வசீகாரமென்றும், அபரவைராக்கியம் நாலுவிதம். இதில்-புஷ்ப்பஞ் சந்தனம் ஸ்திரீ புத்திரமித்திர கிரகச் க்ஷேத்திர தனமுதலான பிரத்தியக்ஷவிஷயத்திலுஞ்; சாஸ்திரத்தினாலறியப்பட்ட சுவர்க்கமுதலான பரோக்ஷவிஷயத்திலும், ஆசையிருந்தபோதிலும்; விவேகதாரதன்மியத்தினாலே எதமானம், விதிரேகம், ஏகேந்திரியமென்று சொல்லப்பட்ட மூன்றுவைராக்கியமுண்டாகும். அதில்-இந்தச்ஜகத்திற் சாரமென்ன அசாரமென்னவென்று குரு சாஸ்திரங்களினாலே அறிவோமென்கிற முயற்சி எதமானவைராக்கியம். தன்னுடையசித்தத்தில் முன்னிருந்த ராகாதிதோஷங்களுக்குள்ளே தன்னாற்பழகப்பட்ட விவேகத்தினாலே இவ்வளவுதோஷங்கள் சாந்தமாச்சுதுகள் இவ்வளவுதோஷங்கள் சாந்தமாகாமல் மிஞ்சியிருக்கிறதுகளென்று பிரித்தறிவது விதிரேகவைராக்கியம். கீழ்ச்சொன்ன பிரத்தியக்ஷ விஷயத்திலும், பரோக்ஷவிஷயத்திலும், வரப்பட்ட பிரவிருத்தி துக்கத்திற் கேதுவென்றறிந்துகொண்டு அந்தப்பிரவிருத்தியை விட்டுப் போட்டு மனதில்மாத்திரம் ஸ்தூலரூபமான ஆசையிருப்பது ஏகேந்திரியவைராக்கியம். இந்த ஆசையில்லாமற்சூக்ஷமரூபமான ஆசை மாத்திரமிருப்பது வசீகாரவைராக்கியம். இந்த அபரவைராக்கியம் நாலும். அஷ்டாங்க யோகத்திற்குக் காரணமானதாற் சவிகற்பசமாதியில் அந்தரங்கசாதனம். நிர்விகற்பசமாதியில் பகிரங்கசாதனம். அந்த நிர்விகற்பசமாதியில் பரவைராக்கியம் அந்தரங்கசாதனம்.

அதாவதேதென்றால்? சவிகற்பசமாதி யப்பியாசபெலத்தினாலே திரிகுணாத்மகமாயிருக்கிற அக்ஞானதற்காரியமான சரீரத்திரயத்திற்கும் விலக்ஷணராயிருக்கிற பிரத்தியகாத்மாவினுடைய சாக்ஷாத்காரமுண்டாகும். அதினாலே குணத்திரயாத்மகமான சகல விவகாரத்தினுஞ்சூக்ஷமரூபமான ஆசைகூடயில்லாமை பரவைராக்கியமென்று பதஞ்சலிபகவான் சொல்லியிருக்கிறார்.

அந்தப் பரவைராக்கியத்தினுடைய தாரதன்மியத்தினாலே நிர்விகற்பசமாதி கிடைக்கிறதிற் சீக்கிரதாரதன்மியமுண்டு அதெப்படியென்றால்? மிருதுவென்றும், மத்தியமென்றும், தீவிரமென்றும், பரவைராக்கியம் மூன்றுவிதமாயிருக்கும். அந்தவைராக்கியபேதத்தினால் அதையுடைத்தான தியானிகளும் மூன்றுவிதமாயிருப்பார்கள். அவாளுக்குள்ளே மிருதுவென்று சொல்லப்பட்ட மந்தவைராக்கியமுள்ளவனைக்காட்டிலும்; மத்திய வைராக்கியமுள்ளவனுக்குச் சீக்கிரத்தில் நிர்விகற்பசமாதி கிடைக்கும். அவனைக்காட்டிலும்; தீவிரவைராக்கியமுள்ளவனுக்குச் சீக்கிரத்தில் அதுகிடைக்குமென்று தாரதன்மியமறியத்தக்கது தீவிரவைராக்கியவான்களுக்குள்ளேயும்; மிருதுதீவிரனென்றும், மத்தியதீவிரனென்றும், அதிதீவிரனென்றும், மூன்றுவிதபேதமுண்டு. அதில் - உத்தமோத்தமாளாயிருக்கிற ஜனகன் பிரகலாதன் முதலானவாள் அதிதீவிராள். ஏனென்றால்? மூகூர்த்தமாத்திர விசாரத்தினாலே அவர்களுக்குத் திடநிர்விகற்பசமாதி கிடைத்துதன்றோ; ஆனதால், அவாள் அதிதீவிராள். அதமாதமாளாயிருக்கிற உத்தாலகன் முதலானவாள் வெகுகாலப்பிரயாசத்தினாலே அந்தச்சமாதியை அடைந்தபடியால் மிருதுவான பரவைராக்கியமுள்ளவாள். இப்படிப் பின்னும் யுக்தமாய்ச் சமாதிகிடைத்த சுருக்குக்குத்தக்கதாய் அங்கங்கே தியானிகளை வைராக்கியபேதத்திற் குதாரணமாய்ப் பார்த்துக்கொள்ளத்

தக்கது இப்படியாயுள்ளளவில் அதிதீவிரனுக்குத் திடமான. நிர்விகற்பசமாதி கிடைக்கும்போது அவன்மனது திரும்பிச் சமாதியை விட்டு வெளிக்கிளம்பச் சக்தியன்றியிலே நசித்துப்போகும். அந்த மனோநாசத்தினாலே வாசனாக்ஷயம் ரக்ஷிக்கப்படுகிறதினாலே ஜீவன் முக்தியானது திடமாகிவிடுமென்று சித்தமாச்சுது.

மனோநாசம் வரும்போது விதேகமுக்தியேயொழியச் ஜீவன் முக்தி கிடையாதென்று சங்கிக்கக்கூடாது. ஏனென்றால்? ஸ்ரீ இராம வசிட்டாளுடைய கேள்வி மறுமொழிகளினால் இரண்டு விதமுக்தியும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறபடியினாற் கீழ்ச்செய்தசங்கை கூடாது. இராமனுடைய கேள்வியென்னவென்றால்? வாருமய்யா ஏகுரோ தத்துவஞானத்தினாலே சித்தத்தினுடைய சொரூபம் நசித்தபிறகு யோகிகளுக்கு மைத்திரியாதிகுணங்கள் எவ்விடத்திலிருக்கும் யோகிகளுக்குள்ளே சிரேஷ்டராயிருக்கிற உமக்கு யோகநிஷ்டையெல்லாம் நன்றாய்த்தெரியுமே; ஆனதால் என்னுடைய இந்தச்சங்கையைப் பரிகாரம்பண்ணிவைக்க வேண்டுமென்று கேட்ட இராமனைப்பார்த்து ஸ்ரீவசிட்டர் சொல்லுகிறார். வாரும்பிள்ளா இராமா சொரூபமென்றும், அரூபமென்றுஞ், சித்தநாசம் இரண்டுவிதம். அதில்-ஜீவன்முக்தனிடத்திற் சொரூபமனோநாசம். விதேகமுக்தனிடத்தில் அரூபமனோநாசமென்று நியமம். எந்தமனதானது அக்ஞானகாரியமான புத்திர மித்திர களத்திராளை நமதென்று அபிமானித்துக்கொண்டு அதினால் வரப்பட்ட சுகதுக்காதிகளோடே கூடியிருக்கிறதோ; அந்த மனது நசியாதமனது. சமமான நிஷ்டையடைந்திருக்கிற யாதொருதீரனைச் சுகதுக்காதிகள் மூச்சுக்காற்றுப் பருவதத்தை அசைக்கமாட்டாதது போல அசைக்கமாட்டாதுகளோ; மகத்தான ஆபத்து லோபம் உச்சாகம் மதம் மந்தப்புத்தி உச்சவம் முதலானதுகள் யாதொருவனை விகாரியாகப் பண்ணமாட்டாதோ; அவனுடையமனது நசித்தமனது.

ஆசைமுதலான ரூபத்தையுடைத்தான மனது யெப்போ நசிக்கிற தோ; அப்போ அந்தமனதுதானே மைத்திரியாதி குணங்களோடே கூடினதாகித் திரும்பிச் ஜன்மத்திற்கேதுவன்றியிற் சத்துவரூபமெ ன்று பெயரையுடைத்தானதாய்ச் ஜீவன்முக்தனிடத்திலிருக்கும். அந் தச் ஜீவன்முக்தனிடத்திலிருக்கப்பட்ட மனதிற்குச் சத்துவமென்று சொல்லப்பட்ட ரூபமிருக்கிறபடியினாலும், ராகாதிரூபத்திற்கு நாசம் வந்தபடியினாலுஞ், சத்துவரூபத்தோடேகூடின ராகாதிநாசமாகிய சொரூபநாசங்கூடும். அப்படிப்பட்ட சொரூபமனோநாசஞ் ஜீவன் முக்தனிடத்தி லுண்டென்றுசொன்னதும் நன்றாய்க்கூடும். விதேக முக்தியில் மனதினுடைய சத்துவரூபமும்; நசித்துப்போகிறபடியினா லே ரூபமில்லாத நாசமாகிய அரூபமனோநாசம் விதேகமுக்தனிடத் திலென்று சொன்னது நன்றாய்க்கூடுமென்று ஸ்ரீவசிட்டர் சொல்லி யிருக்கிறார். ஆனதால், சொரூபமனோநாசஞ் ஜீவன்முக்திக்கிச் சாத னமென்று சித்தமாச்சுது.

இப்படிச் ஜீவன்முக்தியாவதெது? அது உண்டென்கிறதிற் பிரமாணமென்ன? எந்தச்சாதனத்தால் அது சித்திக்கும்? அது சித் தித்ததுகொண்டு பிரயோசனமென்ன? யென்கிறகேள்வி நாலுக்களுக் குள்ளே முந்தினகேள்வி மூன்றுகளுக்குங் கிரமமாக இதுவரைக்கும் உத்தரஞ் சொல்லப்பட்டுது.

---

# ஜீவன்முக்திக்கிப்பிரயோசனம்.

இனி நாலாங்கேள்விக்குத்தரஞ் சொல்லுகிறோம்.

அதேதென்றால்? ஞானரக்ஷையென்றுந், தவசென்றும், விசமவாதமில்லாமையென்றுந், துக்கநாசமென்றுஞ், சுகாவிற்பாவமென்றுஞ், ஜீவன்முக்திக்கி ஐந்துபிரயோசனம். இந்த ஐந்துபிரயோசனத்தையுங் கிரமமாகச்சொல்லுகிறோம்.

அதில் - ஞானரக்ஷையாவதேதென்றால்? வேதாந்த மஹாவாக்கிய சிரவணத்தியிலுண்டான தத்துவஞானஞ் சமுசயவிபரீதங்களினாலே வாதிக்கப்படாமலிருப்பதே ஞானரக்ஷை.

சங்கை? வேதாந்தப் பிரமாணத்தினாலுண்டான தத்துவஞானத்திற் கெதினாலேதானாகட்டும் வாதகம் வருகிறதாயிருந்தால் அப்போ ஜீவன்முக்தியால் அந்தவாதகம் வாராமல் ஞானம் ரக்ஷிக்கப்படுகிற படியினாலே ஜீவன்முக்திக்கி ஞானரக்ஷை பிரயோசனமென்று சொல்லலாம். அப்படி வாதகமொன்றையுங் காணோமே யென்றால்? வேதாந்தமஹாவாக்கியரூபமான பிரமாணத்தாற் றத்துவஞானமுண்டானபோதிலும்; ஜீவன்முக்தி யில்லாதவனுக்குச் சித்தவிசிராந்தி யில்லாததினாலே சமுசயவிபரீதங்க ளுண்டாகும். அந்தச் சமுசய விபரீதங்களே ஞானத்திற்கு வாதகமென்றறி. அந்தப்படி தத்துவ ஞானாயிருக்கிற ஸ்ரீ இராமனுக்குச் சித்தவிசிராந்திவருகிறதற்குமுன்னே சமுசயமிருந்ததென்று ஸ்ரீவிசுவாமித்திரர் வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறார். அதேதென்றால்? ஏ இராமா நீர் சூக்ஷும புத்தியினாலேதானே எல்லாத்தையும் அறிந்திருக்கிற படியினாலே உமக்கினியறியவேண்டிய தொன்றுமில்லை. அப்படி யறியவேண்டி

யதை அறிந்திருந்தபோதிலுஞ்; சுகரைப்போலச் சித்தவிசிராந்தி மாத்திரத்தை அபேக்ஷிக்கிறீர் பூருவஞ் சுகர் தான்றானே தத்துவத்தை யறிந்தபோதிலும்; அந்தத் தத்துவஞானத்திற் சமுசயம்வந்து தன்னுடைய பிதாவான வியாசரைக் கேட்கும்போது அவருந் தானறிந்த படியேசொன்னார். அப்போதுஞ் சமுசயம்போகாமற் பிதாவினாலே அனுப்பிவைக்கப்பட்டுச் ஜனகமஹாராஜாவினிடத்தில் வந்துசேர்ந்து அவரைக்கேட்கும்போது அவரும் அந்தப்படியேசொன்னார். அப்போ சுகர் ஜனகமஹாராஜாவைப்பாாத்துக் கேட்கிறார் வாருமய்யா வகுரோ இந்த அசாரமான சமுசாரந் தன்னுடைய மனோவிகற்பமூலமா யுண்டானபடியினாலே அந்தவிகற்பம் நசித்தால் அந்தச்சமுசாரமும் நசித்துப்போகுமென்று யெனக்கு நிச்சயமுண்டாயிருக்கிறது. நான் விவேகத்தினாலே எப்படி யறிந்தேனோ; அப்படியே பிதாவு முபதேசித்தார். அந்தப்படியே தம்மாலுபதேசிக்கப்பட்டது. அப்படியே சகலவேதாந்தசாஸ்திரங்களிலுங் காணப்படுகிறது. ஆனதால், மனோவிகற்பம் நசித்தாற் சகலதுக்கமும் நசித்துப்போய்விடுமென்று நானறிந்தது சரிதானா யெனக்கு நிச்சயம்வரும்படி அனுக்கிரகித்தால் அந்தப்படி தம்மிடத்தில்நின்றுஞ் சித்தவிசிராந்தியையடைந்து சகலமனோப்பிரமையையும் விட்டுப்போட்டுக் கிருதார்த்தனாகி விடுவேனென்று கேட்டசுகரைப்பார்த்துச் ஜனகமஹாராஜாசொன்னபிரகார மேதென்றால்? வாருஞ் சுகரே விவேகிகளுக்குள்ளே சிரேஷ்டராயிருக்கிறவரே நீர் உம்முடைய விவேகபுத்தியினாலே எப்படி நிச்சயித்தீரோ; அந்தப்படி சத்தியந்தான். இதில் - அணுமாத்திரங்கூடச் சந்தேகமில்லை. மூன்றுவிதப் பரிச்சேதமுமன்றியில் யெங்கும் பரிபூரணமாயிருக்கிற சின்மாத்திர ஆத்மசொருபமாத்திரம் யிருக்கிறதேதவிர வேறொன்றும் பரமார்த்தமாய்க்கிடைக்கவேகிடையாது. ஆனதால், தன்னுடைய சங்கற்பத்தினாலேயே பந்தம். தன்னுடைய சங்கற்பநாசத்தினாலேயே முக்தியென்கிறது சத்தியமே.

அனந்தகோடி புண்ணியபரிபாகத்தினலே அதிதீவிர விரக்தராயிருக்கிற உமக்கு ஈசுரானுக்கிரகத்தினலே இந்த அர்த்தந் தனக்குத்தானே தோணித்து. ஆனதால், யாதொரு சமுசயமுமன்றியிற் சுகமாய் அகண்டசிதாகாய சொரூபத்திற் சித்தவிசிராந்தியையடைந்து கிருதார்த்தராகிவிடு மென்று ஜனகமஹாராஜா சொன்னர். அப்படிச் சுகரும் பதினயிரம்வருடம் வரைக்கும் நிர்விகற்பசமாதியிலிருந்து பிற்பாடு விதேகமுக்தியை அடைந்தாரென்று இப்படி ஸ்ரீ இராமனைக் குறித்து ஸ்ரீ விசுவாமித்திரர் வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறபடியினலே தத்துவஞான முண்டானபோதிலும்; ஸ்ரீ இராமர் சுகரைப்பேலச் சித்தவிசிராந்தி இல்லாதவனுக்குச் சமுசயமுண்டாகும். அந்தச்சமுசயம் அக்ஞானத்தைப்போல மோக்ஷத்திற்குப் பிரதிபந்தகம். அந்தப்படி பகவான் கீதையிற் சொல்லியிருக்கிறர். அதேதென்றல்? அக்ஞானஞ், சமுசயம், விபரீதம், மூன்றுமுள்ளவன் மோக்ஷத்தை யடையமாட்டான். அதில் - அக்ஞானவிபரீதங்கள் மோக்ஷமாத்திரத்தைக் கெடுக்கும். சமுசயம், போகமோக்ஷ மிரண்டுகளையுங் கெடுக்கும். அதெப்படியென்றல்? யெப்போ சமுசாரசுகத்திற் பிரவருத்தியுண்டாகிறதோ; அப்போ மோக்ஷமார்க்கத்திலுண்டாயிருக்கிற பிரவருத்தியானது அந்தச்சமுசாரப் பிரவருத்தியைக் கெடுக்கும், அப்படியே எப்போ மோக்ஷத்திற் பிரவருத்தியுண்டாகிறதோ; அப்போ சமுசாரசுகப் பிரவருத்தியானது அந்தமோக்ஷப்பிரவருத்தியைக் கெடுக்கும். ஏனென்றல்? இரண்டிலுஞ் சமுசயவாத்மாவுக்கு இரண்டுமார்க்கமிருக்கிறதன்றே; ஆனதால், சொல்லியிருக்கிறர். இந்த அர்த்தசயமிருக்கிறதன்றோ சுகங்கிடையாதென்று முமுக்ஷுவாயிருக்கப்பட்டவன் நன்றய் விசாரித்துப்பார்த்து சமுசயத்தை நீக்கவேண்டும். அந்தப்படி சுருதியிலுஞ் சொல்லியிருக்கிறது, விபரீதத்திற்கு நிதாகர் உதாரணம். அதேதென்றல்? ரிபுவென்கிற குருவானவர் மஹாகருணையினலே நிதாக

ருடைய கிரகத்திற்குவந்து வெகுபிரகாரமாகத் தத்துவத்தைப் போதித்துப்போட்டுத் தன்னுடைய ஆச்சிரமத்திற்குப்போனார். பிற்பாடு நிதாகர் தத்துவத்தை யறிந்திருந்தபோதிலும்; அந்த தத்துவஞானத்திற் சிரத்தையில்லாமற் கருமங்களே பரம்புருஷார்த்த சாதனமென்று விபரீதஞானத்தையடைந்து கருமானுஷ்டானத்தில் முன்போலவே யேற்பட்டார். மறுபடியும் ரிபுவானவர் சிஷியனுக்குப் பரமபுருஷார்த்தங் கெட்டுப்போகக் கூடாதென்கிறதாக மஹாகிருபையோடேகூட நிதாகரிடத்தில்வந்து முன் தம்மாலே யுபதேசிக்கப்பட்ட தத்துவத்தைத்தானே திடமாக உபதேசித்தார். அப்போதும்; நிதாகர் விபரீதஞானத்தை விடவில்லை. மூன்றாந்தரம் உபதேசிக்கும்போது விபரீதஞானத்தை விட்டுப்போட்டுச் சித்தவிசிராந்தியை அடைந்தார். ஆனதால், சமுசயவிபரீதங்களினாலே தத்துவஞானத்தின் பலமாகிய மோக்ஷம் பிரதிபந்திக்கப்படும். அந்தப்படி பராசரர் சொல்லியிருக்கிறார். அதேதென்றால்? சொலித்துக்கொண்டிருக்கிற அக்கினி மணிமந்திர ஔஷதங்களினாலே பிரதிபந்திக்கப்பட்டுக்கொண்டு விறகுமுதலானதைத் தகிக்கிறதற் கெப்படி யோக்கியமாகவில்லையோ; அப்படிப்போலத் தத்துவஞானமாகிய அக்கினியுந்திடமாய்ச் சொலித்துக்கொண்டிருந்தபோதிலுஞ்; சமுசயவிபரீதங்களினாலே பிரதிபந்திக்கப்பட்டுக்கொண்டு கர்த்துருத்துவாதி கல்மஷத்தை தகிக்கிறதற்கு யோக்கியமாக மாட்டாதென்று பராசர் சொல்லியிருக்கிறார். ஆனபடியினாலே, சித்தவிசிராந்தி இல்லாதவனுக்குச் சமுசயவிபரீதமுண்டாய் அதினாலே தத்துவஞான பலம் வாதிக்கப்படுகிறதுகொண்டு அந்தச்சமுசயவிபரீதங்களே; தத்துவஞானத்திற்கு வாதகங்கள். அதுகள்வாராமல் ஞானத்தை ரக்ஷிக்கிறதற்குச் ஜீவன்முக்தி சாதனமானதால் ஞானரக்ஷை ஜீவன்முக்திக்கிப் பலமென்று சொன்னதுசரியே. சித்தவிசிராந்தியுள்ள ஜீவன்

அனந்தகோடி புண்ணியபரிபாகத்தினுலே அதிதீவிர விரக்தராயிருக்கிற உமக்கு ஈசுரானுக்கிரகத்தினுலே இந்த அர்த்தந் தனக்குத்தானே தோணித்து. ஆனதால், யாதொரு சமுசயமுமன்றியிற் சுகமாய் அகண்டசிதாகாய சொரூபத்திற் சித்தவிசிராந்தியையடைந்து கிருதார்த்தராகிவிடு மென்று ஜனகமஹாராஜா சொன்னுர். அப்படிச் சுகரும் பதினுயிரம்வருடம் வரைக்கும் நிர்விகற்பசமாதியிலிருந்து பிற்பாடு விதேகமுக்தியை அடைந்தாரென்று இப்படி ஸ்ரீ இராமனைக் குறித்து ஸ்ரீ விசுவாமித்திரர் வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறபடியினுலே தத்துவஞான முண்டானபோதிலும்; ஸ்ரீ இராமர் சுகரைப்பேலச் சித்தவிசிராந்தி இல்லாதவனுக்குச் சமுசயமுண்டாகும். அந்தச்சமுசயம் அக்ஞானத்தைப்போல மோக்ஷத்திற்குப் பிரதிபந்தகம். அந்தப்படி பகவான் கீதையிற் சொல்லியிருக்கிருர். அதேதென்றுல்? அக்ஞானஞ், சமுசயம், விபரீதம், மூன்றுமுள்ளவன் மோக்ஷத்தை யடையமாட்டான். அதில் - அக்ஞானவிபரீதங்கள் மோக்ஷமாத்திரத்தைக் கெடுக்கும். சமுசயம், போகமோக்ஷ மிரண்டுகளையுங் கெடுக்கும். அதெப்படியென்றுல்? யெப்போ சமுசாரசுகத்திற் பிரவருத்தியுண்டாகிறதோ; அப்போ மோக்ஷமார்க்கத்திலுண்டாயிருக்கிற பிரவருத்தியானது அந்தச்சமுசாரப் பிரவருத்தியைக் கெடுக்கும். அப்படியே எப்போ மோக்ஷத்திற் பிரவருத்தியுண்டாகிறதோ; அப்போ சமுசாரசுகப் பிரவருத்தியானது அந்தமோக்ஷப்பிரவருத்தியைக் கெடுக்கும். ஏனென்றுல்? இரண்டிலுஞ் சமுசயமிருக்கிறதன்றே; ஆனதால், சமுசயவாத்மாவுக்கு இரண்டுமார்க்கத்திலுஞ் சுகங்கிடையாதென்று சொல்லியிருக்கிருர். இந்த அர்த்தத்தை நன்றுய் விசாரித்துப்பார்த்து முமுக்ஷுவாயிருக்கப்பட்டவன் யெவ்விதமுஞ் சமுசயத்தை நீக்கவேண்டும். அந்தப்படி சுருதியிலுஞ் சொல்லியிருக்கிறது, விபரீதத்திற்கு நிதாகர் உதாரணம். அதேதென்றுல்? ரிபுவென்கிற குருவானவர் மஹாகருணையினுலே நிதாக

ருடைய கிரகத்திற்குவந்து வெகுபிரகாரமாகத் தத்துவத்தைப் போதித்துப்போட்டுத் தன்னுடைய ஆச்சிரமத்திற்குப்போனார். பிற்பாடு நிதாகர் தத்துவத்தை யறிந்திருந்தபோதிலும்; அந்த தத்துவஞானத்திற் சிரத்தையில்லாமற் கருமங்களே பரம்புருஷார்த்த சாதனமென்று விபரீதஞானத்தையடைந்து கருமானுஷ்டானத்தில் முன்போலவே யேற்பட்டார். மறுபடியும் ருபுவானவர் சிஷியனுக்குப் பரமபுருஷார்த்தங் கெட்டுப்போகக் கூடாதென்கிறதாக மஹாகிருபையோடேகூட நிதாகரிடத்தில்வந்து முன் தம்மாலே யுபதேசிக்கப்பட்ட தத்துவத்தைத்தானே திடமாக உபதேசித்தார். அப்போதும்; நிதாகர் விபரீதஞானத்தை விடவில்லை. மூன்றாந்தரம் உபதேசிக்கும்போது விபரீதஞானத்தை விட்டுப்போட்டுச் சித்தவிசிராந்தியை அடைந்தார். ஆனதால், சமுசயவிபரீதங்களினாலே தத்துவஞானத்தின் பலமாகிய மோக்ஷம் பிரதிபந்திக்கப்படும். அந்தப்படி பராசரர் சொல்லியிருக்கிறார். அதேதென்றால்? சொலித்துக்கொண்டிருக்கிற அக்கினி மணிமந்திர ஔஷதங்களினாலே பிரதிபந்திக்கப்பட்டுக்கொண்டு விறகுமுதலானதைத் தகிக்கிறதற் கெப்படி யோக்கியமாகவில்லையோ; அப்படிப்போலத் தத்துவஞானமாகிய அக்கினியுந்திடமாய்ச் சொலித்துக்கொண்டிருந்தபோதிலுஞ்; சமுசயவிபரீதங்களினாலே பிரதிபந்திக்கப்பட்டுக்கொண்டு கர்த்திருத்துவாதி கல்மஷத்தை தகிக்கிறதற்கு யோக்கியமாக மாட்டாதென்று பராசர் சொல்லியிருக்கிறார். ஆனபடியினாலே, சித்தவிசிராந்தி இல்லாதவனுக்குச் சமுசயவிபரீதமுண்டாய் அதினாலே தத்துவஞான பலம் வாதிக்கப்படுகிறதுகொண்டு அந்தச்சமுசயவிபரீதங்களே; தத்துவஞானத்திற்கு வாதகங்கள். அதுகள்வாராமல் ஞானத்தை ரக்ஷிக்கிறதற்குச் ஜீவன்முக்தி சாதனமானதால் ஞானரக்ஷை ஜீவன்முக்திக்குப் பலமென்று சொன்னதுசரியே. சித்தவிசிராந்தியுள்ள ஜீவன்

முக்தனுக்கு மனோநாசங்கிடைத்திருக்கிற படியினாலே எப்போ ஜகத்தே தோன்றவில்லையோ; அப்போ சமுசய விபரீதங்களென்கிற சப்தத்திற்குக்கூட இடங்கிடையாது. ஜகத்தினுடைய தோற்றமில்லாத ஜீவன்முக்தனுக்குச் சரீரவிவகாரம் நடக்கவேண்டுமேயென்றால்? தன்னுடைய முயற்சியன்றியிலே போனாலும்; பரமேசுரனாலேவப்பட்ட பிராணவாயுவினாலே தேகவிவகாரம் நடக்கும் அந்தப்படி சாந்தோக்கிய உபநிடதத்திற் சொல்லியிருக்கிறது. அதேதென்றால்? ஜீவன்முக்தனுக்கு அதுவிதுவென்று மனனம்பண்ணும்படியான மனது இல்லாததினாலே பிராரத்தநாசபரியந்தம் இருக்கப்பட்ட தன்னுடைய சரீரத்தைத்தான் நினைக்கிறதற் கிடமில்லாவிட்டாலும்; சமீபத்திலிருக்கிற பேர்களினாலே ஜீவன்முக்தனுடைய தேகமிருக்கிறதென்று அறியப்படலாம். அப்படிச் ஜீவன்முக்தன் சரீரத்தைமறந்து யாதொருமுயற்சியுமன்றியிலிருக்கும்போது அந்தச் சரீரத்திற் பிராணனிருக்கிறதற்கேதுவென்னவென்றால்? பரமேசுரனுடைய ஆக்ஞையே ஏது எப்படியானால்? சாரதியினால் மார்க்கசஞ்சாரத்தில் யேவப்பட்ட குதிரைமுதலானது அடிக்கடி யந்தச்சாரதியினுடையமுயற்சியை அபேக்ஷிக்காமற்றானே ரதமுதலானதையெதிரேயிருக்கப்பட்ட கிராமமுதலானதிற் கொண்டுபோய்ச் சேர்க்கிறதோ; அப்படிப்போலச் சரீரரக்ஷணத்தின்பொருட்டுப் பரமேசுரனாலேவப்பட்ட பிராணவாயுவு ஜீவனுடைய முயற்சி யிருந்தபோதிலு மில்லாதபோதிலுந் தன்னுடைய காரியமான சரீரரட்சணத்தை நிறைவேற்றுமென்று சொல்லியிருக்கிறது. அப்படியே பாகவதத்திலும் மத்தியபானம்பண்ணினவன் தன்னுடைய தேகாதியை மறப்பதுபோல நிருவிகாரசொரூபத்தை யடைந்து ஜகத்தினுடைய தோற்றமில்லாத ஜீவன்முக்தனும் பிராரத்தாதினமாய்த் தன்னுடைய தேகமிருந்தபோதிலும், போனபோதிலும், அதையறிய மாட்டானென்று சொல்லியிருக்கிறது.

சங்கை? சாந்தோக்கிய உபநிடத்திலும், பாகவதத்திலுஞ், ஜீவன்முக்தனுக்குத் தேகாதிப்பிரதீதி கிடையாதென்று சொல்லு கிறபடியால் அந்தச்ஜீவன்முக்தன் ஒருவிவகாரம்பண்கிறதற்கு இடமில்லையே; அப்படியிருக்க வாசிட்டத்திலே ஜீவன்முக்தாள் சமீபத்திலிருக்கப்பட்டவர்களினாலே சமாதியில்நின்று வெளிப்படுத்தப்பட்டவாளாய்த் தங்கள்தங்கள் வருண ஆச்சிரமங்களுக்கு குசிதமான விவகாரம் பண்ணுவாளென்று சொல்லியிருக்கிறதே; ஆனதால், ஒன்றுக்கொன்று சாஸ்திரங்களில் விரோர்தம்வருகிறதே யென்றால்? ஜீவன்முக்தாளுடைய சித்தவிசிராந்தி தாரதன்மியத்தினாலே அந்தச் சாஸ்திரவசனத்திற்கு அந்தந்தப் பூமியில் நியமஞ்செய்யவேண்டியதானதால் அப்படி விரோதம் வரவேண்டியதில்லை. இந்த அபிப்பிராயப்படிக்கி கடவல்லி யுபநிடதத்திற் பிரமவித்தென்றும், பிரம வித்துவரனென்றும், பிர்மவித்துவரியானென்றும், பிரமவித்துவரிட்டனென்றும், நாலுபேர்களுண்டென்று சொல்லப்பட்டிருக்கிறது அந்தநாலுபேர்களுக்குஞ் சுபேகைஷமுதலான யேழுபூமிகளுக்குள்ளே முந்தின மூன்றுபூமிகள்போக மற்றநாலுபூமிகளையுங் கிரமமாக அடைந்தபேர்களென்று அறியத்தக்கது.

அந்தப்பூமிகளாவதேதென்றால்? சுபேகைஷயென்றும், விசாரணையென்றுந், தனுமானசியென்றுஞ், சத்துவாபத்தியென்றும், அசஞ்சத்தியென்றும், பதார்த்தாபாவனையென்றுந், துரியமென்றும், யேழுவிதங்களென்று வாசிட்டத்திலே சொல்லியிருக்கிறது. அதுகளுக்கு லக்ஷணமும் அதிலேயேசொல்லியிருக்கிறது. அதேதென்றால்? என்விருதாவாய் மூடனாகிப்போகிறோம் வைராக்கியமுதலான சாதனத்தோடேகூடச் சாதுக்களிடத்தில்நின்றும் சற்சாஸ்திரத்துவாரமாக அறியவேண்டிய பரமானந்த பிரமசொரூபத்தை யெவ்விதமும் அறிந்து கிருதார்த்தனாகிவிடுவோமென்கிற இடமாயிருக்கப்பட்ட பிர

மசாக்ஷாத்கார இச்சையே; சுபேச்சையென்று சொல்லப்பட்ட முந்தினபூமி. பின்பு சாதனசதுஷ்டய சம்பன்னனாகிக் குருமுகமாக வேதாந்தசாஸ்திர அர்த்தத்தைச் சிரவணம்பண்ணி அதை மனனம் பண்ணுவது விசாரணையென்று சொல்லப்பட்ட இரண்டாம்பூமி. கீழ்ச்சொன்ன இரண்டுபூமிகளுடைய அப்பியாசபெலத்தினாலே நிதித்தியாசனம் பண்ணி அந்த நிதித்தியாசனமானது அப்பியாசபெலத்தினாலே சவிகற்பசமாதிபரியந்தஞ் சித்திப்பது தனுமானசியென்று சொல்லப்பட்ட மூன்றாம் பூமி. கீழ்மூன்று பூமிகளுடைய அப்பியாசபெலத்தினாலே மனதிற்கு விஷயத்திற் றிடவைராக்கியம் வந்து அந்தமனது பரமானந்த சொரூபராயிருக்கிற சத்து வஸ்துவினிடத்திற் பாலுஞ் ஜலமும்போலக் கலந்து யேகரசப்பட்டு சூக்ஷமரூபமாத்திரமாய்ச் சேஷித்து நிர்விகற்பசமாதியை யடைவது சத்துவாபத்தியென்று சொல்லப்பட்ட நாலாம்பூமி. இந்த நாலாம்பூமியிற்றான் அப்பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்காரம். இதற்குமேற்பட்ட மூன்றுபூமிகளும் நிர்விகற்பசமாதி அப்பியாசத்தினாலுண்டாகிற சித்தவிசிராந்தி தாரதன்மியத்தினாற் சித்திக்கும்படியான பூமிகளென்று வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறது. அந்த யேழுபூமிகளுக்குள்ளே முந்தின மூன்றுபூமிகள் அப்பிரதிபந்த அபரோக்ஷ ஞானத்திற்குச் சாதனங்களேதவிர அந்தஞானத்தில் அகப்பட்டதன்று. ஏனென்றால்? அந்த மூன்றுபூமிகளிலுஞ் ஜகத்துச்சத்தியமென்கிற புத்தி நீங்காதபடியால் அதுகள் ஞானத்தில் அகப்பட்டதன்று. ஆனதால், அந்த மூன்றுபூமிகளுக்குஞ் ஜாக்கிரமென்றுபெயர். அந்தப்படி வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறது. அதேதென்றால்? ஏ இராமா முந்தின மூன்றுபூமிகளிலுஞ் ஜகத்துச்சத்தியமென்கிறபுத்திபோகாமல் முன்போலவே சத்தியமாகத்தோணுகிறபடியால் அதுகளுக்குச்ஜாக்கிரமென்று பெயரென்று ஸ்ரீ வசிட்டர் சொல்லியிருக்கிறார், நாலாம்பூமிசர்வாதிஷ்டானமான பிரத்தியகபின்ன பிரமசொரூபத்தை நிர்

விகற்பசமாதியினல் நன்ருயறிந்து அந்தச்சொரூபத்திற் கற்பிக்கப்பட் டதிரிசியமான நாமரூபப் பிரபஞ்சமுழுவதும் மித்தையென்று திட ஞானமுண்டாகிறபடியால் முமூக்ஷுக்களுக்கு முன்சொன்ன மூன் றுபூமிகளாகிய ஜாக்கிரத்தைக்காட்டிலும் இந்தநாலாம்பூமி சொற்ப னமென்று சொல்லப்படும். அந்தப்படி வாசிட்டத்திற் சொல்லியிருக் கிறது. இந்த நாலாம்பூமியை அடைந்த ஞானியே பிரமவித்தெ ன்று சொல்லப்படுவன் ஐந்தாம்பூமிமுதல் மூன்றுபூமிகளுஞ் ஜீவன் முக்தியினுடைய பேதத்திற் சேர்ந்தது அந்தச் ஜீவன்முக்தியின் பே தமான மூன்றுபூமிகளும் நிர்விகற்பசமாதி அப்பியாசபெலத்தி னுற் கிடைக்கப்பட்ட சித்தவிசிராந்தி தாரதன்மியத்தினுற் சித்திக் கத் தக்கதுகளென்று கீழ்ச்சொல்லப்பட்டிருக்கிறது. அதில்-ஐந்தாம் பூமியிலிருக்கப்பட்ட ஞானியானவன் நிற்விகற்பசமாதியில் நின்றும் அப்போ அப்போ தான்ருனே வெளிப்படுவன் அந்தஞானி பிரமவித் துவரனென்று சொல்லப்படுவன். ஆரும்பூமியிலிருக்கப்பட்ட ஞானி சமீபத்தி லிருக்கப்பட்டவர்களினுலே போதிக்கப்பட்டால் அந் தச்சமாதியில் நின்றும் வெளிப்படுவன் அப்படிப்பட்டஞானி பிரம வித்துவரியானென்று சொல்லப்படுவன். அந்த ஐந்தாவது, ஆரு வது ஆகிய இரண்டு பூமிகளுஞ் சுழுப்தியென்றுங் காட்ட சுழுப்தியெ ன்றும் பெயர். அந்தப்படி வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறது. அதே தென்ருல்? ஐந்தாம்பூமியையடைந்தஞானி நாமரூபமொன்றுந்தோ ணமற் சச்சிதானந்தபராமாத்துவைத பிரத்தியகபின்ன பிரமசொரூப த்திற் சித்தவிசிராந்தியையடைந்து பாகியவிவகாரம் பண்ணினபோ திலும்; பாதித்தூக்கத்திலெழுந்திருந்து சோன்னம் முதலானதைப் புசிக்கிறபாலன்போல அந்தர்முகனுகவே யிருக்கிறபடியாலும் பார்க் கிறபேர்களுக்குச் சுழுப்தன்போலக் காணப்படுகிறபடியாலும் அந்த ஐந்தாம்பூமி கீழ்ச்சொன்ன சொற்பனத்தைக்காட்டிலுஞ், சுழுப்தி யென்று சொல்லப்படும் பின்பு அந்தப்பூமியைச் சிலநாளப்பியாசிக்

கும்போது அந்த அப்பியாச பெலத்தினாலே முன்னையைவிடப் பின்னும் அதிகமாக வாசனைகள் சாந்தமாகி சித்தவிசிராந்தி விசேஷமாய்க் கிடைக்கிறபடியினாலே காட்டசுழுப்தியென்று சொல்லப் பட்ட ஆரும்பூமியை ஞானியடைவன். அதாவதேதென்றால்? சத்தென்றும், அசத்தென்றும், அகங்காரமென்றும், அகங்காரமில்லாமையென்றுந், துவிதமென்றும், அத்துவிதமென்றும், இதுமுதலான ஒருமனனம் ஆரும்பூமியையடைந்த ஞானிக்கில்லாததினாலேயும், முன்னையைவிட அதிகமாய்ச் சித்தவிசிராந்தியை அடைந்திருக்கிறபடியினாலேயும், அந்தஞானியானவன் ஆகாசத்தின் நடுவிலிருக்கப் பட்ட கடம்போல உள்ளிலும் வெளியிலும் நாமரூபப்பிரதீதிசூனியனாயுஞ், சதா சச்சிதானந்த அகண்டேகரசப் பிரமசொரூபத்தில் மூழ்கியிருப்பதினாலே சமுத்திரத்தினடுவி லிருக்கப்பட்ட கடம்போலப் பூரணனாயும், இருப்பன். அப்படிப்பட்ட நிஷ்டையே காட்டசுழுப்தியென்று சொல்லப்பட்ட ஆரும்பூமி. ஏனென்றால்? மேற்சொன்ன சுழுப்தியைக்காட்டிலும்; இந்தப்பூமி திடமானதால் இது காட்டசுழுப்தியென்று சொல்லப்படுமென்று வாசிட்டத்திற் சொல்லியிருக்கிறது. அந்தப்பூமியினுடைய அப்பியாசபெலத்தினாலே அதற்கும் அதிகமான சித்தவிசிராந்தியை யுடைத்தான துரியமென்று சொல்லப்பட்ட ஏழாம்பூமியை ஞானியடைவன். அதையடைந்த ஞானி தானாய்ுனேயாகட்டும், பிறராற்றானாகட்டும், நிர்விகற்பசமாதியில்நின்றும் வெளிப்படத்தக்கதில்லைக் கீழ்ச்சொன்ன ஜாக்கிர, சொற்பன், சுழுப்தி மூன்றையுங்காட்டிலும்; இந்தப்பூமி நாலாவதானதால், இதற்கு துரியமென்றுபெயர். இந்தப்பூமியை அடைந்தஞானிபிரமவரிஷ்டனென்று சொல்லப்படுவன். இந்த யேழாம் பூமியிலேதான் நிர்விகற்பசமாதியைச் சொல்லாநின்ற சகலயோகசாஸ்திரமும் ஞானசாஸ்திரமும் முடிந்தது. இதற்குமேற் கிடைக்கவேண்டியது யாதொன்றுமில்லையென்று சித்தாந்தம். இப்படியாயுள்

ளளவில் யாதொருஜகத்துப் பிரதீதியும், விவகாரமும், அன்றியிலிரு க்கப்பட்டபிரமவித்துவரிட்டனைக்குறித்துக் கீழ்ச்சொன்ன சாந்தோக்கிய உபநிடதத்தினுடையவசனமும், பாகவதவசனமுந், தேகாதிமறதியையும் விவகார அபாவத்தையுஞ், சொல்லித்து. சமாதியில்நின்றும் பிறரால் வெளிப்படுத்தும்படியான பிரமவித்துவரியானைக்குறித்து வாசிட்டவசனந் தங்கள்வருணாச்சிரமங்களுக் குசிதமான விவகாரத்தைச் சொல்லி பிரமவித்துவரியானுக்குக் கீழ்ப்பட்ட பிரமவித்துவரன், பிரமவித்து, ஆகிய இவர்களுக்கு விவகாரமுண்டென்கிறதிற் கேட்கவேண்டியதென்ன; இப்படிச் ஜீவன்முக்தனுக்கு விவகாரத்தைச் சொல்லுகிறதாயும், அதின் அபாவத்தைச் சொல்லுகிறதாயுமிருக்கிற அந்தந்தச் சாஸ்திரவசனத்திற் கந்தந்தபூமியில் நியமஞ்சித்தித்தபடியினாலே ஒன்றுக்கொன்று சாஸ்திரவசனங்களுக்கு யாதொருவிரோதமும் வரவேண்டியதில்லை. இந்தப்பிரகாரம் ஐந்தாம்பூமி முதலான மூன்றுபூமி ரூபமான ஜீவன்முக்தியையடைந்த ஞானிகளுக்குச் சித்தவிசிராந்தி வந்திருக்கிறபடியினாலே சமுசய விபரீதங்களுக் கேதுவில்லை. ஆனதால், வேதாந்தப் பிரமாணத்தினாலுண்டான தத்துவஞானம் யாதொருவாதகமுமன்றியிற் ஜீவன்முக்தியினால் ரக்ஷிக்கப்படலாம். அப்படிப்பட்ட ஞானரக்ஷையே; ஜீவன்முக்திக்கு முந்தினபிரயோஜனம்.

அதற்கிரண்டாம் பிரயோசனமாகிய தவசாவதேதென்றால்? கீழ்ச்சொன்ன யோகபூமிகள் தேவாதிபதத்திற்குச் சாதனமானதால் அதுகளே தவசென்று சொல்லப்படும். அந்தபூமிகள் தேவாதிபதத்திற்குச் சாதனமென்கிறது ஸ்ரீ இராமவசிட்டாளுடைய கேள்வி மறுமொழிகளினாலே அறியப்படுகிறது. அதெப்படியென்றால்? வாருமையா ஸ்ரீ குரோ முதற்பூமியாகட்டும், அல்லது இரண்டாம்பூமியாகட்டும், மூன்றும் பூமியாகட்டும், அடைந்து திடஅபரோக்ஷஞானி

மன்றியில் மரித்துப்போனவனுக்கு யென்னகதியென்று கேட்ட ஸ்ரீ இராமனைப்பார்த்து ஸ்ரீவசிட்டர்சொன்னதென்னவென்றால் ? வாரும் பிள்ளாய் இராமா யோகபூமியையடைந்து மரித்தஜீவனுக்குத் தானடைந்த யோகபூமியினுடைய அப்பியாசத்துக்குத் தகுமானபடி சஞ்சித பாவம் நசித்துப் புண்ணியம் விருத்தி யடைந்திருக்கிறபடியினாலே அந்தச்ஜீவன் தேவவிமானங்களிலே யேறிக்கொண்டு இந்திராதிலோகத்திலும், மேருமுதலான உத்தமலோகத்திலிருக்கப்பட்ட உத்தியானவனமுதலானதிலும், நல்லநல்ல ஸ்திரீகளோடேகூட ரமித்துக்கொண்டு புண்ணியத்திற்கு தகுமானபடி சுகத்தை யநுபவித்துப்போட்டுப் பின்பு இந்தலோகத்திற் சுத்தர்களாய்க் குணவான்களாய் பாக்கியசாலிகளாயிருக்கிற சாதுக்களுடைய குலத்திற் ஜன்மத்தை யடைந்து பூருவஜன்மத்தில் அப்பியாசிக்கப்பட்ட யோகவாசனையின் பலத்தினாலே இந்தச்ஜன்மத்திலும் முன்னடைந்த பூமிவரைக்குஞ் சீக்கிரத்திலடைந்து அதற்குமேற்பட்ட யோகபூமியையும்; முயற்சியினாலே கிரமமாக அடைந்து கிருதார்த்தனாகிவிடுவானென்று ஸ்ரீ வசிட்டர் சொல்லியிருக்கிறார். இப்படி யோகபூமிகள் தேவாதிலோகத்திற்குச் சாதனமானதால், அதுகள் தவசென்று சொன்னதுசரியே. நாலாம்பூமியிற் கிடைக்கும்படியான அப்பிரதிபந்த அபரோக்ஷஞானத்திற்குக் கீழ்ப்பட்ட மூன்றுபூமிகளே தவசாகும்போது அந்தஞானத்திற்குப் பிறகுண்டாகும்படியான நிர்விகற்பசமாதி பரிபாகதாரதன்மிய ரூபங்களான ஐந்தாவது முதலான மூன்றுபூமிகளுந் தவசென்கிறதிற் கேட்கவேண்டியதென்ன ; அதுகள் தவசுதான். அந்தப்படி ஸ்மிருதியிற் சகல் இந்திரியங்களோடே மனதினுடைய யேகாக்கிரரூபமான நிக்கிரகம் யாதொன்றுண்டோ ; அதுவே மஹாதவசு. அதுவே தருமங்களுக்குள்ளே உத்தமமான தருமமென்கிறதாகச் சொல்லியிருக்கிறது. அப்படிப்பட்டதவசினாலே ஜீவன்முக்தனுக்கு அடையும்படியான ஜன்மமுதலானதில்லாவிட்டாலும்; அந்தத்தவசு லோகா

னுக்கிரகத்தின்பொருட்டுபயோகிக்கும். அந்தப்படி பகவான் சொல்லியிருக்கிறார்.

அந்தலோகமென்று சொல்லப்பட்ட ஜனங்கள் சிஷர்ளென்றும், பக்தாளென்றும், தடஸ்தாளென்றும், மூன்றுவிதங்களா யிருக்கும். அதில் சிஷஜனங்களுக்குச் சதா அந்தர்முகரா யிருக்கிற ஜீவன்முக்தரான குருவினிடத்தில் அத்தியந்தஞ் சிரத்தையுண்டாகி அதினாலே அவரால் உபதேசிக்கப்பட்ட பிரத்தியகபின்ன பிரமத்துவத்தில் மிகவும் நம்பிக்கைவந்து சீக்கிரத்தில் சித்தவிசிராந்திகிடைக்கும். அந்தப்படி சுவேதாசுவதர உபநிடத்திற் பரமேசுரனிடத்திலெப்படிப் பக்தியிருக்கவேண்டியதோ; அப்படித் தன்குருவினிடத்திலும் பக்தியுள்ளவனுக்கே வேதாந்தசாஸ்திரத்துவாரமாக உபதேசிக்கப்பட்ட மஹாவாக்கியார்த்தம் முதலான சகல அர்த்தமுங் கரதலாமலகம்போல நன்றாய்ப் பிரகாசிக்குமென்று சொல்லியிருக்கிறபடியினாலே அந்தர்முகராயிருக்கிற குருவினிடத்தில் சிஷர்களுக்குச் சிரத்தையுண்டாகி அவராலுபதேசிக்கப்பட்ட அர்த்தத்திற் சீக்கிரமாய்ச் சித்தவிசிராந்தி கிடைக்குமென்று சொன்னது யுக்தந்தான். பக்தாளாயிருக்கிற ஜனங்கள் அப்படிப்பட்ட ஜீவன்முக்தருக்கு அன்னமுதலானதைக் கொடுக்கிறதினாலும், மடமுதலான நல்ல இடமுண்டுபண்ணிக்கொடுக்கிறதினாலுஞ், சிசுருஷைசெய்வதினாலும், அவருடைய தவசுக்குச் சமானமான புண்ணியவிசேஷத்தைத் தாங்களுமடைந்து கிருதார்த்தாளாகிவிடுவாள். அந்தப்படி கௌஷதகி யுபநிடதத்திற் சொல்லியிருக்கிறது.

தடஸ்தாளென்று சொன்ன ஜனங்கள் ஆஸ்திகாளென்றும், நாஸ்திகாளென்றும், இரண்டுவிதங்களாயிருக்கும். அதில்-சகலசாஸ்திரார்த்தமுஞ் சத்தியமென்று நம்பியிருக்கிற ஆஸ்திகஜனங்களான பேர்கள் ஜீவன்முக்தருடைய நல்ல ஆசாரத்தைப்பார்த்து மஹாத்து

மாவாயிருக்கிற இவரே இப்படி நல்லநடத்தையிலிருக்கச்சே நாமும் நல்லநடத்தையைச் செய்யவேண்டுமென்று தோணி அந்தப்படி நடப்பார்கள். அப்படியே பகவான் சொல்லியிருக்கிறார்.

ஏதோ சாஸ்திரத்திற் சொல்லியிருக்கிறது யார் ஒயதைக் கண்டாள் பிரத்தியக்ஷமாய் நடக்கிறகாரியமே சத்தியமென் றிது முதலான வெகுதுர்ப்புத்தியை யுடைத்தான நாஸ்திகாளும் மஹாத்துமாவாயிருக்கிற ஜீவன்முக்தருடைய திவ்வியமான திருஷ்டியில் விழுந்தமாத்திரத்திலே வெகுவிதபாவங்களிலேநின்றும் விடுபடுவார்கள். அந்தப்படி சூதசங்கிதையிற் திடாநுபவபரியந்தங் கிடைத்திருக்கிற பிரமநிஷ்டையையுடைத்தான ஜீவன்முக்தருடைய திருஷ்டியி லெதிர்ப்பட்ட பெயர்களெல்லாம் வெகுவிதபாபங்களிலேநின்றும் முக்தாளாகிவிடுவார்களென்று சொல்லியிருக்கிறது. அதற்காக இதிகாசமுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படிச் ஜீவன்முக்தருடைய தவசு சர்வபிராணிகளுக்கும் உபயோகிக்குமென்கிற அபிப்பிராயத்தினல் அந்தச்ஜீவன்முக்தருடைய குலமேபரிசுத்தம். அவருடைய மாதாவேகிருதார்த்தை. அவராலேஇந்தப்பூமியெல்லாம் பரிசுத்தமென் றிதுமுதல் வெகுமகிமை ஜீவன்முக்தருக்குச் சூதசங்கிதையிற் சொல்லப்பட்டிருக்கிறது. ஜீவன்முக்தருடைய சாஸ்திரவிவகாரந் தவசென்கிறதில் அதிசயமென்ன; அவருடைய லௌகீகமான சகல விவகாரமுங்கூடத் தவசுதானென்று தைத்திரியவுபநிடதத்தில் வெகுவிஸ்தாரமாய்ச் சொல்லியிருக்கிறது. இப்படிச் ஜீவன்முக்திக்கி இரண்டாம் பிரயோசனமாகிய தவசுசொல்லப்பட்டுது.

அதற்கு மூன்றும் பிரயோசனமாகிய விசமவாதமில்லாமை யாவதேதென்றால்? லௌகீகனைகட்டுஞ், சாஸ்திரஞ்ஞனைகட்டுஞ், ஜீவன்முக்தரோடே; கலகமென்றும், நிந்தையென்றுஞ், சொல்லப்

பட்ட விசமவாதத்தைச் செய்யாமலிருப்பதே விசமவாதமில்லாமை. அதெப்படியென்றால்? லௌகீகனானவன் கலக ஏதுவான குரோத முதலான சித்தவிகாரமில்லாதவராயும், எப்போதும் அந்தர்முகராயு மிருக்கிற ஜீவன்முக்தரோடே; எப்படிக் கலகஞ் செய்யப்போகி ருன் செய்கிறதற்கிடமில்லை. ஆனதால், கலகரூபமான விசமவாத மில்லாமை சித்திச்சுது. ஜீவன்முக்தர் இன்னநடத்தையையுடைத் தானவரென்று லௌகீகனாலே நிச்சயிக்கக்கூடாதபடியால் அவன் அவரை யெப்படி நிந்திக்கப்போகிருன் நிந்திக்கிறதற்கு மிடமில்லை. ஆனதால், நிந்தைரூபமான விசமவாதமில்லாமையுஞ் சித்திச்சுது. இப்படிச் ஜீவன்முக்தரோடே; லௌகீகனாற் செய்யும்படியான இர ண்டுவித விசமவாதமில்லாமை சொல்லப்பட்டது. சாஸ்திரக்ஞா னவன் ஜீவன்முக்தரோடேகூடச் சாஸ்திர அர்த்தத்திலாகட்டும், அல்லது அவருடைய நடத்தையிலாகட்டும், கலகஞ் செய்யவேண்டும். அந்தஇரண்டுக்கு மிடமில்லை. ஏனென்றால்? ஜீவன்முக்தரானவர் சதா ஆத்துமத்தியானம் பண்ணவேண்டும். இதர வார்த்தைகளை விட்டுவிடவேண்டும். இதரவார்த்தைகளை வெகுவாய்ச்சொன்னது கொண்டு வாக்குக்கு வலியுண்டாகுமேயொழிய வேறேபலங்கிடை யாதென் றிதுமுதலான உபநிடதத்தின் அர்த்தத்திலே தார்ப்பரிய முள்ளவரானபடியினாலே அவர் பிரதிவாதிகள்முன்னே அவாளு டைய சாஸ்திரார்த்தத்தைத் தூஷிக்கப்போகிறதில்லை. அப்படியே; தானியங்கிடைத்தபிறகு வைக்கோலைத் தள்ளுவதுபோலப் பிரம சொரூபத்தையறிந்து திடமான நிஷ்டைகிடைத்தபிறகு வேதாந்த சாஸ்திரத்தையும் விட்டுவிடவேண்டுமென் றிதுமுதலான உபநிடத த்தின் அர்த்தத்திற் றார்ப்பரியமுள்ளவரானபடியினாலும், பிரதிவாதி களைக்கூடத் தன்னுடையசொரூபமாகப் பார்க்கிறவரானபடியினா லும், அவாளுடையமுன்னே தன்னுடைய அத்துவைதமான வேதா ந்தசாஸ்திர அர்த்தத்தையுஞ் சாதிக்கப்போகிறதில்லை. ஆனதால்,

அப்படிப்பட்ட ஜீவன்முக்தரோடே; சாஸ்திரம்படித்தவன் ஒருவனுஞ் சாஸ்திரார்த்தத்தில் வரப்பட்ட கலகரூபமான விசமவாதம் பண்ணுகிறதற்கிடமில்லை. அப்படியே; லோகாயுதமதமொழிந்த மற்ற சகலமதத்திலு மிருக்கப்பட்ட சாஸ்திரக்ஞாளுஞ் ஜீவன்முக்தருடைய நடத்தையில் நிந்தைரூபமான விசமவாதத்தைச் செய்யப்போகிறதில்லை. ஏனென்றால்? லோகாயுதபின்னமான அருக, பௌத்த, தார்க்கிக, சைவ, வைஷ்ணுவ, சாத்த, சாங்கிய, யோகாதிசாஸ்திரங்களிற் சொல்லப்பட்ட சாஸ்திர அர்த்தம் நானுவிதமாயிருந்தாலும் அந்த யெல்லாச்சாஸ்திரத்திலும் மோக்ஷசாதனமான இயமநியமாதி அஷ்டாங்கயோகம் ஒன்றாகவே சொல்லப்பட்டிருக்கிறபடியினாலே யொருசாஸ்திரஞ்ஞாளுஞ் ஜீவன்முக்தருடைய சர்வோத்தமமானநடத்தையில் நிந்தைரூபமான விசமவாதத்தைச் செய்யவேமாட்டார்கள். ஆனதால், ஜீவன்முக்தர் சர்வசம்மதமாகவே இருப்பரென்று சித்தமாச்சுது. அந்தப்படி வாசிட்டத்தில் வெகுவாய்ச்சொல்லியிருக்கிறது. இப்படிச் ஜீவன்முக்திக்கி மூன்றாம்பிரயோசனமாகிய விசமவாதமில்லாமை சொல்லப்பட்டுது.

அதற்கு நாலாவது ஐந்தாவது பிரயோசனமாகிய துக்கநாசஞ் சுகாவிர்ப்பாவங்களைப் பஞ்சதசப்பிரகரணத்தில் ஆனந்தபஞ்சகத்தினுடைய நாலாமத்தியாயமாகிய வித்தியானந்தமென்கிற பிரகரணத்தில் விஸ்தரித்துச்சொல்லியிருக்கிறோம், ஆனதால், அந்தஇரண்டையும் இங்கேசங்கிரகித்துச் சொல்லுகிறோம். அதேதென்றால்? இகலோகதுக்கநாசமென்றும், பரலோகதுக்க நாசமென்றுந், துக்கநாசம் இரண்டுவிதம். அந்தஇரண்டுஞ் ஜீவன்முக்தருக்குண்டு. அது எப்படியென்றால்? அக்கியானஞ், சமுசயம், விபரீதம், ஒன்றுமன்றியிற் றேகாத்துமஞானந் திடமா யெப்படியுண்டாகிறதோ;

அப்படிப் பரமானந்தரூபமான பிரத்தியகபின்ன பிரமசொரூபமே நாமென்று அக்ஞானமுதலானதன்றியிற் றிடஅபரோக்ஷஞானத்தையடைந்து சித்தவிசிராந்தி கிடைத்திருக்கிற ஜீவன்முக்தருக்குச் ஜகத்தினுடைய பிரதீதியே இல்லாததினாலே இகலோகத்திற் சுரமுதலானரோகத்தினால் வரப்பட்ட துக்கமுங், பரலோகத்தில் நரகாதியினால் வரப்பட்ட துக்கமும், எப்படித்தோன்றுந் தோன்றமாட்டாது. ஆனபடியினாலே அவருக் கிரண்டுவித துக்கநாசமும் உண்டு. அந்தப்படி பிரகதாரணியங், தைத்திரியம், முதலான உபநிடதத்தில் நன்றாய்ச் சொல்லியிருக்கிறது. அந்தத் துக்கநாசமே ஜீவன்முக்திக்கி நாலாம் பிரயோசனம்.

அதற்கைந்தாம் பிரயோசனமாகிய சுகாவிற்பாவமாவ தேதென்றால்? நிர்விகற்பசமாதி சாக்ஷாத்காரங்களினால் விக்ஷேபம், ஆவரணம், இரண்டும் நீங்கியிருக்கிறபடியினாலேயும், பரமானந்தரூபமான பிரத்தியகபின்ன பிரமசொரூபத்திற் சீரோதகம்போல மனது யேகரசப்பட்டுச் சமஸ்காரமாத்திரமாகச் சேஷித்திருக்கிறபடியினாலேயுஞ், சொரூபசுகஞ் சூக்ஷுமமான ஜீவன்முக்தருடைய மனதில் ஆவிற்பவிக்கும். அந்தச்சுகாவிற்பாவஞ் ஜீவன்முக்திக்கைந்தாம்பிரயோசனம்.

ரு

சங்கை? இந்தத் துக்கநாசஞ், சுகாவிற்பாவம், இரண்டுந் தத்துவஞானத்தினாலேதானே சித்தித்திருக்கிறபடியினாலே இதைச் ஜீவன்முக்திக்கேப் பிரயோசனமென்று எப்படிச் சொல்லலாமென்றால்? சொல்லலாமே. ஏனென்றால்? தத்துவஞானஞ் ஜீவன்முக்திக்கிப்பூருவமே சிரவணாதியினாலே யுண்டாயிருந்தபோதிலும்; அந்தத் தத்துவஞானஞ் ஜீவன்முக்தியினாலே சமுசயவிபரீதங்கள் வாராமல் ரக்ஷிக்கப்படுகிறபடியினாலே அப்படி ரக்ஷிக்கப்பட்ட அந்தஞானம்

எப்படிச் ஜீவன்முக்திக்கிப் பிரயோஜனமோ; அப்படி ஞானத்தினாலே ஜீவன்முக்திக்கிப் பூருவமே துக்கநாசஞ், சுகாவிற்பாவம், இரண்டு முண்டாயிருந்தபோதிலும்; அந்த இரண்டுஞ் ஜீவன்முக்தியினாலே விக்ஷேபம்வாராமல் ரக்ஷிக்கப்பட்டுத் திடமாகிறபடியினாலே. அப்ப டிப்பட்ட துக்கநாசஞ், சுகாவிற்பாவம், இரண்டுஞ் ஜீவன்முக்திக்கிப் பிரயோஜனமென்று நன்றாய்ச் சொல்லலாம்.

சங்கை? இப்படியாயுள்ளளவில் ஐந்துபிரயோசனங்களோ டேயுங்கூடின ஜீவன்முக்தியையுடைத்தான ஞானியன்றோ; சமாதி யன்றியில் லோகவிவகாரம் பண்ணிக்கொண்டிருக்கிற ஞானியைக் காட்டிலுஞ், சிரேட்டனென்று சொல்லவேண்டும். அப்படிச்சொல் லக்கூடவில்லை. ஏனென்றால்? வாசிட்டத்திலேயே சர்வஞ்ஞரா யிருக்கிற ஸ்ரீ வசிட்டபகவானே; ஒருவன் லோகவிவகாரம்பண்ணின போதிலுஞ் சிலகாலங்கிடைத்த சமாதியினாற் திடப்பட்ட ஞான பெலத்தினாலேதானே சுகமாய்ச் சாந்தனாயிருக்கிறான். மற்றொருவன் எப்போதும் ஏகாந்தவாசம் பண்ணிக்கொண்டு சமாதியைவிட்டுப் பிரியாமலேயிருக்கிறான். இது மெய்யென்றுகூறினார், ஆனால், அவர் கள் இரண்டுபேர்களுக்குள்ளே யார்தான் சிரேஸ்டனென்கிறதை யெனக்குச் சொல்லவேண்டுமென்று கேட்ட ஸ்ரீஇராமனைப் பார்த்து ஸ்ரீ வசிட்டர் சொன்னபிரகார மென்னவென்றால்? ஏ இராமா! திடஞானியா யிருக்கிறவனுக்கு மனதுகுளிர்ந்திருப்பதே சமாதி. ஆனதால், ஒருவன் சர்வத்திற்குஞ் சாக்ஷியாயிருக்கிற சின்மாத்திர சொரூபமான நமக்குத் திரிசியமாயிருக்கிற அகங்காராதிப்பிரபஞ்ச த்தோடே யாதொருசம்பந்தமுங் கிடையாதென்று திடநிச்சயத் தோடேகூட லோகவிவகாரம் பண்ணினபோதிலுங்; குளிர்ந்திருக் கிற னதோடேகூடியிருப்பன். அப்படியில்லாமற் பின்னொரு வன் சதா சமாதியிலேயிருப்பன். மனதுமாத்திரங் குளிர்ந்திரு

ந்துதேயானால்; அவர்களிரண்டுபேர்களுஞ் சமானன்தான். மனதினுடைய குளிர்மையன்றோ; சகலத்திற்கும் பலமென்று ஸ்ரீ வசிட்டர் சொல்லியிருக்கிறபடியினாலே லோகவிவகாரம் பண்ணுகிற திடஞானியைக்காட்டிலுஞ்; சமாதியிலிருக்கப்பட்ட ஜீவன்முக்தன் சிரேஸ்டனென்று சொல்லக்கூடவில்லையேயென்று சங்கைவந்தால் ஸ்ரீவசிட்டருடைய மறுமொழியின் அபிப்பிராயத்தை ஆலோசித்துப் பார்க்கும்போது அப்படிப்பட்ட சங்கைவரவேண்டியதில்லை. அவருடைய, அபிப்பிராயந்தான் ஏதென்றால்? ராகாதிவாசனக்ஷயமாகிய மனதினுடைய குளிர்மை அவசியஞ் சம்பாதிக்கத்தக்கதென்றிவ்வளவே அவருடையமறுமொழியின் அபிப்பிராயமேதவிர அந்த வாசனக்ஷயத்திற்கு மேற்கிடைக்கும்படியான மனோநாசரூபமான சமாதி சிரேஸ்டமென்கிறதை நிஷேதிக்கிறது அபிப்பிராயமன்று ஏனென்றால்? அந்த ஸ்ரீவசிட்டரே மேற்கிரந்தத்தில் மனதினுடைய குளிர்மையென்பது ஆசையினுடையசாந்தியென்று ஸ்புடமாய்ச் சொல்லியிருக்கிறார். அதேதென்றால்? மனது ஆசைமுதலான மலினவாசனையன்றியில் உள்ளேகுளிர்ந்திருந்தால் வெளியிற் சகலஜகத்தும் அமிர்தசமுத்திரத்தினால் நனைக்கப்பட்டதுபோலக் குளிர்ந்ததாய்த் தோன்றும். அந்தமனது ஆசைமுதலானதால் உள்ளேதாபத்தையடைந்தால் வெளியிற் சகலஜகத்துங் காட்டுத்தீபற்றிக்கொண்டெரிக்கப்பட்ட வனம்போலத் தாபத்தோடே கூடினதாய்த் தோன்றுமென்று மேற்சொல்லியிருக்கிறார். ஆனதால், ராகாதிவாசனக்ஷயரூபமான மனதினுடைய குளிர்மையாகிய சமாதி லோகவிவகாரம் பண்ணுகிற ஞானிக்குஞ், சமாதியிலிருக்கிற ஜீவன்முக்தனுக்குஞ், சமானமானபோதிலும்; அந்த வாசனக்ஷயத்திற்கு மேற்பட்ட மனோநாச ரூபமான சமாதி சிரேஸ்டமென்கிறதில் யாதொரு விரோதமுமில்லை. இப்படியாயுள்ளளவில் விவகாரம் பண்ணிக்கொண்டிருக்கிற

தத்துவக்ஞனைக் காட்டிலுஞ்; சமாதியிலிருக்கப்பட்ட ஜீவன்முக்தர் சிரேஸ்டரென்று சொன்னது யுக்தந்தான்.

சங்கை? அந்தவாசிட்டத்திலே சமாதியிலிருக்கப்பட்டவனுடைய மனது நானாவிதவிர்த்திகளினாலே சஞ்சலமாயிருந்தால் அப்போது அந்தச்சமாதி உன்மத்தனுடைய கூத்துக்குச் சமானமென்று சமாதிநிந்தையும், உன்மத்தனுடைய கூத்துப்போலத் தோணினபடி விவகாரம் பண்ணினபோதிலும்; மனதுமாத்திரம் மலினவாசனையன்றியிலிருந்தால் அப்போது அந்தத் தத்துவஞானியினுடைய விவகாரஞ் ஜீவன்முக்தனுடைய சமாதிக்கிச் சமானமென்று விவகாரஸ்துதியுஞ், சொல்லப்படுகிறதே, ஆனதால், விவகாரியைக்காட்டிலுஞ்; சமாதிஸ்தன் எப்படிச் சிரேஸ்டனாகுவன் ஆகவேமாட்டானென்று சங்கைவந்தால் அந்தச்சங்கையும் வரவேண்டியதில்லை. ஏனென்றால்? சமாதிநிந்தையையும், விவகாரஸ்துதியையுஞ், சொல்லுகிறதுபோலத் தோன்றுகிற வாசிட்டவசனத்திலுஞ், சமாதிசிரேஸ்டமென்கிறதை ஒப்புக்கொண்டு வாசனையை நிந்திக்கப்படுகிறதேதவிர; சமாதி நிந்திக்கப்படவில்லை. அதெப்படியென்றால்? சொல்லுகிறோம். விவகாரத்தைகாட்டிலுஞ் சமாதிசிரேஸ்டமானபோதிலும்; அந்தச்சமாதி வாசனைகளோடே கூடியிருந்தால் அப்போது அது நிர்வாசனையாயிருக்கிற தத்துவக்ஞனுடைய விவகாரத்தைக்காட்டிலுங்; கீழ்ப்பட்டதுதான். சமாதிபண்ணுகிறவன், விவகாரம் பண்ணுகிறவன், ஆகிய இரண்டுபேர்களுந் தத்துவஞானமில்லாதவர்களாயும், வாசனையோடே கூடினவர்களாயும், இருந்தால் அப்போது சமாதி உத்தமலோகத்தையடைகிறதற்குச் சாதனமாயிருக்கப்பட்ட புண்ணியரூபமானதால் விவகாரத்தைவிடச் சமாதியேசிரேஸ்டம். இரண்டுபேர்களுந் தத்துவஞானிகளாயும், வாசனையில்லாதவர்களாயும், இருந்தால் அப்போது மனோநாசரூபமான சமாதி வாசனாக்ஷயத்தை ரக்ஷிக்கிறபடியினாலே

விவகாரத்தைக்காட்டிலுஞ்; சமாதியேசிரேஸ்டமானதாற் சமாதியி லிருக்கப்பட்ட ஜீவன்முக்தரே விவகாரியாயிருக்கிற தத்துவக்ஞனைக் காட்டிலுஞ்; சிரேஸ்டரென்றுசித்தமாச்சுது. ஆனபடியினாலே அந்தப் பிரயோசனங்களோடேகூடின ஜீவன்முக்தியில் யாதொருவிக்கின முங்கிடையாதென்று சித்தமாச்சுது.

இந்தப்பிரகாரம் ஸ்ரீவித்தியாரண்ணியசுவாமிகளினாலே ஜீவன் முக்தியினுடைய சொரூபம், பிரமாணஞ், சாதனம், பிரயோசனம், ஆகிய நாலுகளோடேயுங்கூடின ஜீவனமுக்திப்பிரகாணஞ் சொல் லப்பட்டுது.

அவாள் சொன்னபிரகாரம் அந்தப்பிரகாணத்தினுடைய அர்த் தத்தை ஸ்ரீ சாம்பநடேசருடைய பிரசாதலேசத்தினாலேயுஞ், சற் குருவினுடைய கிருபையினாலேயும், புத்திக்குத்தோணினமட்டுக்கும் நான் றமிழினாலே சொன்னேன். அப்படிச்சொல்லப்பட்ட இந்தத் தமிழ்மொழிரூபமான ஜீவன்முக்திப்பிரகாணம் ஸ்ரீ சாம்பநடேசருக்கே அர்ப்பணஞ்செய்யப்பட்டுது.

ஆனதால் இதிலிருக்கப்பட்ட பிழைகளை ஸ்ரீ சாம்பசிவபக் தாளாயிருக்கிற சாதுக்கள் சகித்துக்கொள்ளவேண்டியது.

ஜீவன்முக்திப்பிரகாணம் சமாபதம்.

திருச்சிற்றம்பலம்.

சர்வஞ்சின்மயம்.

---

# குருபரம்பரை

## வணக்கம்.

பரமாகவொளிர்சச்சி தானந்தமாம்விண்டு
பங்கயன்வசிட்டர்சத்தி
பராசமாமுனிமகா வியாசர்சீர்சுகர்கௌட
பாதர்கோவிந்தயோகி
யருளுருவுமாஞ்சங்க ராசாரியாமிறைக
ளமர்பத்மபாதருயரத்
தாமலகர்தோட்கா சிரியர்வார்த்திகர்வித்
தியாரண்யராகுமரவோ
ரிருளுருவமற்றவவர் மரபதனில்வந்தசுப்
பிரமணியதேவனயின
வீசனழகப்பாவா ரியன்வீரபத்திரகுரு
வின்பமுத்தையவடிக
டெருளுருவமாமுகந் தையனன்மைகளிலாத்
தீயனேன்றனையுமாண்ட
சீர்மூர்த்துராமலிங்க வருணாசலசிதம்பர
தேசியர்கடிகழ்பதமிறைஞ்சுவோமே.

## குருஸ்துதி.

பாசமனைத்தையுந் தனித்தனிப் பரிந்திடநீக்கி
நேசமாகிய வறிவுரு நீயெனக்காட்டிப்
பேசுமேழ்வகைப் பிறப்புனக்கிலை யெனப்பேசித்
தூசுநீக்கிய சுயஞ்சிதாகாசனைத் தொழுவாம்.

# பரிசோதன பத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 37 | 13 | விதனப்படுகின்றது .. | விதனப்படுகிறது. |
| 59 | 13 | சூத்திரபரஷியத்திற் ... | சூத்திரபாஷியத்திற். |
| 80 | 17 | அனுஷ்டிக்கிறாரகள ... | அனுஷ்டிக்கிறார்கள். |
| 86 | 8 | மலினவானசனைகளினாற்... | மலினவாசனைகளினாற். |
| 105 | 20 | ஆசனஜெயத்துக்குப்பலம | ஆசன ஜெயத்துக்குப்பலம். |
| 107 | 26 | விஸ்தாரம ... | விஸ்தாரமா. |
| 116 | 16 | கிடைக்குமே ... | கிடைக்குமோ. |
| 117 | 15 | நிரோதரூபயான ... | நிரோதரூபமான. |
| 121 | 16 | கருடபகவான் ... | கெருடபகவான். |
| 122 | 8 | சக்த்தி ... | சக்தி |
| 123 | 7 | அத்தியயம் ... | அத்தியயனம். |
| 124 | 18 | கலை ... | களை. |
| 124 | 19 | கிராமமாக ... | கிரமமாக. |
| 149 | 3 | பேோதிலும் ... | போதிலும். |
| | | வடமொழி தென்மொழி பாடபேதங்களாற் சொற் பேதங்கள் 9-வது பக்கம். | வடமொழி தென்மொழி பாடபேதங்களாற் சொற் பேதங்கள் 15-வது பக்கம். |

S. M rthy & Co., Printers, Madras.